ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருநாராயணபுரக்கலம்பகம்

## மூலமும், உரையும்.

---

இந்நூலாசிரியர்.


## கட்டளை-வரதராஜபிள்ளையவர்கள்

(ASSISTANT EXAMINER, P. W. ACCOUNTS, MYSORE.)



இஃது.

சாயப்பேட்டை

ஸ்ரீநிவாசமுதலியாரவர்களது

சுஜநரஞ்சநிமுத்திராக்ஷரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

---

விக்ருதி௵ பங்குனி௴.


---



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## முகவுரை.

ஸ்ரீய:பதியாய், ஸ்ரீவைகுண்ட நிகேதநனாய், நித்யமுக்தாநுபாவ்யனாய், நிரதிசயாநந்தயுக்தனாய், அவாப்தசமஸ்தகாமனாய், ஸ்ருஷ்டிகாலத்து ஸ்தூலசிதசித்விசிஷ்டனாய் ப்ரளயகாலத்து ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டனாய்க் கொண்டுநிற்கின்ற காரணபூதனாய் விளங்கும் ஸர்வேச்வரனானவன், பரிச்சிந்நஜ்ஞாநாதி குணகரானசேதநர் தமது யாதாத்ம்யஜ்ஞாநத்தினின்றும் விமுகராய், நிர்த்தோஷ ப்ரமாணங்களாலும் சம்யஜ்ஞந்யாயங்களாலும் பாஹ்யகுத்ருஷ்டி நிரஸந பூர்வகமாக பகவத்பரத்வத்தை யபிமுகீகரியாதநர்த்தப்படும்படியைக்கண்டு, பரவ்யூஹவிபவாந்தர்யாமித்வங்கள் தேசகாலகரண விப்ரக்ருஷ்டத்வங்களால் ஆச்ரயணீயங்களாகமாட்டாமையைத் திருவுள்ளம்பற்றி, அர்ச்சக பராதீநனாய், ஸர்வாபராதஸஹனாய், ஸர்வாபேக்ஷிதப்ரதனாய்வர்த்திக்க அர்ச்சாவதாரம் ஸந்நிக்ருஷ்டமும் ஸௌலப்யமுமாமென க்ருபைபண்ணி உகந்தருளினநிலங்கள் இந்தலீலா விபூதியிலேயுள்ள நூற்றேழு திவ்யதேசங்களன்றிக்கே அந்த நித்யவிபூதியிலுள்ள நூற்றெட்டாந் திவ்யதேசமாகிய பரமபதமும் “அங்குவைத் திங்குபிறந்து” என்றபடி ஈண்டிழிந்துவந்து அபரிச்சிந்நஜ்ஞாநாதிகுணகரான நித்யமுக்தரைப் போலவே பத்தரும் அநுபவிக்கநின்றதென்னுமாப்போலே, இந்தபாரதகண்டத்தில் மஹாராஜாதிராஜர் ஸ்ரீசாமராஜேந்த்ரவுடையார் அவர்களது பாஹுபாலிதமான இம் மைசூர் மலர்தலைநாட்டின்கண் திருக்காவேரியாற்றின் ஆதியிடைக்குறை யரங்கமாதலின் ஆதிரங்கமென்னப்பெற்ற ஸ்ரீரங்கபட்டணத்திற்கு நேர்வடக்கே யோஜநத்வய தூரத்தில் மேலைக்கோட்டையென்னுந் திருமலைமேல் விளங்குவது திருநாராயணபுரம் என்னுந் திவ்யதேசம்.

இத்திருமலைக்கு ஆதியில் திருநாராயணகிரியென்றுபெயராய், த்வாபரயுகாந்த்யத்தில் ஸ்ரீபலராமர் முதலாகிய யாதவசிரேஷ்டர்களா லாராதிக்கப்பெற்றமையின் யாதவகிரி யதுகிரியென்றும் இக்கலியுகத்தில் ஸ்ரீமத் ராமாநுஜயதீந்த்ரரால் ஜீர்ணோத்தாரணஞ்செய்யப்பெற்ற கர்லங்தொட்டு யதிகிரி எதிகிரியென்றும் திருநாமமாயிற்று. தஞ்சாவூரைத் தஞ்சையென்னும்வழக்கியலையொட்டி மேலைக்கோட்டையை மேலையென வழங்கலாம். இது மரூஉமொழி. இதனை வடநூலார் நாமைகதேச நாமக்ரஹணமென்பர்.

இத்திவ்யக்ஷேத்ரம் ஸ்ரீமந்நாராயணனுக்கு ஹ்ருதயஸ்தாநமென்று அவ் வெம்பெருமானாலேயே தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் ஸ்ரீவடபதரிகாச் ரமத்தில் உபதேசிக்கப்பெற்றது. இத்திருமலை திருவநந்தாழ்வானதவதா ரம். இதன்மேல்விளங்குந் திவ்யவிமானத்திற்கு ஆநந்தமயவிமாநம் என்று பெயர் இவ்விமானம் பூர்வம் ப்ராஹ்மாவின்றவத்திற்கிரங்கிய ஸ்ரீமந்நாரா யணரா லாரோகணஞ்செய்தருளப்பெற்றுத் திருநாட்டினின்றுமிழிந்துவர, அந்தப்ரஹ்மா சத்யலோகத்தில் வைத்தாராதித்துப் பின்பு ஸநத்குமாரருக் குக்கொடுக்க, அவரால் இத்திருநாராயணகிரியில் திருக்கல்யாணிக்கருகில் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது. ப்ரஹ்மலோகத்தில் ஐந்துலக்ஷயோஜனை யளவாயிருக்க இது, இங்கு ஐந்தானுயரமாயிற்கப், பெருமாளும் "சுருக் குவாரைப்பிறிமிய சுருங்கினாய்" என்று ஆழ்வார்திருமழிசைப்பிரான் அருளிச்செய்தவாறு, தமது திவ்யாயுத திவ்யபூஷணங்களுடன் சுருங்கிய விமானத்திற்கேற்பச் சுருங்கிநின்றருளினார். இத்திருமூலமங்கள விக்ரஹத் திற்குத் திருநாராயணப்பெருமாள் எனவும் உத்ஸவமூர்த்திக்கு சம்பத்குமா ரர் அல்லது செல்வப்பிள்ளை என்றும் தேவிமார்க்கு ஸ்ரீதேவி பூதேவிகள் என்றும் திருநாமம். இத்திருமலையில் அநந்தகருட விஷ்வக்சேநாதி நித்ய முக்த முமுக்ஷுக்கள் மநுஜதிர்யக்ஸ்தாவரங்களாகவர்த்திக்கின்றனர்- ஆத லால், இதில் வாழ் மக்களைக் கலிபுருடனால யாதோரிடருமணுகாது. அவர் களைச்சாமனில் யமபடாரர் தூரத்தேநின்று தெண்டன்சமர்ப்பித்துப் பின் செல்லுவார்கள். இசில கல்யாணி, வைதண்டகங்கை, நாராயணஹ்ருதம், மைத்ரேயதண்டப் வேதபுஷ்கரணி, தர்ப்பதீர்த்தம், கமலதீர்த்தம், பலாச தீர்த்தம், யாதவி ஆகிய அநேக புண்யதீர்த்தங்களுண்டு. இத்திருமலையி லுச்சியாகிய நரசிம்ஹகிரியில் ஸ்ரீப்ரஹ்லாதாழ்வா னெழுந்தருளப்பண் ணிய அழகியசிங்கரது திருக்கோயிலிலங்குகின்றது. இந்த கிரிக்குக்கீழே திருக்கல்யாணி தீர்த்தக்கரையில ஞாநப்பிரானாகிய வராகப் பெருமாள் எழுந்தருளியிருக்கின்றனர். இந்தப்ரதேசத்திற்கு வராஹக்ஷேத்ரம் என் றும் வைதண்ட வர்த்தநக்ஷேத்ரம் என்றும் திருநாமம். பெரியதிருவடி சுவேதத்வீபினின்றுந் திருமண்கொணர்ந்து இங்கு ப்ரதிஷ்டைபண்ண அது எம்பெருமான் றிருவருளால் தினேதினே பெருகிவருகின்றது.

ஒருக்கால், இத்திருமலையில் நிவாசராயிருந்தசுசரிதன் என்னும் ப்ராஹ் மணோத்தமர் தேகயாத்ரைநிமித்தம் வெளிசஞ்சாரஞ் செய்யச்சென்றிருக்கச் சே, இவராசரிததுவந்த கட்டளைப்படித் திருமாளிகையிலிருந்தநாராயணன் என்னும் இவரது சிறுமகவு தன்மாதாவாகிய சுசீலையைக்கேட்டு ப்ரசாதம் வாங்கிக்கொண்டுபோய்ப் பெருமானை யாராதித்து அமுதுசெய்தருளும் படி ப்ரார்த்திக்க, அந்தமில்புகழ்நங்களையருந்துந் தன்மையனை திருநாராய ணப்பெருமாள் அக்குழந்தையின்வேண்டுதலுக்கிரங்கிப் பிராட்டியுடனிருந் தாஸ்வீகரித்தருளினன். இங்கு எம்பெருமானது வாத்ஸல்ய சௌலப்யாத் யசங்க்யேய நித்ய கல்யாணகுண விசேஷங்களை யுணராத மாதா, ப்ரசாதத்

தைப் பூசைபுசிக்கும்படி விட்டிருப்பனெனக் கோபித்து மாநாகரமெடுத் தருந்தும்படிவிடுக்க, அங்ஙனமே அப்பிள்ளை யேழாவர்த்திசெல்லப், பெருங்கருணையே யுருவமாகிய பிராட்டிவீடுகள்தோறு மறைந்துநின்று நவரதங்களையே பிக்ஷையிட்டு எட்டாந்தரமமுதளித்தனர்.

ஆகிய வித்யாதி வைபவங்கள் இந்தஸ்தலபுராணமாகிய யாதவகிரி மகத்வத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன. இப்புராணத்தைத் தத்காலம் இங்கு வாசம்பண்ணும் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமாந் சப்தம் வங்கீபுரம் ஸ்ரீநிவாசாசார்யரவர்கள் வடமொழியினின்றும் வசநமாகச் செந்தமிழ்நடையி லெழுதி ப்ரசுரிக்கவிருக்கின்றனர், அதில் இங்கு ஸூசித்தவிஷயங்களும் மற்ற மகத்வங்களும் விஸ்தரேணக்காணலாம்.

எங்கள் ராமாநுஜ யதீந்த்ரர் இந்நாட்டிற்செழுந்தருளி இந்த திவ்யதேசத்திற்குத் **திருநாராயணபுரம்** எனத் திருநாமஞ் சாத்தியருளியவரலாறடங்கிய குருபரம்பராப்ரபாவபாகம் இது:—

(பின்பு உடையவர்) "மிதுலாபுரிஸாளக்ராமத்துக் கெழுந்தருளி, அங்கிருக்கிற இதரமதஸ்தர்களை முதலியாண்டானுடைய ஸ்ரீபாததீர்த்தவைபவத்தால் திருத்தி சிஷ்யர்களாக்கிக்கொண்டு, வடுகநம்பியிடத்தில் விசேஷகடாக்ஷஞ்செய்து, சிங்கர் கோயிலில் சிலநாளிருந்து * * * தொண்டனூருக்கெழுந்தருளி, அத்தேயத்துக்கதிபதியான தேவராஜன்மகளைப் பிடித்திருந்தபிசாசைத், தொண்டனூர்நம்பிமுகமாக அரண்மனைக்கெழுந்தருளி, ஸ்ரீபாததீர்த்தத்தை அப்பெண்ணின்றலையிற்றெளித்து நிவர்த்திசெய்வித்துத் தேவராஜனை சிஷ்யனாக்கிக்கொண்டு, அவிடத்தெதிரிட்டு வாதஞ்செய்ய வந்த துர்க்குணத்தையுடைய சமணர்களைத்திரைமறைவிலிருந்து திருவநந்தாழ்வானாக ஆயிரம்பணாமுகங்களாலும் உத்தரஞ்சொல்லிஜயித்து, அவர்களிலநுகூலித்த சிலரைத் தமக்குசிஷ்யர்களாக்கிக்கொண்டு தேவராஜன் மிகவுமுபசரிக்க வெழுந்தருளியிருந்து, தொண்டனூர் நம்பியபிமானித்திருக்கிற எம்பெருமானுக்கு நம்பிதம்பிரானென்று திருநாமஞ்சாத்தித் திரும்பவும் சிங்கர் கோயிலுக்குவந்து ஸ்ரீபாஷ்யகாலக்ஷேபஞ் செய்வித்துக் கொண்டிருக்கையில் ஒருநாள், திருமண்காப்பு செலவழிந்து போனதறிந்து சிந்தித்துக்கொண்டு கண்வளர, ஸ்வப்நத்தில் திருநாராயணப்பெருமா னெழுந்தருளி யதுகிரியில் உம்முடைய வரவு பார்த்துக்கொண்டிருக்கிறோம், உமக்கிஷ்டமான திருமண்காப் பங்குள்ளது கடுகவாருமென்றருளிச்செய்ய, ஸ்ரீபாஷ்யகாரர் விழித்துக் கொண்டு தேவராஜனுகிய விஷ்ணுவர்த்தநராயனைக்கொண்டு அருகிலுள்ளகாடுவெட்டுவித்து, வெகுதான்யவர்ஷம் தைமாசத்தில் யதுகிரியேறி ஸ்வப்நத்திற் கண்டபடி திருத்துழாய்மரத்தின்கீழ்ப் புற்றிலிருக்கின்ற திருநாராயணப்பெருமாளை மேற்சொன்ன மாஸம் சுக்லபக்ஷசதுர்த்தசி வியாழக்கிழமைகூடின புனர்பூசநக்ஷத்திரத்தில் ஜீர்ணோத்தாரணம்பண்ணிப் பாலினால்திருமஞ்சனஞ்செய்தருளித் திருக்கைகளால்மூன்று நாள் திருவாராதநஞ்செய்து, **ஒருநாயகம்** என்கிற திருவாய்மொழியையோதிச் சாத்தித், திருக்கல்யாணி வடமேற்குமூலையில் த்ரிதண்டத்தினாற்கீறித் திருமண்குழையைக்கண்டுகொண்டு மகிழ்ந்தருளி, யதுகிரியில் கோயில்கட்டுவித்து, ஊரேற்படுத்தித் திருநாராயணபெருமாளுக்குப் பாஞ்சராத்ரவிதியின்படி ஸம்ப்ரோக்ஷணஞ்செய்வித்து, உத்ஸவரில்லையென்று சிந்தித்திருக்கத் திருநாராயணன் அவரது ஸ்வப்நத்தி லெழுந்த

ருளி உத்ஸவர் ராமப்ரியர் டில்லியிலிருக்கின்றார் அங்குசென்று எழுந்தருளப்பண்ணி க்கொண்டுவாருமென்றுநியமிக்க, உடையவரும் டில்லிக்கெழுந்தருள, டில்லிராஜன்ம கள்படுக்கைவீட்டிலின்று ராமப்ரியரும் கிண்கிணிசதங்கையொலிக்க எல்லாருங்கா ணும்படிவந்து உடையவர் மடியிலிருக்க, உடையவருமாநந்தத்துடன் என்செல்வப் பிள்ளையோவென் றணைத்துக் கொண்டருளினார். அதனால் ராமப்ரியர்க்குச் செல்வப் பிள்ளையென்று திருநாமமுண்டாயிற்று. பின்பு ஸ்ரீபாஷ்யகாரர் செல்வப்பிள்ளையை யதுகிரியிலெழுந்தருளப்பண்ணி, அவ்விடத்திற்றமது பேராலோர்மடங்கட்டுவித்து, ஐம்பத்திருவருக்கூழியங்கற்பித்து, அவ்வூருக்குத் திருநாராயணபுரம் என்று திருநா மஞ்சாத்தியருளினார்."

இச்செல்வப்பிள்ளைக்கு ராமப்ரியர் என்று திருநாமம் ஏனிருந்தது? என்பதும், இம்மூர்த்தியைப் பூர்வத்தில் யார் எழுந்தருளப்பண்ணினார்? என்பதும் பின்வருமவற்றாற்காண்க.

த்ரேதாயுகத்திற் சக்ரவர்த்தித்திருமகனார் தர்ம ஸம்ஸ்தாபநார்த்தமாக சீதாபிராட்டி இளையபெருமாள் இவர்கள்பின்பற்றக் கானகத்தில் ஸஞ்சரித் துக்கொண்டிருந்தபோது, இத்திருமலையில் திருநாராயணப்பெருமாளெழுந் தருளியிருப்பதை இளையபெருமாளா லறிக்கை செய்யப்பட்டவராய், இவ் வெம்பெருமானைச் சிலகாலம் பூசித்து, ராவணவதாநந்தரம் திருவயோத் யைக்குத் திரும்புங்கால் ஸ்ரீமாந் விபீஷ்ணாழ்வானுக்கு ஸ்ரீரங்கநாதனைக் கொடுத்தருளியபின், ப்ரஹ்மா தானாராதித்துக்கொண்டிருந்த திருநாரா யணாம்சமாகிய ஒருமூர்த்தியைக் கொடுக்கப்பெற்று ஆராதித்துவந்தனராத லின் அம்மூர்த்திக்கு ராமப்ரியர் என்று திருநாமமாயிற்று. பின்பு இவ் விராமப்ரியர், சக்ரவர்த்தித்திருமகனாரது பௌத்ரியாகிய கநகமாலினிக்கு சீதநமாகக்கொடுக்கப்பட்டு, யதுவம்சத்திற் கெழுந்தருள, த்வாபரயுகத்தில் இவ் யதுவம்சத்திற்றிருவவதரித்த கண்ணனால், இத்திருவுருவம் திருநாரா யணனையொத்திலங்குவதை வியந்து, யதுகிரிக் கெழுந்தருளப் பண்ணப் பட்டது. இவையும் ஸ்தலபுராணவரலாறு.

லோகப்ரசித்தமான மேலைக்கோட்டை வைரமுடியுத்ஸவம், பங்குனி பூசத்தில் நடந்தேறி வருகின்றது. இத்திருமுடியைப் பூர்வத்தில் பெரிய திருவடி மேலுலகத்தினின்றுகொணர்ந்து இந்த லீலாவிபூதியிலுள்ள ஒவ் வொரு திவ்யதேசத்துக்குஞ்சென்று அவ்வத் திவ்யமங்களவிக்ரஹங்களுக் குச்சூட்டிச் சேவித்துவருங்கால் பொருந்தாது கடைசியாக இச்செல்வப் பிள்ளை திருமுடிக்குப்பொருந்தக்கண்டு சாத்திச் சேவித்தனரென்று சொல் லப்படுகின்றது. இவ்வுத்ஸவகாலத்தில் மூன்றுநாள் எங்கள் தரிசனஸ் தாபகரான ஸ்ரீமத்ராமாநுஜ யதீந்த்ரரது நேமனப்படி பஞ்சமராகிய திருக்கு லத்தாரது ஆராதநம் நடந்தேறிவருகின்றது. இக்கட்டளை செல்வப்பிள்ளை யை டில்லியிலிருந் தெழுந்தருளப்பண்ணிக்கொண்டு வருங்கால் அந்நகரத் தாசனால் இடையில்நேரிட்ட தடையை நிவர்த்திசெய்ய இத்திருக்குலத் தார்செய்த உதவிக்குக் கைம்மாறுபோலும்.

இத்தகைய ப்ரபாவம் நிறைந்துள்ள திருநாரீயணபுரத் தெம்பெருமானது திவ்ய குணானுபவசாகரத்தில் கலம்பகம் * என்னும் உயர்ந்த ப்ரபந்த மூகேந அவகாஹித்தாட இலக்கண விலக்கியங்களிற் கொஞ்சமேனும் பயிற்சியில்லாத யாம் ப்ரவேசித்தது "ஓசைபெற்றுயர் பாற்கடலுற்றொரு பூசைமுற்றவு நக்குபு புக்கதை" ஒக்குமென்பதி லொருசிறிதேனு மைய முண்டோ? ஆயினும் "அறையுமாடரங்கும் மடப்பிள்ளைகள், தறையிற் கீறிடிற் றச்சருங்காய்வரோ?" காயார், அதுபோல அற்பஞானமுமில்லாத வெம் புன்கவிகளை "முறையினாலுணர்ந்தாரு முனிவரோ?" முனியார்.

இக்கலம்பகம், சாலிவாஹன சகம் ௧௮௧௨ல் நிகழும் விக்ருதிஞு வைகாசிமீ ௨௨ ஆதிவாரம் பகலில் இந்நூற்காப்பி னிறுதிக்கவி யிரண்டினுட் குறித்த திருக்கோயிலின்கண் சக்ரவர்த்தித்திருமகனார் மேலைக்கோட்டை செல்வப்பிள்ளையினது திருக்கோலங்கொண்டு சேவைசாதித்தெழுந்தருளி யிருக்க, எமது பால்ய நண்பர் கனம்பொருந்திய பல்லாரி சபாபதிமுதலி யாரவர்கள் அக்ரகண்யராயமர்ந்திருக்கத் திருவோலக்கங்கொண்ட பரமபாகவத கோஷ்டியில், இந்த சந்நிதி கைங்கர்யத்தி லீடுபட்ட ஸ்ரீமாந் பிரம்மபுரம் ஜநார்த்தனபிள்ளையவர்கள் ததீயவந்தநோபசாரம் புரிந்துநிற்கச், செருக்குவார்பாள்யம் பீரால குருஸ்வாமிநாயுடவர்கள் முதலிய சங்கீதவிற்பனர் பண்ணிசை பிறழாதோதவும், திரிசிரபுரம் அப்புபிள்ளையவர்களாங்காங்கு ப்ரசிங்கிக்கவும் தீப தூப நைவேத்ய சந்தந குஸுமதாம்பூலாத் யுபகரணங்களோடு எம்பெருமான் திருவடிகளிற் சமர்ப்பிக்கப்பட்டது.

பெங்களூர் 　　　　　　　　☞ கட்டளை, வரதராஜபிள்ளை.

---

* கலம்பகம், ௯௬-ப்ரபந்தங்களிலொன்று. இது கொச்சகக்கலிப்பாவும், வெண்பாவும், கலித்துறையும் முதற்கவியுறுப்பாக முற்கூறிப் புயவகுப்பு, மதங்கம், அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல், என்னு மிப்பதினெட்டுறுப்புகளுமியைய மடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, வஞ்சிவிருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறை என்னுமிவற்றால் இடையே வெண்பா, கலித்துறை விரவி அந்தாதித்தொடையால் முற்றுறப்பாடுவது.



## பாயிரம்.

கட்டளைக் கலித்துறை.

கட்டளைமட்டவிழ் காவோங்கெதிகிரிக் கட்கயிற்றிற்
கட்டளைகுக்கியின் வாழ்திருநாரணர் கான்மலர்மேற்
கட்டளைவாணன் வரதராஜப்பேர்க் கவிஞர்பிரான்
கட்டளையென்னக் கலம்பகமொன்று கழறினனே.

இஃது

ஸ்ரீகம்பராமாயண பாலகாண்டவுரையாசிரியர்

காஞ்சிபுரம் ப்ரபந்நவித்வான்

ஸ்ரீமாந்

ராமசாமிநாயுடு அவர்களால்

இயற்றப்பட்டது.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருநாராயணபுரக் கலம்பகம்.

## காப்பு.

### இன்னிசை வெண்பா.

### ஆழ்வார்.

நலம்பகர்வே தன்றுதிசெய் நாரா யணன்மேற்
கலம்பகப்ர பந்தக் கவிகள் நிரம்பவளைக்
கைத்தலமா றன்பதமே காதலித் தடைந்தகுரு
கைத்தலமா றன்பதமே காப்பு.

(இதன்பொருள்.) நலம்பகர் வேதன் றுதிசெய் நாராயணன்மேல் - (சேதநர் நின்ற நின்ற அளவுக்கீடாக ஸ்வரூபாநு குணமான) நலத்தைப் புகலும் வேதங்களை ஓதியுணர்ந்த ப்ராஹ்மணரால் ஆராதிக்கப்பெற்ற திருநாராயணப்பெருமாள்பேரில், கலம்பகப்ரபந்தக் கவிகள் நிரம்ப - (அடியேன் சொல்லப் புகுந்த) கலம்பகமென்னும் இந்தப்ரபந்தத்தின் கவிகளெல்லாம் நன்கு சம்பூர்த்தியாம் பொருட்டு, வளைக் கைத்தல மால்தன் பதமே காதலித்தடைந்த - திருவாழியையும் திருச்சங்கையும் திருக்கரங்களிலேந்திய திருமாலின் பரமபதத்தையே விரும்பி யடைந்த, குருகைத்தல மாறன் பதமே காப்பு - திருக்குருகை என்னும் திவ்யதேசத்தில் ஸ்ரீஸேநேசாம்ச ஸம்பூதராய்த் திருவவதரித்தருளிய ஆழ்வாரது திருவடிகள் ரக்ஷகமாகா நிற்கும் (என்றவாறு.)

"உயர்வறவுயர் நலமுடையவன்" "மயர்வற மதிநலமருளினன்." என்ற திவ்ய ஸூக்தியில் ஆழ்வார் திருவுள்ளம்பற்றிய வாங்மநஸ்ஸுக்களாற் பரிச்சேதிக்கவொண்ணாதபடி யுயராநிற்கும் பகவதாநந்த குணங்களாகிய நலங்களையும், சகலசம்சாரசேதநர்களுக்கும் தேஹாத்மாபிமாந தேவதாந்தர சேஷ விபரீதஜ்ஞாநங்களை வாசனை

போடேபோக்கும் ஜ்ஞானபக்திகளாகிய நலங்களையும் விளக்குவனவாதலின், வேதங்கள் நலம்பகர்வனவாயின. இத்திறத்த வேதங்களை ப்ரஹ்மா தமது நான்கு திருமுகங்களின் வாயிலாக வெளியிட்டவராதலின் அவரை "நலம்பகர்வேதன்" என்றும். "வேதன்றுதிசெய் நாராயணன்" என்றது ப்ரஹ்மாவின் தவத்திற்கிரங்கி ஸ்ரீமந்நாராயணன் ஆநந்தமயவிமாநத் தெழுந்தருளித் திருநாட்டினின்று மிழிந்துவரச் சேவித்து அப்பரமபுருஷனைப் பூர்வத்தில் சத்யலோகத்தில்வைத் தாராதித்துத் துதித்த தாய் ஸ்தலபுராணங் கூறுவதுதோன்றற்கு. நலம் என்பது தொகுதியொருமை. கலம்பகம், ௯௬ - ப்ரபந்தங்களி லொன்றானதுபற்றி "கலம்பகப்ரபந்தம்" என்றது. இப்பிரபந்தத்துட் காட்டப்படவேண்டிய பல்வகைப்பாக்களும் தத்தமதிலக்கணத்திற் பிறழாது நன்கு முடிந்து நின்றுநிலவுதல் வேண்டி "கலம்பகப்ரபந்தக்கவிதை நிரம்ப மாறன்பதம்காப்பு" என வுரைத்தாம். வளை என்பது இரட்டுறமொழிதலாய் திருவாழி திருச்சங்குகளை யுணர்த்துகின்றது. பெருமாளுடைய திருவாழி திருச்சங்கு முறையே சுதர்ஸனம் பாஞ்சஜந்யம் என்னப்படும். முன்னேகாரம்-பிரிநிலை. பின்னது-அசை. பதம் - எழுவாய். காப்பு - பயனிலை. (௧)

கட்டளைக்கலித்துறை.

திருவடி.

௨. பாரகத்தோர்புரி யாயுயர் காசிப் பதியதனின்
மாரகத்தோர்வலக் காதி னுமேசன் மகிழ்ந்துரைசெய்
தாரகத்தோனடித் தொண்டின னாகிஸஞ் சீவிமலை
வேரகத்தோ டெடுத்தா னடித்துணை மேவுதுமே.

(இ-ள்.) பாரகத்து ஓர்புரியாய் - இப்பூவுலகின்கண்ணுள்ள சப்தபுரியில் ஒருபுரியாகி, உயர் காசிப்பதியதனில் - சிறந்த காசிபட்டணத்தில், மாரகத்தோர்வலக்காதின் - சரமதசையிலுள்ளாரது வலச்செவியில், உமேசன் மகிழ்ந்துரைசெய் தாரகத்தோன் - உமாபதியாகிய சிவபெருமான் உவந்து உபதேசிக்கின்ற தாரகமந்த்ரத்துக்கு வாச்யனாகிய சக்ரவர்த்தித்திருமகனது, அடித்தொண்டினனாகி - திருவடித்தொழும்பனாகி, ஸஞ்சீவிமலை வேரகத்தோடு எடுத்தான் - ஸஞ்சீவிபர்வதத்தை வேரோடுங் கெல்லி யெடுத்துக் கொண்டுவந்தருளிய ஆஞ்சநேயரது, அடித்துணை மேவுதும் - உபயபாதங்களை (யாம்) ஆச்ரயிப்போம் (எ-று.)

சப்த புரியில் ஒன்றானதுமன்றிச் சரமதசையில் சகல ஆத்மாக்களும் தாரகநாமோபதேசம்பெற்றுப் பரமபதமடைதற்கேதுவான ஸ்தலமாதலால் "உயர்காசிப்பதி" என்றும். மாரகத்தார், தாரகத்தான் என்பவைகளின் இற்றயல் ஆ, ஓ ஆனது செய்யுள்வழக்கு. மேவுதும் - தன்மைப்பன்மை வினைமுற்று. இற்றேகாரம் அசை. (யாம்) எழுவாய். மேவுதும் - பயனிலை. அடித்துணை - செயப்படுபொருள். (௨)

பெரியதிருவடி.

௩. விண்டலங் காந்தி விரிவைர மாமுடி மின்னுமேதி
விண்டலங் காசர் முடிக்கேய்ந் திலகல் வியந்துபணி

மண்டலங் காமியம் பெற்றுய்ய வைத்து மகிழுரக
குண்டலங் காதணி வைநதே யன்புகழ் கூறுதுமே.

(இ-ள்.) விண்டலம் காந்தி விரிவைர மாமுடி - மேலுலகமானது பிரகாசத்தைப்பெற்று ப்ரதிபலிக்கும்படி காந்தியைக்கொடுத்திருந்த பெருமை மிக்க வைரமுடியானது, மின்னும் எதிவிண்டு அலங்காரர் முடிக்கு எய்ந்து இலகல் - (இந்த லீலாவிபூதியிலுள்ள ஒவ்வொரு திவ்யதேசத்துக்குஞ் சென்று அவ்வத் திவ்யமங்கள விக்ரகங்களுக்குச் சூட்டிச் சேவித்துவருங் கால் பொருந்தாது கடைசியாக) பிரகாசியாநின்ற எதிகிரியை யலங்கரித்து நின்ற எங்கள் சம்பத்குமாரராகிய செல்வப்பிள்ளையினது திருமுடிக்குச் சாத்திச் சேவிக்குங்கால் பொருந்தி அழகுபெறுதலை, வியந்து - கண்டு வியப்புற்றவராய், பணிமண்டலம் காமியம்பெற்று உய்யவைத்து மகிழ் - பிற்காலத்தில் (வைரமுடி யுச்சவத்தைச்) சேவிக்கும் இப்பூவுலகத்தார் இஷ்டகாமியங்களைப் பெற்றுய்யு மாறுவைத்து ஆனந்த மடைந்த, உரக குண்டலம் காதணி வைநதேயன் புகழ் கூறுதும் - சர்ப்பகுண்டலத்தைக் காதிலணிந்திராநின்ற பெரிய திருவடிநயினார் பிரபாவத்தை (யாம்) புகழ்ந்துரைப்போம் (எ-று.)

உரககுண்டலம் - வடமொழிப்புணர்ச்சி. வைநதேயன் - விநதைபுத்ரன். (யாம்) எழுவாய். கூறுதும் - பயனிலை. புகழ் - செயப்படுபொருள். (௬)

பஞ்சாயுதம்.

௭. கொண்டல் வயின்வயின் முண்டகம் பூத்தெழில் கொண்டிடக்
கொண்ட நிறத்திரு நாரா யணர்கரங் கொண்டநெடுந் [தண்டமுங்
கட்கமுந் தாங்கொளி வட்டமுஞ் சங்கமுங்கோ
தண்டமுஞ் சூழ்ந்துநின் றெந்தமைக் காக்குறுஞ் சந்ததமே.

(இ-ள்) கொண்டல் வயின்வயின் முண்டகம் பூத்து - மேகமானது ஆங்காங்கு தாமரை மலரப்பெற்று, எழில் கொண்டிடின் நேர் கொண்ட - அழகு வாய்ந்திருக்குமேல் அதை நிகராகக்கொண்ட, நிறத் திருநாராயணர் - திவ்யரூபந்திகழும் திருநாராயணரது, கரம்கொண்ட - திருக்கைகளிற் றாங்கிய, நெடுந்தண்டமும் - நீண்ட ஸ்ரீகௌமோதகீ என்னுங் கதையும், கட்கமும் - ஸ்ரீநாந்தகம் என்னும் வாளும், தாங்கு ஒளி வட்டமும் - (தொண்டர்களை ரக்ஷிக்கும் கீர்த்திப்) பிரகாசம் பொருந்திய திருவாழியும், சங்கமும் - திருச்சங்கும், கோதண்டமும் - ஸ்ரீசார்ங்கம் என்னும் வில்லும், சந்ததம் சூழ்ந்துநின்று எம் தமைக் காக்குறும் - எப்போதும் எம்மைச் சூழ்ந்துநின்று பாதுகாக்கும் (எ-று.)

காக்குறும் என்பது காக்கவுறும் என்பதன் விகாரம். தம் - சாரியை. தண்டம், கட்கம், வட்டம், சங்கம், கோதண்டம் - எழுவாய். காக்குறும் - பயனிலை. எம்மை - செயப்படுபொருள். (௭)

## ஆழ்வார்கள்.

ரு. திருமாறன் பொய்கையன் பூதத்தன் பேயன் றிருமழிசைப்
பெருமா னடிய ரடிபாணன் புத்தூர்ப் பெரியன்மங்கை
வருமான் மதுர கவிகோதை சேர மகிபதிபன்
னிருமா தவரிவர் பாதாம் புயங்க ளிறைஞ்சுதுமே.

(இ-ள்.) திருமாறன் - சுருகூரிலே திருவுடையரான நம்மாழ்வாரும், பொய்கையன் - பொய்கையாழ்வாரும், பூதத்தன் - பூதத்தாழ்வாரும், பேயன் - பேயாழ்வாரும், திருமழிசைப்பெருமான் - திருமழிசையாழ்வாரும், அடியரடி - தொண்டரடிப்பொடி யாழ்வாரும், பாணன் - திருப்பாணாழ்வாரும், புத்தூர்ப்பெரியன் - ஸ்ரீவில்லிபுத்தூரிலவதரித்த பெரியாழ்வாரும், மங்கை வரும் மான் - திருமங்கையாழ்வாரும், மதுரகவி - மதுரகவியாழ்வாரும், கோதை - சூடிக்கொடுத்த நாச்சியாரும், சேரமகிபதி - குலசேகராழ்வாரும், பன்னிருமாதவர் இவர் - ஆகிய இப்பன்னிரண்டாழ்வார்களுடைய, பாதாம் புயங்கள் இறைஞ்சுதும் - திருவடித்தாமரைகளை (யாம்) பணிவோம்(எ-று.)

மஹான் என்னும் வடமொழி மான் எனத் திரிந்தது. (யாம்) எழுவாய். இறைஞ்சுதும் - பயனிலை. பாதாம்புயங்கள் - செயப்படுபொருள். (ரு)

## உடையவர்.

சு. கைத்தலத் தாழிசங் குற்றன னெம்பரன் காண்மினென்றும்
மெய்த்தல நாரா யணபுரந் தோன்ற விளக்கியுமன்
பொய்த்தலப் புன்மற வாதியர்ச் செற்றவன் பொன்விளையும்
செய்த்தலத் தண்பெரும் பூதூர் முனியைச்சிந் திக்குதுமே.

(இ-ள்.) கைத்தலத்து ஆழி சங்கு உற்றனன் எம்பரன் காண்மின் என்றும் - திருக்கரங்களில் திருவாழி திருச்சங்கை யேற்றனன் (ஆதலால் இம்மூர்த்தி நாங்கள் வழிபடுங் கல்யாணகுண பூரணன்றான்) பாருங்கள் என்று (திருமலையினு)ம், மெய்த்தல நாராயணபுரம் தோன்ற விளக்கியும் - நிலைபெற்ற ஸ்தலங்களிலொன்றாகிய திருநாராயணபுரத்தை ஜீர்ணோத்தாரணஞ் செய்து (மேலக்கோட்டையினு)ம், மன்பொய்த்தலப் புன் மறவாதியர்ச் செற்றவன் - அசங்கத மிகுதியுள்ள புறச்சமயங்களைத்தழுவியவர்களோடு வாதித்து ஜெயப்ரதாபமடைந்தவராகிய, பொன்விளையும் செய்த்தலத் தண்பெரும்பூதூர்முனியை - பொன்விளையும் வயல்கள்சூழ்ந்த தண்ணிய ஸ்ரீபெரும்பூதூரி லவதரித்த முனிவராகிய எதிராஜனை, சிந்திக்குதும் - (யாம்) தியானிப்போம் (எ-று.)

ஆழிசங்குற்றனன் என்பதில் இரண்டனுருபும் எண்ணும்மையும் தொக்கன. மன் - மிகுதிப்பொருளதோரிடைச்சொல். வாதியர்ச்செற்றவன் - இரண்டாம் வேற்

றுமைத்தொகையின்கண் வலி விகாரத்தால் மிக்கது. (யாம்) எழுவாய். சிந்திக்குகம் - பயனிலை. பூதூர்முநி - செயப்படுபொருள். (சு)

மணவாளமாமுநிகள்.

எ. சிரவர நான்குடைச் செம்மல்கண் ணாயிரச் செல்வனனற்
புரவர னேத்துறு நாரா யணபுரப் புங்கவன்மேல்
திரவர ணார்மதிக் காம்வண்ணந் செந்தமிழ் செப்பிடற்கு
வரவர மாமுநி தாள்களெஞ் ஞான்றும் வழுத்துதுமே.

(இ-ள்.) சிரவர நான்குடைச் செம்மல் - மேன்மையாகிய நான்கு சிரங்களையுடைய பிரமனும், கண்ணாயிரச் செல்வன் - ஆயிரங் கண்ணனாகிய தேவேந்திரனும், அனல்புர அரன் - தழல்நிறத் திருமேனியையுடைய சிவபெருமானும், ஏத்துறும் - துதிசெய்யும், நாராயணபுரப் புங்கவன்மேல் - திருநாராயணபுரத் தெம்பெருமான்பேரில், செந்தமிழ் செப்பிடற்கு - (இக் கலம்பகமாகிய) செந்தமிழ்ப் பிரபந்தத்தைச் சொல்ல, திர அரண் ஆர்மதிக்கு ஆம் வண்ணம் - எம்மறிவுக்குத் திடமாகிய காவலாயிருக்கும் பொருட்டு, வரவர மாமுநி தாள்கள் - அழகிய மணவாள மாமுநிகள் திருவடிகளை, எஞ்ஞான்றும் வழுத்துதும் - எப்போழ்தும் (யாம்) துதிப்போம் (எ-று.)

(யாம்) எழுவாய். வழுத்துதும் - பயனிலை. தாள்கள் - செயப்படுபொருள்.(எ)

ஆசாரியர்.

அ. மருளாள னைத்திரு வாய்மொழி யோத வலிதுபற்றித்
தெருளாள னாக்கி ரகுநா யகற்பிர திட்டைசெய்தோர்
பொருளாள ராயெமை யாக்குங் குறுங்குடிப் பொன்னகர்ப்
பருளாள ராமா நுஜஜீய ரெம்முயிர்க் காந்துணையே. [பே

(இ-ள்.) மருளாளனை - மயக்கமுற்றிருந்த என்னை, திருவாய்மொழி ஓத வலிதுபற்றி - இளமைப்பருவத்திலேயே திவ்விய பிரபந்த பாராயணம் பண்ணத்தக்க அதிகாரமுண்டாம் வண்ணம் வலியவந்து பிடித்தாட்கொண்டு, தெருளாளனாக்கி - (பஞ்ச சம்ஸ்காராதிகளால்) தெளிவையுடையேனாகச்செய்து, ரகுநாயகற் பிரதிட்டைசெய்து-(என்பொருட்டால் என் தந்தை திருப்பணிசெய்து முடித்த ஆலயத்தின்கண்) சக்ரவர்த்தித் திருமகனை யெழுந்தருளப்பண்ணி, ஓர் பொருளாளராய் எமை ஆக்கும் - அடியோங்களை ஒப்பற்ற க்ருதார்த்தர்களா யாக்கியருளிய, குறுங்குடிப் பொன்னகர்ப்பேரருளாள ராமாநுஜஜீயர் - அழகிய திருக்குறுங்குடி என்னுந் திவ்வியதேசத்தில் மடாதிபரா யெழுந்தருளிய "பேரருளாள ராமாநுஜஜீயர்" என்னும் எமது ஆசார்யர், எம் உயிர்க்கு ஆம்துணை - எம்முடைய ஆத்மோஜ்ஜீவந ஸஹகாரியா யெழுந்தருளியிருப்பர் (எ-று.)

மருளாளன், தெருளாளன் - தன்மையிடத்தில் வந்த படர்க்கை யொருமைச் சொற்கள். பொருளாளர் - அங்ஙனம் வந்த படர்க்கைப் பலர்பாற்சொல். பொருளாளராமாநுஜஜீயர் - எழுவாய். துணை - பயனிலை. (௫)

## ஆசிரியர்.

௬. மொட்டலை பூம்பொழில் சூழும்வல் லாரியின் முற்பயந்து
மட்டலை யின்றமிழ் போதித்தெந் தத்தகல் வானெழுத்தெட்
டுட்டலை கோதண்ட ராமருக் காலய வொண்பணிசெய்
கட்டலை யாதிமூ லப்பெய ரெந்தைநற் காப்பெமக்கே.

(இ-ள்.) மொட்டு அலை பூம்பொழில் சூழும் வல்லாரியில் - பூவரும்புகள் நிறைந்த அழகிய சோலைசூழ்ந்த வல்லாரியென்னும் பட்டணத்தில், முன் பயந்து - (எம்மை) முதன்மகவாகப் பெற்று, மட்டு அலை இன்தமிழ் போதித்து - தேன்போல் மதுரமுள்ள தமிழ்க்கலைகளை (எமக்குப்) போதித்து, எம் தத்து அகல்வான் எழுத்து எட்டுள் தலை கோதண்ட ராமருக்கு ஆலய ஒண்பணிசெய் - (எம் ஜனனபத்திரமெழுதிய ஜோதிஷ வல்லவரால் இளமைப் பருவத்தில் நேருமெனக் கணித்த) எம் விபத்துகள் யாவும் நீங்கும்பொருட்டு அஷ்டாக்ஷரத்திற் கட்டுண்ணும் பரனாகிய கோதண்டங் கையிற்றாங்கிய சக்ரவர்த்தித் திருமகனுக்கு அழகிய ஆலயத்திருப்பணி செய்தவராகிய, கட்டலை ஆதிமூலப்பெயர் எந்தை - கட்டலை என்னும் ஊரினரும் ஆதிமூலபிள்ளை என்னும் திருப்பேரினருமாகிய எம்மை யீன்ற ஹிதோபதேசாசிரியர், நற்காப்பு எமக்கு - எமக்கு நல்ல காவலாக நிற்பர் (எ-று.)

எந்தை - எழுவாய். காப்பு - பயனிலை. (௬)

## நூல்.

மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

இவை எட்டடித்தரவுகள் (உ.)

பூமேவு சதுமுகனும் பொறியரவப் பணியரனும்
கோமேவு சதமகனுங் குழுமியவா னிமையவரும்
மாமறைதேர் வியாதமுனி வதிட்டனகத் தியன்கபிலன்
கோமுனிசௌ நகனத்ரி கோதமன்கா சிபன்றக்கன்
பார்க்கவன்வான் மிகன்வைசம் பாயனன்பா ரத்வாசன்
மார்க்கண்டன் ஜமதக்நி வாமதேவன் முதலோர்
இருகரமுங் குவித்திறைஞ்ச வினியகுரு வுருத்தரித்துத்
திருவதரி யாச்சிரம சேவைதந்த நாரணனே.

எண்ணிலா வுயிர்களியா விடருறா வொருதலமாய்த்
தண்ணிலாத் தவழுயர்மா தவகிரிப்பொன் றலையத்து
ஞானந்த மைந்ததிரு நாட்டினின்று ரணற்கருளும்
ஆனந்த மயமணிவி மானமிசை யினிதமர்ந்து
தாதேய்பொற் சலசமலர்த் தவிசில்வளர் ஸ்ரீதேவி
பூதேவி யருமிருபாற் பொலிந்துமகிழ்ந் துபசரிப்பக்
கங்குலகற் றோரிரண்டு கதிர்களென வொளிவிளங்கு
சங்கொடுசக் கரந்தரித்த தனித்திருநா ராயணனே.

(இ-ள்.) பூமேவு சதுமுகனும் - தாமரைப்பூவில் எழுந்தருளியிருக்கும் பிரமதேவனும், பொறி அரவப் பணி அரனும்-படத்திற் றுத்தியையுடைய சர்ப்பத்தை ஆபரணமாகப்பூண்ட சிவபெருமானும், கோமேவு சதமகனும் - தேவலோகத்தரசனாகிய இந்திரனும், குழுமியவான் இமையவரும்-கூட்டமாய்ச் சேர்ந்த உயர்ந்த தேவர்களும், மாமறைதேர் வியாதமுனி - மாட்சிமைபெற்ற வேதபரிசீலனத்திற் சிறந்த வியாசபகவானும், வதிட்டன் - வஸிஷ்டரும், அகத்தியன்-அகஸ்தியரும், கபிலன்-கபிலரும், கோமுனி - ராஜரிஷியாகிய விசுவாமித்திரரும், சௌனகன் - சௌனகரும், அத்ரி - அத்திரிமுனிவரும், கோதமன்-கௌதமரும், காசிபன்-காசிபரிஷியும், தக்கன்-தக்ஷரும், பார்க்கவன்-பார்க்கவரும், வான்மிகன்-வால்மீகரும், வைசம்பாயனன் - வைசம்பாயனரும், பாரத்வாசன்-பாரத்வாசரும், மார்க்கண்டன் - மார்க்கண்டேயரும், ஜமதக்நி - ஜமதக்நியும், வாமதேவன் - வாமதேவரும், முதலோர் - முதலாகிய ரிஷீச்வரர்களும், இருகரமும் குவித்து இறைஞ்ச - இரண்டுகரங்களையும் சிரமேற் கூப்பி வணங்கும்படியாக, இனியகுரு உருத்தரித்து - ஸதா

சார்யரூபங்கொண்டு, திருவதரி யாச்ரிரம சேவைதந்த நாரணனே - ஸ்ரீபத ரிகாச்ரமமென்னும் திவ்யதேசத்தி லெழுந்தருளி (ஸ்வாம்சபூதனான நரன் விஷயமாகத் திருமந்திரத்தை ப்ரகாசிப்பித்து) த் திருச்சேவைசாதித்த திரு நாராயணஸ்வாமியே, (க)

எண் இல்லா உயிர் - சகல ஆத்மாக்களும், கலியால் இடர் உற - கலி புருஷனால் துன்பத்தழுந்தாமைக் கேதுவாகிய, ஒருதலமாய் - ஒப்பற்ற க்ஷேத்ரமாகி, தண் நிலாத்தவழ் - குளிர்ச்சிபொருந்திய சந்திரன் தவழப் பெற்ற, உயர் யாதவகிரி - ஓங்கி வளர்ந்திருக்கும் யாதவகிரியின்மேல் (வி ளங்கும்), பொன் ஆலயத்து - பொன்மயமாய் பிரகாசிக்கும் திருக்கோயிலி னுள், ஞானம் தழைத்த திருநாட்டின் நின்று - விஜ்ஞாநமயமாய் விளங்கும் பரமபதத்திலிருந்து, ஆரணற்கு அருளும் - ப்ரஹ்மா ஆராதநம்பண்ணத் திருவுள்ள முவந்தருளிய, ஆனந்த மயமணி விமானமிசை - நவரத்னகசித மான ஆனந்தமய விமானத்தின்கண், இனிது அமர்ந்து - நன்குவீற்றிருந் து, தாது உய் பொன் சலச மலர்த்தவிசில் வளர் ஸ்ரீதேவி பூதேவியரும் - மகரந்தப்பொடிகளைச் சொரியும் அழகிய அரவிந்தவமளியில் வீற்றிருக்கும் பெரியபிராட்டியாரும் பூமிப்பிராட்டியாரும், இருபால்பொலிந்து மகிழ்ந்து உபசரிப்ப - உபயபார்சத்திலும் நெருங்கியிருந்து உவகையோடுபசரிக்க, கங்குல் அகற்று ஓரிரண்டு கதிர்கள் என - இருளையோட்டும் சந்திரசூரியர்க ளென்று சொல்லும்படியாக, ஒளிவிளங்கு சங்கொடு சக்கரம் தரித்த - பிர காசிக்குந் திருவாழி திருச்சங்குகளைத்தரித்த, தனித்திருநாராயணகேள் - ஒப்பற்ற திருநாராயணரே (அடியேன் விண்ணப்பத்திற்குத்) திருச்செவி சாய்த்தருள்வீராக (எ-று) (உ)

ஸ்ரீதேவி பூதேவியரும் - உயர்திணை யும்மைத்தொகை பலர்பேறேற்றது. இருபால் என்றதில் முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. சங்கொடு என்பதில் ஒடு எண்ணுப் பொருட்டு.

இவை ஈரடித்தாழிசைகள் (அ.)

க. பொன்வலத்தும் பூவிடத்தும் பூமணம்போற் பொலிந்துறை [தல்
பொன்வலத்தும் பூவிடத்தும் பொலிந்தெமக்கிங் குணர்த்தி [னையே

உ. இடையினறு யபனரற்கங் கிருந்தேவுந் தகைவிளங்க
இடையினறு யிங்குவந்திவ் யதுகிரியு முவந்தனையே

ங. சங்காழி தரித்தனையிச் சங்காழி யுலகையருள்
சங்காழி தரித்தவன்னைத் தன்மையுன்பா லுளதெனவே

ச. திருப்பாலுன் பாலகத்தைத் திருப்பார்க்குஞ் சரணளித்தல்
திருப்பாத முலகுகொண்ட தினத்திலிங்கு விளக்கினையே

௫. அண்டரமிர் தத்தினுக்கங் கதிபனாய்ப் பகிர்ந்தருணீ
அண்டரமிர் தத்தினுக்கிங் கங்காந்த ததிசயமே

௬. பஞ்சா னனனானாய்ப் பாலன்பாற் றூனவன்பாற்
பஞ்சா னனனானான் பாத்துவம்யார் பாலுளதே

௭. பாலகனா டனைத்தினையும் படைத்தளித்துத் துடைக்குமுனைப்
பாலகனா யாய்ச்சிகொண்ட பான்மையையா மறிந்திலமே

௮. பத்துமதி திருவிலங்கைப் பதியிருக்க விடுத்தல்விருப்
பத்துமதி னடியர்மிசைப் பரிவுணர்த்தற் கென்றேயோ.

(இ-ள்.) பொன்வலத்தும் - பொன்னுலகத்தினும், பூவிடத்தும் - பூவுலகத்தினும், பூமணம்போல் பொலிந்து உறைதல் - புட்பத்தினிடத்தில் வாசனையானது பொருந்தியிருப்பதுபோல் தேவரீர் சர்வாந்திரியாமியாகிக் கரந்துறைதலை, பொன்வலத்தும்- பொன்னாகிய பெரியபிராட்டியார் வலது பக்கத்திலும், பூவிடத்தும் - பூவாகிய பூமிப்பிராட்டியார் இடதுபக்கத்திலும், பொலிந்து - வீற்றிருந்து விளங்க, எமக்கு இங்கு உணர்த்தினை- இத்திருக்கோயிலில் அடியேங்கள் உணரும்படி சேவைசாதித்தீர்,

["பொன்வலத்தும் பூவிடத்தும் பூமணம்போற் பொலிந்துறைதல்" என்பதை பொன்வலத்துப் பூப்போலும் பூவிடத்து மணம்போலும் என நிரனிறையாகவைத்து "பொன்னினிடத்தில், அழகைப்போலும்; பூவினிடத்தில், மணத்தைப்போலும், எனப் பொருள்கூறி தேவரீர் சர்வாந்திரியாமியாகிக் கரந்துறைதலை" என்று முடிக்கினுமமையும்,] (௧)

இடை இனன் ஆய் அயன் அரற்கு - பிரம்ம ருத்திரானுக்குத் தேவரீர் நடுநாயகவிண்மணியாய், அங்கு இருந்து ஏவும் தகைவிளங்க - அவிடத்தில் இருந்துகொண்டு முறையே அவர்கள் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைச்செய்ய ஆஜ்ஞாபிக்கும் பெருமை விளங்கும்படியாக, இடை இனனாய் இங்குவந்து- இவ்வுலகத்தில் இடையர்குலத்தில் வந்து (வளர்ந்ததுமன்றி), இவ் யதுகிரியும் உவந்தனை - இந்த யாதவகிரி என்னும் திருமலையையும் விரும்பி வீற்றிருக்கின்றீர். (௨)

இச்சங்கு ஆழி உலகை அருள் - சங்குகள்நிறைந்த கடலை யாடையாயுடுத்த இவ்வுலகத்தை யீன்றருள்வதில், சங்கு ஆழி தரித்த அன்னைத்தன்மை - சங்கவளையலையும் கணையாழியையுமணிந்த தாயின் றன்மை, உன்பால் உளது என - தேவரீர்க்குண்டென்பதை விளக்க, சங்கு ஆழி தரித்தனை - சங்காகிய பாஞ்சஜந்யத்தையும் ஆழியாகிய சுதர்ஸநத்தையுந் தரித்திருக்கின்றீர். (௩)

திருப்பால் உன்பால் அகத்தைத் திருப்பார்க்கும் - புருஷகார பூதையாகிய பெரியபிராட்டியாரிடத்தும் (ஸர்வேசுவரனாகிய) தேவரீரிடத்தும்

மனதைச் செலுத்தாது அபசாரப்படுஞ் சேதநர்களுக்குங்கூட, சரண் அளித்தல் - ரக்ஷகமாயிருத்தல் திருவடிக்கு ஸ்வபாவமென்பதை, திருப்பாதம் உலகு கொண்ட தினத்தில் - இவ்வுலகத்தை யொருதிருவடியா லளந்துகொண்ட காலத்தில், இங்கு விளக்கினை - (அத்திருவடிநீழலில் எல்லாவுயிர்களையு மணைத்து) இவ்விடத்தில் விளக்கியருளினீர். (௪)

அண்டர் அமிர்தத்தினுக்கு அங்கு அதிபனாய் பகிர்ந்தருள்நீ - தேவாமிர்தத்தைத் தேவாதி தேவனாக விருந்து (தேவர்களுக்கு) பாகித்தருளிய தேவரீர், இங்கு - இவ்விடத்தில், அண்டர் அமிர்தத்தினுக்கு - அண்டராகிய முல்லை நிலமாக்களுடைய நவநீதத்திற்கு, அங்காந்தது அதிசயமே - திருவாய்மலர்ந்தது ஆச்சரியமாக விருக்கின்றது. (௫)

பஞ்சானனன் ஆனாய் பாலன்பால் - (தேவசம்பத்துள்ள) பிரகலாதாழ்வானது ஸம்ரக்ஷணார்த்தமாகத் தேவரீர் பரந்தமுகத்தையுடைய அழகியசிங்கமாய் அவதரித்தீர், தானவன்பால் பஞ்சானனன் ஆனான் - அசுரசம்பத்துள்ள இரணியன்பக்கல் ஐந்துமுகங்களையுடைய சிவபெருமான் சரபமாகவந்தார், பரத்துவம் யார்பால் உளதே - (ஆகச்சே உங்களிருவரில்) பரத்வம் என்பது யாரிடத்துள்ளது. (௬)

பாலகனாய் - பரிபாலன கர்த்தாவாகி, அனைத்தினையும் - அண்டகோடி சராசரங்களனைத்தினையும், படைத்து அளித்துத் துடைக்கும் உன்னை - ஆக்கிக் காத்து அழிக்குந் தேவரீரை, பாலகனாய் - ஒரு சிறு பாலகனாக, ஆய்ச்சிகொண்டபான்மையை - யசோதைப்பிராட்டியார் சரத்திலேந்திக் கொள்ள விருந்ததேவரீரது ஸௌலப்யகுண விசேஷத்தை, யாம் அறிந்திலம் - அடியோங்கள் உணருஞ் சக்தி யுடையேமல்லேம். (௭)

பத்துமதி - பத்துமாதகாலம், திரு இலங்கைப்பதி இருக்கவிடுத்தல் - சீதாபிராட்டி லங்காநகரத்திற் சிறையிருக்கும்படி தேவரீர் விட்டிருந்தது, விருப்பத்து உமது இன் அடியார்மிசை - உம்மீது விருப்பத்தையுடைய உமது இனிய அடியார்மீது பிராட்டிக்குள்ள, பரிவு உணர்த்தற்கு என்றேயோ - கருணையைப் பிரபஞ்சத்தார்க்கு அறிவுறுத்தற்கென்று தானோ (எ-று.) (௮)

திருப்பார்க்கும் என்பதில் உம்மை இழிவு சிறப்பின்கண்வந்தது.

இவை ஈரடி அராகங்கள் (௪)

க. எளினுமிணை யெனவகி லமுநிறை யுருவினை
அளியொடு முயிருய வளவிய வருவினை

உ. ஒருமுறை முழுகிடி னுடலுறு பிணியொழி
தருதிரு மலிநவ சரசினை யருளினை

௩. ககபதி தவளமண் கனிவொடு தரவதை
ஜகதலர் நுதலணி தரநிறை தகையினை

௪. யதுகிரி வதியடி யரையம படர்நித
நிதமதி துதிசெயு நிலைதனி னிறுவினை

(இ-ள்.) எள்ளினுள் நெய்யென - திலதத்தில் தைலத்தைப்போல, அகிலமும் நிறை உருவினை - எல்லாவற்றினும் விபுவாக நிறைந்துள்ள உருவத்தையுடைய தேவரீர், அளி யொடும் - தண்ணருள்சுரந்து, உயிர் உய்ய - உயிர்க ளுஜ்ஜீவிக்கும்படி, அளவிய அருவினை - அவைகட்குள் ளும் அந்தர்யாமியாக நிறைந்துள்ளீர்.— (௧)

ஒருமுறை முழுகிடின் - ஒருதரம் ஸ்நானஞ்செய்தால், உடலுறுபிணி ஒழிதரு - தேகத்தைப்பற்றிய ஜனனமரண நோய்கள்ஒழியத்தக்க, திருமலி நவசரசினை அருளினை-சகலசம்பத்தும் பெருகச்செய்யு மொன்பது தீர்த்தங் களை இந்தக்ஷேத்திரத்தில் அருளினீர். (௨)

ககபதி தவளமண் களிவொடுதர-பக்ஷிராஜனாகிய கருடாழ்வான் திரு மண்ணை (ஸ்வேதத்தீவிலிருந்து கொண்டுவந்து) உயிர்களின்மேலிருக்குமி ரக்கத்தால் இந்த க்ஷேத்திரத்திற் பிரதிஷ்டைசெய்ய, அதை ஜகதலர் நுதல் அணிதர - அதைநெற்றியிலணிந்து இவ்விபூதியிலுள்ளார் ஈடேறும்பொரு ட்டு, நிறைதகையினை - பெருக்கியருளிய மகிமையுள்ளீர். (௩)

யதுகிரிவதி அடியரை - யாதவகிரியில் வாசஞ்செய்யும் பாகவதர்களை, யமபடர் நிதநிதம் அதிதுதிசெயும் - யமதூதர்கள் சர்வதா தூரத்தேநின்ற படி தெண்டன்சமர்ப்பித்துப் பின்னுக்குச்செல்லும்படியான, நிலைதனில் நிறுவினை - மேம்பாட்டில் நிலைபெற்றிருக்கச்செய்தருளினீர் (எ-று.) (௪)

அளியொடும் இதில் ஒடு விசேடணப்பொருட்டு. சரசு = ஸரஸ், வடமொழி - தடாகம்.

இவைபோயசந்தும் ஈரடித்தாழிசைகள் (௪+௩.)

௧. ஆதிநடு வந்தமுமா யண்டபகி ரண்டமுமாய்ச்
சோதிதரு முச்சுடர்க்குள் சோதியுமாய்த் தோற்றுவைநீ.

௨. ஆரணமா யாரணத்தி னகப்பொருளா யனைத்தினுக்கும்
காரணமாய்க் காரணத்தைக் கடந்தவனாய் நின்றவனீ.

௩. படைப்பதற்கு நான்முகனாய்ப் பாலிக்க நாரணனாய்த்
துடைப்பதற்கு ருத்திரனாய்த் தோன்றும் பழம்பொருணீ.

௪. திங்கள்முடிச் சங்கரனுந் திசைப்பனின்சீ ருரைக்கவெனிற்
பொங்கறிவு சிறிதுமிலேன் புகலவெண்ணி னிலக்குறுமோ.

—:0:—

௧. ஆந்துமகோ டிகளனைத்து மகன்றவயிற் றடக்கியவை
காத்துமீண் டினிதீன்று காட்டுமுன்னை யன்னையென்கோ.

உ. எண்பத்து நாலிலக்கத் தெவ்வுயிருஞ் செய்வினைகொண்
டெண்பக்கு வத்தவைகட் கூட்டுமுன்னைத் தந்தையென்கோ.

ங. பற்பலசை மயம்வகுத்துப் பலகலைக ளுடன்படைத்தே
அற்புதநல் லுணர்ச்சியைத்தந் தாட்டுமுன்னைக் குரவனென்
[கோ.

ச. பம்புதிட விசும்புமுதற் பகர்பூதங் களும்படைத்து
நம்புமுயிர் களுக்குநிலை நாட்டுமுன்னைத் தெய்வமென்கோ.

ரு. பத்திநெறி வழாதுசரண் பற்றியுனை நத்திவரு
முத்தமர்த முந்தைவினை யோட்டுமுன்னை நண்பனென்கோ.

சா. அடியார்கட் கடியவனா யவர்களுள்ளக் கமலமலர்க்
குடியாக விருந்துமுத்தி கூட்டுமுன்னை யன்பனென்கோ.

(இ-ள்.) ஆதிநடு அந்தமும் ஆய் - ஜகத்துக்காதிகாரண பூதனையும் ரக்ஷகனையும் பிரளயாந்தத்தில் சூக்ஷமசிதசித்விசிஷ்டனையும், அண்டபகிரண்டமுமாய் - லீலாவிபூதியும் நித்யவிபூதியுமாயும், சோதிதரும்முச்சுடர்க்குள் சோதியுமாய் - ப்ரகாசத்தைத்தரும் சூர்யசந்திராக்நியென்னு மூவொளிச்சுடர்களானதுமன்றி அவைகட்குள் சோதியுமாயும், தோற்றுவை நீ - தேவரீர் விளங்கியிருக்கின்றீர். (க)

ஆரணமாய் - வேதமாயும், ஆரணத்தின் அகப்பொருளாய் - அவ்வேதத்திற்கு அந்தர்க்கதனையும், அனைத்தினுக்குங்காரணமாய் - எல்லாவற்றிற்கும் ஹேதுவாயும், காரணத்தைக்கடந்தவனாய் - அக்காரணத்திற் ககல நிற்பவனையும், நின்றவன் நீ - தேவரீர் விளங்காநிற்பீர். (உ)

படைப்பதற்குநான்முகனாய் - (சகலசராசரங்களையும்) ஆக்கப்பிரமனையும், பாலிக்க நாரணனாய் - காக்கவிஷ்ணுவாயும், துடைப்பதற்கு உருத்திரனாய் - அழிக்கருத்ரனையும், தோன்றும் பழம்பொருள்நீ - காணப்படும் அநாதிப்பொருள் தேவரீரே. (ங)

திங்கள்முடிச்சங்கரனும் - சந்திரசேகரனாகிய சிவபெருமானே, இசைப்பன் நின்சீர்உரைக்களவில் - தேவரீரது திருக்கல்யாணகுணங்களைக் கீர்த்தித்துப்பாடத்திகைப்பனென்று வேத மோலமிடுமென்றால், பொங்கு அறிவு சிறிதும் இலேன் - வளரும்படியான அறிவுஒருசிறிதும் இல்லேனாகியயான், புகல எண்ணின் - சொல்லநினைத்தால், இலக்கு உறுமோ - லக்ஷ்யப்படுமோ ? (ச)

———:o:———

**ஆத்துமகோடிகள் அனைத்தும் அகன்ற வயிற்றடக்கி - கோடிக்கணக்காயுள்ள ஆத்மாக்களனைத்தையும் (பிரளயகாலத்தில்) விசாலமான கர்**

ப்பத்தில் அடக்கிக்கொண்டு, அவைகாத்து - அவைகளையங்கு சம்ரக்ஷணை செய்து, மீண்டு இனிது ஈன்று - மறுபடி (ஸ்ருஷ்டிகாலத்தில்) வெளிப்படுத்தி, காட்டும்உன்னை அன்னை என்கோ - (இப்பிரகாரம் இதுமுன் இது பின் என்றுசொல்ல வேலாது தொன்றுதொட்டுக்) காட்டிவருந்தேவரீரை அன்னையென்றுதோத்தரிக்கட்டுமோ ? (௪)

எண்பத்துநாலு இலக்கத்து எவ்வுயிரும் - எண்பத்துநான்குலக்ஷ ரூப்பாயுள்ள உயிர்கள் ஒவ்வொன்றும், செய்வினைகொண்டு - செய்யுந் திருப்பணியை யங்கீகரித்து, உண்பக்குவத்து - அதுஉண்ணும்பருவகாலத்தில், அவைகட்கு ஊட்டும் உன்னைத் தந்தை என்கோ - அவைகளுக்கு உணவுசேகரித்து உண்பிக்குந் தேவரீரைத் தந்தையென்று தோத்தரிக்கட்டுமோ ?

பற்பல சமயம் வகுத்துப் பலகலைக ளுடன்படைத்தே - அனேகசமயங்களை அததற்குரிய விதிகளோடு பிரிவினையா யுண்டாக்கி, அற்புதநல்லுணர்ச்சியைத் தந்து - (அவைகளில் உண்மையானதரிசநமின்னதென்று) தெரிந்துகொள்ள ஆன்மாக்களுக்கு) அதிசயமானநல்ல அறிவையீந்து, ஆட்டும் உன்னைக்குரவன்என்கோ - (சூத்ரதாரியாகவிருந்து) ஆட்டிவைக்குந் தேவரீரைக் குருவென்று தோத்தரிக்கட்டுமோ? (௫)

பம்பு திடவிசும்பு முதல் பகர்பூதங்களும் படைத்து - திடமாக எங்கும் வியாபகமாயுள்ள ஆகாயமுதலிய ஐந்துபூதங்களையும் ஒன்றிலிருந்து மற்றொன்று கிரமமாயுதிக்கும்படி யுண்டாக்கி, நம்பும் உயிர்களுக்கு - அப்பௌதிகங்களிற்செறிந்த ஜீவன்களுக்கு, நிலைநாட்டும் உன்னைத் தெய்வம் என்கோ - முடிவாக உணரவேண்டியநிலைமை இத்தன்மைத்தென ஸ்தாபித்தருளிய தேவரீரைத் தெய்வமென்றுதோத்தரிக்கட்டுமோ.? (௬)

பத்திநெறி வழாது சரண்பற்றி - பக்திமார்க்கத்தில்வழுவாமல் உமது திருவடியையாச்ரயித்து, உனைநத்திவரும் - உம்மை விரும்பிவரும், உத்தமர்தம் முந்தைவினை - பரமபாவநர்களுடைய ஸஞ்சிதப்ராரப்தங்களாகிய பழவினையை, ஓட்டும் உன்னை நண்பன் என்கோ - நசிக்கச்செய்யும்படியான தேவரீரை நண்பனென்று தோத்தரிக்கட்டுமோ.? (௭)

அடியார்கட்கு அடியவனாய் - அன்பர்கட் கன்பனாய் வந்தவதரித்து, அவர்கள் உள்ளக் கமலமலர் குடியாகவிருந்து - அவ்வன்பர்களுடைய மனமாகிய தாமரை மலரிற்குடிகொண்டு வாசம்பண்ணி, முத்தி கூட்டும் உன்னை அன்பன் என்கோ ? அவர்களைத் திருவடி நீழலிற் சேர்த்துக்கொள்ளுந் தேவரீரை அன்பனென்று தோத்தரிக்கட்டுமோ ? (எ-று.) (௮)

இத்தாழிசைகளிற் றோன்று உம்மைகளைத் தொகையெனக்கொள்க. சோதியுமாய், இதில் உம்மை சுட்டுருமாய் எனப்பொருள்படலால் இறந்ததுதழீஇயது. சங்காளும், உயர்வு சிறப்பு. இலக்கு - லக்ஷ்யம் என்னும் வடமொழித்திரிபு. என்கோ

இதில் என்கு, குவ்விகுதிபெற்ற தன்மை யொருமை வினைமுற்று, ஓகாரம் ஐயப்பொருட்டு.

இவை நாற்சீர் ஓரடி அம்போதரங்கம். (உ)

க. உடையவர் பரிவொடு முவந் திறைஞ்சுநீ,
கடையவர் தொழமனக் களிப்பைக் கொண்டனை.

உ. அந்தமில் புவனங்க ளருந்துந் தன்மையை,
அந்தணன் செய்தரு மடிசிலுண்டனை.

(இ-ள்.) உடையவர் பரிவொடும் உவந்து இறைஞ்சும்நீ - ராமாநுஜ எதீந்திரர் அன்புடனானந்தித் தாராதனஞ்செய்யுந்தேவரீர், கடையவர் தொழ - (அவ்வெதீந்த்ரரால் நேமனம் பெறப்பட்ட) கீழ்ஜாதியாராகிய திருக்குலத்தாரு மாராதிக்க, மனக்களிப்பைக்கொண்டனை - மனமகிழ்ச்சி கொண்டு அங்கீகரித்துக்கொண்டீர். (க)

அந்தமில் புவனங்கள் - அஸங்க்யாதமானலோகங்களை, அருந்தும் தன்மையை - போனகங்கொள்ளு மகிமையையுடைய தேவரீர், அந்தணன் செய்தரும் - (ஸுசரிதனென்னும்) பிராமணன் (ஸுசீலை யென்னும் மனையாள்வயின்) பெற்ற சிறிய பாலன் படைத்த, அடிசில் உண்டனை - சோற்றையும் (பிராட்டியுடனிருந்து) ஸ்வீகரித்துக்கொண்டீர், (எ-று.) (உ)

இறைஞ்சும், காரணப்பொருட்டுப்பெயரெச்சம். கடையவர், அடிசில், இவைகளில் உயர்வு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கன,

இவை முச்சீரோரடியம்போதரங்கம் (சு)

க. திருவொடு மடவி நடந்தனை
உ. திரைசெறி பரவை கடந்தனை
ஙு. கருதல ரவிய நினைந்தனை
ச. கடவுளர் மகிழ முனைந்தனை.

(இ-ள்.) திருவொடும் அடவிநடந்தனை - சீதாபிராட்டியாரோடு கானகத்துக்குச்சென்றீர், திரைசெறி பரவைகடந்தனை - அலைகளடர்ந்தகடலையணைத்துத்தாண்டினீர்; கருதலர் அவிய நினைந்தனை - இராக்கதரழிய நினைத்தீர், கடவுளர் மகிழமுனைந்தனை - தேவர்கள் (துன்பம் நீங்கி) மகிழும்படி அவ்விராக்கதரோடு போர்தொடுத்தீர் (எ-று.)

இவை இருசீரோரடியம்போதரங்கம். (அ)

க. கருடனுந்தினை,
உ. கடுகி வந்தனை,

௩. காவை வென்றனை,
௪. கரிமு னின்றனை,
௫. மிருக மாய்த்தனை,
௬. சுரபி மேய்த்தனை,
௭. மேலை வாவினை,
௮. மேலை மேவினை.

(இ-ள்.) கருடன் உந்தினை - கருடன்மேலி லாரோகணஞ்செய்தருளி, கடுகிவந்தனை - விரைவாகவந்து, காவைவென்றனை - முதலையைக்கொன்று, கரிமுன் நின்றனை - கஜேந்திராழ்வான்முன் சேவைதந்தருளினீர், மிருகம் மாய்த்தனை - பொய்ம்மானாகவந்த மாரீசனைக்கொன்றீர், சுரபிமேய்த்தனை - ஆநிரையை மேய்த்தீர், மேலைவாவினை - (திருவிக்ரமாவதாரத்தில் இவ்வுலகையளந்ததல்லாமல்) மேலுலகையுந் தாவியளந்தீர், மேலைமேவினை - மேலைக்கோட்டையென்னு மித்திவ்ய திருப்பதியை விரும்பியமர்ந்திருக்கின்றீர். (எ-று)

உந்தினை, வந்தனை, வென்றனை, என்னும் முற்றுவினைகள் எச்சமாயின. மேலையும் என்ற இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது.

இது தனிச்சொல்

என வாங்கு.

(இ-ள்.) என ஆங்கு - என்று இங்ஙனந்தேவரீரது வாத்ஸல்யாதி நித்ய கல்யாணகுணங்களை அடியேன் கீர்த்தித்துப் பாடுமிடத்து. (எ-று.)

இது பதினேட்டடி நேரிசை ஆசிரியச் சுரிதகம்.

மணிநெடுங் கடல்சூழ்ந் தணிவகுப்புறூஉம்
இம்மாநிலமிசை, நம்மாழ் வார்புகல்
“ஒருநாயகம்” என வருதசகம்பெறு
திருவாய் மொழியெனுந் திராவிடவேதமும்,
உதாத்தானு தாத்தமாச் சதாத்தொனி மறையும்,
பல்விய வகையு மல்கலுற் றொலிதந்
தோங்குமுன் சினகரப் பாங்கர் வலம்வந்து
முறைமுறை தொழுது மறைபுகுந்தடியனேன்
இருகர தலமுஞ் சிரமிசைக் கூப்பி
உருகிடு முள்ளமோ டொருவரம் வேண்டுவல்;
புனைக்கான் மலரடி யிணைக்காட் படுத்தா
தெத்தனைப் பிறவி யைத்தந் திடினுமுன்

ணிதயத் திருக்கை யிதுவென விளங்குமிவ்
யாதவ கிரிவாழ் மாதவ சிரேட்டராம்
பாவனர் தாமுவந் தேவுகுற் றேவல்செய்
கிங்கரத் துவம்பெறு புங்கவர்க் கன்பனாய்
மருவிவாழ் வுறும்பெரு வாழ்க்கை
இகந்திடாப் பணியெனக் குகந்தினி தருளே.

(இ-ள்.) மணிநெடும் கடல்சூழ்ந்து - அழகிய விசாலமான சமுத்திரத்தாற் சூழப்பெற்று, அணிவகுப்பு உறாஉம்-(மருதம், முல்லை, குறிஞ்சி, பாலை, நெய்தல் என்னும் ஐந்திணையின்) வரிசையாய்வகுக்கப்பட்ட, இம்மாநிலமிசை - இந்தப் பெரியவுலகின் கண், நம்மாழ்வார் புகல்-ஸ்ரீ சடகோபாழ்வாரது இயற்சாற்றுகிய, "ஒருநாயகம்" எனவரு தசகம்பெறு-ஒருநாயகம் என்றுவழங்கிவருகிற தசகத்தை(த்தனக்குநடுநாயகமா)க்கொண்ட,' திருவாய்மொழியெனுந் திரவிட வேதமும் - திருவாய்மொழியென்கின்ற தென்மொழிவேதமும், உதாத்தம் அனுதாத்தமாச் சதாத்தொனிமறையும் - ஆரோகண அவரோகண ஸ்வரம்பிறழாது சதாகாலமும் உச்சரிக்கப்படுகிற வடமொழிவேதமும், பல்லியவகையும் - பலவாத்தியவகைகளும், மல்கல் உற்று ஒலிதந்து ஓங்கும் - நிறைவுபெற்று முழங்கி உயர்ந்த, உன் சினகரப்பாங்கர் வலம்வந்து - தேவரீரது திருக்கோயிலைப்பிரதக்ஷிணம்பண்ணி, முறைமுறைதொழுது - கிரமக்கிரமமாகத்தண்ட ப்ரணாமஞ்செய்து, மறைபுகுந்து - அடைக்கலம்புக்கு, அடியனேன் - உம்மடியார்க்கடியானாகிய அடியேன், இருகரதலமும் சிரமிசைக்கூப்பி - இரண்டுகைகளையும் சிரசின்மேலேற நீட்டிக்கூப்பியவனாய், உருகிடும் உள்ளமோடு - கரையாநின்றமனமுள்ளவனாகி, ஒருவரம்வேண்டுவல் - ஒரேவொருவரத்தைப்பிரார்த்திக்கிறேன் (அதாவது) புணைக்கான் மலர் அடி இணைக்கு - (பிறவிக்கடலுக்கு) மரக்கலம்போலும் தேவரீரது வாசமணக்கும் பாதாரவிந்தயுகளத்துக்கு, ஆட்படுத்தாது - அடியேனை அடிமைப்படுத்தாமல், எத்தனைப் பிறவியைத் தந்திடினும் - இன்னும் எத்தனை ஜனனமெடுக்கச்செய்தாலும், உன் இதயத்து இருக்கை இதுவென விளங்கும் - உம்முடைய இதயஸ்தானம் இது தானென்ன (வடபதரிகாஸ்ரமத்தில் ஆசார்ய ரூபமாகவந்து திருவாய் மலர்ந்தருளிய வண்ணம்) பிரகாசித்துக்கொண்டிருக்கும், இவ்யாதவகிரிவாழ் - இந்தயாதவகிரியில் வசிக்கின்ற, மாதவசிரேட்டராம் பாவனர்தாம் - மஹாதவசிரேஷ்டராகிய பரமபாகவதாக்ரேசர்கள், உவந்து எவு குற்றேவல்செய்-மனமகிழ்ந்து விதிக்கும் சிறிய பணிவிடைகளைச் செய்யாநின்ற, கிங்கரத்வம் பெறு புங்கவர்க்கு - கைங்கர்ய துரந்தரராகிய மேலோருக்கு, அன்பனாய் மருவி வாழ்வுறும் - அடியானாக (அவ்வொவ்வொரு ஜெனனத்திலும்) பொருந்தி வாழும்படியான, பெருவாழ்க்கை - உயர்ந்த செல்வவாழ்க்கையாகிய, இகந்திடாப்பணி - அவிச்சிந்நமாகிய கைங்கர்யத்வம், எனக்கு

உகந்து இனிது அருள் - அடியேனுக்கு லபிக்கத் திருவுள மிரங்கியனுக்ர கித்தருளல் வேண்டும் (என்பதே) (எ-று.)

உறாஉம் இது இடைநிலைச்செய்கை யளபெடை. திருவாய்மொழி, அடைய டுத்த கருவியாகு பெயர். கிங்கரத்வம் - கைங்கர்யம். பாகவதகைங்கர்யம் லபித் தார்க்குப் பகவதநுக்ரஹம் ஸித்தமாதலின் இதேபெருவாழ்க்கையாம்.

தரவிரண்டும் தாழிசையாறும் அராகமும் மீண்டுந் தாழிசையாறும் அம்போதரங்கமும் தனிச்சொல்லும் சுரிதகமுமாக முறையேவருவது மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா வெனப்படும். மேற்கூறியவாறுறுப்பிற் சிற்சில பிறழ்ந்து முறழ்ந்துங் குறைந்து மிக்கும் மயங்கிவருவது முண்டு. எங்ஙனமாயினுந் தரவு முதற் சுரிதகமீறாக ஒன்றற்கொன்று பொருட் சம் பந்தமுடையதாயிருத்தல்வேண்டும்.

இக்கொச்சகக்கலிப்பா தரவிரண்டும், தாழிசையெட்டும், அராகமும், மீண்டுந் தாழிசை நான்கும் ஆறும், அம்போதரங்கமும், தனிச்சொல்லும், சுரிதகமுமாக வந்தமையும்; முதற்றரவில் நாரணனே எனவிளியும்; இரண் டாந்தரவில் நாரணனேகேள் எனத் திருச்செவிசாய்ப்பித்தலும்; தாழிசை எட் டினும், அராகத்தினும், மீண்டுந் தாழிசை நான்கு ஆறினும், அம்போதரங் கத்தினும், எம்பெருமான் நித்ய லீலாவிபூதிகளின் வியப்பும், தனிச்சொல் லால், முன்னும் பின்னுமுள்ளவைகளின் பொருத்தமும்; சுரிதகத்தில் பொ ருள் முடிவு வந்தமையுங்காண்க.

அடியனேன், எழுவாய். வேண்டுவல், பயனிலை. வரம், செயப்படுபொருள். (க)

## நேரிசை வெண்பா.

அருநா ரணமறையா யந்தணர்கள் வாழும்
திருநா ரணபுரத்தெந் தேவா - அருணாளும்
எட்டக் கரமிசைக்கு மின்னாவோ டுன்னேவல்
சுட்டக் கரநீ துணை.

(இ-ள்.) அரும் நார் அண் அம் மறை ஆய் - அரியவன்பை (மாதா வைப்போல்) அகத்தடக்கியுள்ள அழகிய வேதத்தை யாராயும், அந்தணர் கள் வாழும் - பிரபன்னராகிய ஸ்ரீவைஷ்ணவர்கள் நிறைந்துள்ள, திருநா ரணபுரத்து எம்தேவா - திருநாராயணபுரத் திருப்பதியில் வீற்றிருக்கின்ற எம்பெருமானே, நாளும் எட்டு அக்கரம் இசைக்கும் இன் நாவோடு - சதா அஷ்டாக்ஷரத்தை யுச்சரிக்கும் இனியநாவும், உன் ஏவல் சுட்டக்கரம் - தேவரீரது குற்றேவல்களைச்செய்யும் கரங்களும், நீ துணை அருள் - தே வரீர் துணையாய் (அடியேனுக்கு)க் கிருபைசெய்யல்வேண்டும் (எ-று.)

பெற்றபிள்ளைகளின்மீது அன்பின்மேலீட்டம் மாதாவுக்கிருப்பதுபோல், சேதந ருஜ்ஜீவநார்த்தமாகப், பேரவாவை வேதமாதா தனக்குள்ளடக்கிக்கொண்டு, அவரவர்

கள் நின்ற நின்ற அளவுக்கிடாக மதிநலத்தையருளலின் "அருநாரணமறை" என்றும். இவ்விசேடணத்தை அந்தணர்க்கொட்டினு மமையும். ஒடு எண்ணுப்பொருட்டு. சுட்டடக்கரம் இதில் உம்மை விகாரத்தாற்றொக்கது. தேவா (நீ) எழுவாய். அருள், பயனிலை. நா, கரம், செயப்படுபொருள்கள். (உ)

## கட்டளைக் கலித்துறை.

ஙூ. துணையா மிரவும் பகலுநினைத்துத் துதிப்பவர்க்குப்
புணையாம் பவக்கட லாழ்ந்துவருந்திப் புலம்புநர்க்குக்
கணையா யரற்குத் திரிபுரம்வெல்லக் கருணைபுரி
பணையார் யதுகிரி வாழ்செல்வ னெம்பர னடியே.

(இ-ள்.) அரற்கு - சிவபெருமானுக்கு, திரிபுரம்வெல்ல - திரிபுரத்தை வெல்லும்பொருட்டு, கணையாய்க் கருணைபுரி - பாணமாகவிருந்து கடாக்ஷித்த, பணை ஆர் யதுகிரிவாழ் - மூங்கிற்காடடர்ந்த யாதவகிரியில் வீற்றிருக்கின்ற, செல்வனும் எம்பரன் அடியே - சம்பத்குமாரனுகிய எம்பெருமான் திருவடிகளானவை, நினைத்துத் துதிப்பவர்க்கு-(நிகமகாலந்தப்பாது) உன்னித்தோத்திரஞ்செய்பவர்களுக்கு, இரவும்பகலும் துணையாம் - இராத்திரியினும் பகலினும் பக்கத்துணையாகநிற்கும், பவக்கடல் ஆழ்ந்துவருந்திப் புலம்புநர்க்கு - பிறவியென்னுஞ்சமுத்திரத்தில் மூழ்கித்துயரடைந்து முறையிடுபவர்க்கு, புணையாம் - (அச்சமுத்திரத்தைக்கடக்கு) மரக்கலமாகும் (எ-று.)

புலம்புநர் இதில் நகரம் பெயர்க்கிடைநிலை. அடி, எழுவாய். துணையாம், புணையாம், பயனிலைகள். (ஙூ)

## அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பரமதயாபரன்பரமன் பரந்தாமன்பரிபாலன் பதுமநாபன்
கரமதயானையைநினைத்த கணத்தினில்வந்தருள்புரிந்த கடவுள் [கண்டீர்
வரமதையா தருகவெனக் கலியாணிமூழ்கிநறு மலர்கொடுங்கள்
சிரமதையாதவகிரிவாழ் திருநாராயணனடிக்கே சேர்த்துமின் [னே.

(இ-ள்.) வரமது ஐயா தருக என - ஆரிய! அநுக்ரகம் புரிந்தருளுகவென்று, கலியாணி மூழ்கி - கல்யாணித்தீர்த்தத்திலாடி, சிரமதை - உங்கள் சிரங்களை, யாதவகிரிவாழ் திருநாராயணன் அடிக்கே சேர்த்து - பரமபதாநுபவம்விட்டு யாதவகிரியில்வந்து வீற்றிருக்கின்ற திருநாராயணஸ்வாமியினது திருவடிகளுக்குத் திக்குநோக்கித் தெண்டன் சமர்ப்பித்து, நறுமலர் கொடுமின்கள்-வாசனைநிறைந்த புஷ்பாத்யுபகரணங்களைப் பணிமாறுவீர்

களாக (ஏனென்றால் அந்தத் திருநாராயண ஸ்வாமிதான்) பரம தயாபரன்- நிர்ஹேதுக தயாஸமுத்ரன், பரமன் - அத்விதீயனான பெருமாள், பரந்தா மன் - வைகுந்தநாதன், பரிபாலன் - நிருபாதிக ஸம்ரக்ஷகன், பதுமநாபன் ப்ரம்ஹாவினுத்பத்திக்கு ஹேதுபதமான திருநாபிக்கமலத்தன், கரமதயானை யை - துதிக்கையையும் மதம்பொழியும் கபோலத்தையுமுடைய கஜேந் திரனென்னும் ஒருயானைக்குமுன், நினைத்தகணத்தினில்வந்து - அது ஓல மிட்டழைத்த வந்தக்ஷணமே வந்து, அருள்புரிந்தகடவுள்-(அநிஷ்ட நிரஸ னபூர்வக இஷ்டப்ராப்தியை) க்ருபைபண்ணின ஆதிமூலக்கடவுள் (ஆகை யால்தான்) (எ-று.)

யானையை, உருபுமயக்கம். பின் என்னும் முன்னிலையேவல் விகுதியைக் கொ டுங்கள் என்னும் வினைமுற்றினிடையிற் கூட்டுக. "மலர்கொடுங்கள்" என்பதை மலர்கொடு உங்கள் எனப்பிரித்து, புஷ்பாத் யுபகரணங்களைக்கொண்டு உங்கள்சிரத் தைத் திருநாராயணனடிக்குச் சேர்த்துமின் எனமுடிக்கினுமாம். கண்டீர் முன்னிலை பாசை. அடிக்கே என்பதில் ஏகாரம் பிரிநிலை. அது, இற்றேகாரம், அசை. (நீங்கள்) எழுவாய். கொடுமின்கள், பயனிலை. மலர், செயப்படுபொருள். (ச)

## நேரிசை வெண்பா.

ரு. மின்னொளியா நேமிநிகர் மெய்யினனம் மேலைநகர்ப்
பொன்னொளியா நேமியங்கைப் புங்கவன்றன் பன்னருஞ்சீர்
தங்கியவின் னற்கருணை தான்பெற்றே னின்னினியே
பொங்கியவின் னற்கருமம் போம்.

(இ-ள்.) மின் ஒளியாம் நேமிநிகர் மெய்யினனன் - சதாமின்னிக்கொண் டிருக்குஞ் சாகரமொன்றுண்டேல் அதை நிகர்த்த திருமேனி நிறமுடை யவனாகிய, அம் மேலைநகர் - அழகிய மேலைக்கோட்டையில் வீற்றிருக்கும், பொன் ஒளி ஆர் - பொலிந்த பிரகாசத்தையுடைய, நேமி அங்கைப்புங்க வன்தன் - சக்ராயுதத்தைத் திருக்கரத்திற்றாங்கிய தேவனது, பன்னரும் சீர்தங்கிய - அநிர்வாச்யமான கீர்த்திதங்கிய, இன் நல் கருணைதான் பெற் றேன் - நிர்ஹேதுகஜாயமான கடாக்ஷத்தை (அடியேன்) பெறலாயினேன், (ஆதலால்) இன் இனியே - இந்தக்ஷணமே, பொங்கிய இன்னல் கருமம் போம்-அநாதி அவித்யா சஞ்சித ப்ராரப்தங்களெல்லா மித்தோடே ஒழிந்து போயிற்று (எ-று.)

இன்னினி, ஒருபொருட்பன்மொழி, தன், தான், அசை. போம், இற்றுயிர்மெய் கெட்டது. கருமம், எழுவாய். போம், பயனிலை. (ரு)

## எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சு. போதலரும் கலியாணி வைகுண்ட கங்கை
புகழ்நாரா யணதீர்த்த மைத்ரேய குண்டம்

வேதவிரும் பொருள்விரிபுட் கரணி தர்ப்ப தீர்த்தம்
விரைகமழும் பதுமவட்டம் பலாசத்தின் கோட்டம்
யாதவியிந் நவசரசி லாடுநர்தம் வினைகள்
அடங்கலும்வெஞ் சுடர்முனிம மாகவொருங் ககற்றிப்
பூதலமீ தலநலங்க ளினிதளிப்ப தெந்தப்
புரமெனிலப் புரந்திருநா ராயணர்தம் புரமே.

(இ-ள்.) போது அலரும் கலியாணி - புட்பங்கள் மலரும் கலியாணியும், வைகுண்டகங்கை - வைகுண்டகங்கையும், புகழ்நாராயணதிருதம் - கீர்த்திபெற்ற நாராயண தீர்தமும், மைத்ரேய குண்டம் - மைத்ரேயதீர்த்தமும், வேத இரும்பொருள் விரிபுட்கரணி - (பாஷண்டிகள் வேதத்திற்கு அபார்த்தம் செய்துகொண்டிருந்தகாலத்தில் எம்பெருமான் தத்தாத்ரேயராயவதாரஞ்செய்து அவ்) வேதத்தின் உண்மைப்பொருளை விளக்கியருளிய தீரங்களையுடைய வேதபுஷ்கரணியும், தர்ப்பதீர்த்தம் - (அக்காலத்தில் அத்தத்தாத்ரேயருக்குத் தர்ப்பைப்புல்லுதவிய) தர்ப்பதீர்த்தமும், விரைகமழும் பதுமவட்டம் - (சனத்குமாரர் முதலியரிஷிகள் எம்பெருமானையருச்சிக்கத் தாமரைமலர்களையுபகரித்த) வாசமணக்குங் கமலதீர்த்தமும், பலாசத்தின் கோட்டம் - பலாச தீர்த்தமும், யாதவி - யாதவி நதியும், இந்நவசரசில் - ஆகிய இவ்வொன்பதுதீர்த்தங்களில், ஆடுநர் தம்வினைகளடங்கலும் - அவகாஹித்து நீராட்டஞ்செய்யு மவர்களது பூர்வோத்தராகங்க ளெத்தனையுண்டோ அத்தனையும், வெம்சுடர்முன் இமமாக - சூரியன்முன் பனியைப்போல, ஒருங்கு அகற்றி - ஒரேகூட்டமாகப்போக்கி, பூதலமீதல நலங்கள் - இகபர சௌக்யங்களை, இனிது அளிப்பது - (அத்தீர்த்தங்களைத் தன்னகத்தடக்கிக்கொண்டு) நலம்பெறச்செய்வது, எந்தபுரம் எனில் - எந்தபுரமென்று கேட்குங்கால், அப்புரம் - அந்தப்புரம், திருநாராயணர் தம்புரமே - (திருநாராயணர்வீற்றிருக்கும்) இந்தத் திருநாராயணபுரந்தான் (எ-று.)

தம் - அசை. இற்றேகாரம், தேற்றம். அப்புரம், எழுவாய். திருநாராயணர் புரம், பயனிலை. (சு)

புயவகுப்பு.

ஆசிரியவண்ணவிருத்தம்.

முதலடி.

எ. புருகூத னொருமிக்க முகில்லேவி வருடித்த
புனல்காலி களையற்றை நலியாத வணமிக்க
பொறைதாழா மலையைச் சுமந்தன
புயல்போலு மளகத்த ரிடைமாதர் தனைவைத்த
புனையாடை கவர்வுற்று மரமேறி யதிலிட்டு
பொதுமாலா யவரைப் புணர்ந்தன

புனைசூது வகைகற்ற வசுராதி பகபக்கி
புனைமேனி கொடுவெற்றி கொளுநேவ னெனவிரித்த
புழைநீள்வாய் கிழியப் பிளந்தன
புகர்மா மதகரிக்க ணிருகோ டிறவொடித்த
புகழ்மா தினைமணக்க வெருநேத ழினையடர்த்த
புவிமீதோர் தருவைக் கொணர்ந்தன.

## இரண்டாமடி.

ஒருவா ரிதியணைக்க வருணை சனைநினைக்க
உடனே வருதலற்ற வவனு ணைவமடக்கி
ஒருகோலால் வளையப் புரிந்தன
உருண்மாட விகலைக்கு ளடர்மூல பலைமுற்றும்
உருமாறி யவர்கட்கு ளரியாகி நனிநிற்க
உறழ்மோகா சுகமுய்த் திருந்தன
உயர்பா ரதவுயுத்த களவீரர்கள் வியக்க
ஒருவா சவனளித்த சுதனும் விஜயனுற்ற
உருடோரார் பரிமுற் றுரந்தன
உரகா பரணனத்தி முகனாறு முகன்வெற்றி
உடைகாலை வரையொத்த புயமா யிரமுமொக்க
உகவாணு சுரனைக் கடிந்தன.

## மூன்றாமடி.

முருகூரு மலர்மொட்டு விரிநீர்கொண் மடுவிற்குண்
முழைவாய் முதலைபற்று கரிராஜவாணுற்ற
முதுநோவா சறமெய்ப் படிந்தன
முதனூலி னெறிவிட்ட தனையோத வுரையிட்ட
முரணுட கனைமுக்க ணரனுக்கு சாபத்தை
முனைகூரா முகிரிற் பகிர்ந்தன
முனிமா தவர்களுக்கு மிமையோரதிபதிக்கும்
முழுவே தனைசெய்துட்ட வினமோ ரணைநொடிக்குள்
முளைவேரோ டறவெற்றி கொண்டன
முகிலாக மிசைபைத்த வனமாலை வளைநத்தம்
முறையே செவ்வலயத்தி ஞெளிவீச விருபக்கம்
மொயுமாகாய தறுப் புணர்ந்தன.

### நான்காமடி.

திருமூல வடிவத்தை மறையாது வெளியிட்ட
சிறுஜாதி யனைமெச்சு மெதிராஜ ருளமொத்த
திருவாரா தனைபெற் றுயர்ந்தன
சிரமீது கரம்வைத்து நெடியோ யெமையளித்தி
திருமா லெனுமவர்க்கு வரதா பயமுறச்செய்
திறல்வீறே பெருகித் திணிந்தன
சிறுசேய் மழலைபெற்ற வனைமார் செவியினித்த
செயனே னெனவழுக்கொள் வகையாவையு மடுத்த
சிறியேனு லையுமுற் றணிந்தன
செறிவேத மதுரித்த முநிமாறர் தமிழ்சொற்ற
திருவாய்மொழிகள் பச்சை நறுமாலை யொடுபெற்ற
திருநாரா யணர்பொற் புயங்களே.

### முதலடி.

(இ-ள்.) புருகூதன் ஒருமிக்க முகில் ஏவி - தேவேந்திரன் சப்தமேகங்களையு மொன்றுகூட்டியேவி, வருடித்த புனல் - பெய்யும்படி செய்த மழைநீரானது, காலிகளை அற்றை நலியாத வண்ணம்-(தாம்காக்கும்) பசுக்கூட்டத்தை அங்ஙனம் பெய்வித்த அக்காலத்தில் வருத்தாவண்ணம், மிக்கபொறைதாழா மலையைச் சுமந்தன - மிகவும் பாரமாகிய கோவர்தனகிரியை (ஓர்சிறுவிரல்நுனியில் குடையாய்) ப்பிடித்தன.

(புயங்கள்), எழுவாய். சுமந்தன, பயனிலை. மலை, செயப்படுபொருள்,

புயல்போலும் அளகத்தர் இடைமாதர் - மேகத்தை நிகர்த்த அளகபாரத்தையுடையவர்களாகிய ஆயர்மாதர்கள், தனைவைத்த புனையாடை கவர்வுற்று - கட்டியிருந்தவஸ்திரங்களை (யமுனைநதியிலாடக்களைந்து) கரையில் வைத்திருந்தவைகளைத்திருடி, மரமேறி அதில் இட்டு - புன்னைமரத்தின்மேலேறி அதிலொளித்துவைத்து, பொதுமாலாய் அவரைப்புணர்ந்தன-(அவர்கள்வந்து கேட்க அவர்களெல்லோருக்கும் விரகமேலிடும்படிசெய்து) ஒரேவண்ணமாய் அவர்களைப்புணர்ந்து ரமிக்கச்செய்தன.

அளகத்தரிடைமாதர், இருபெயரொட்டுப் பண்புத்தொகை. (புயங்கள்), எழுவாய். புணர்ந்தன, பயனிலை. அவர், செயப்படுபொருள்.

புனைசூது வகைகற்ற - மாயவகைகள் யாவுங்கற்ற, அசுராதிபகபக்கி-(கம்சனுலேவப்பட்ட) ஓரிராக்கதத்தலைவன் குரண்டக வுருக்கொடுவர, புனைமேனி கொடுவெற்றி கொளுவேன் என - அதின் குற்றமுள்ள காத்திரத்தைக்கொண்டே அதை வெற்றிகொள்வதாக, விரித்த புழைநீள்வாய் கிழி

யப்பிளந்தன - பிளந்த துளையுள்ள நீண்ட வாயானது கிழியும்படி, (அதின் துண்டத்தைப்பற்றி) இருகூறாக்கின.

கொடு, கருவிப்பொருளில்வந்த மூன்றாவதன்சொல்லுருபு. (புயங்கள்), எழுவாய். பிளந்தன, பயனிலை. வாய், செயப்படுபொருள்.

புகர்மாமதகரிக்கண் - (அக்கம்சனால் மற்றொருகாலத்தி லேவப்பட்ட குவலயாபீடம் என்னும்) குற்றமுள்ள பெரிய மதயானையின்கண்ணுள்ள, இருகோடு இற ஒடித்த - இரண்டு கொம்புகளையு மொடித்துவென்றன, புகழ்மாதிணைமணக்க - புகழ்பெற்ற நப்பின்னைப்பிராட்டியைத் திருமணம் புரிய, ஏருது எழினை அடர்த்த - எழெருதுகளையும் வென்றன, புவிமீது ஓர்தருவைக்கொணர்ந்தன - பூலோகத்திற்கு ஒப்பற்ற பாரிஜாதவிருக்ஷத்தை ஸ்ரீஸத்யபாமா மூகோல்லாஸார்த்தமாகக் கொண்டுவந்துநாட்டின.

"கரிக்கண்ணிருகோடு" என்பதில் முதலைக் கண்ணுருபுபொருந்தினமையின் சினைக்காகும் ஐயுருபும்; முற்றும்மையும் விகாரத்தாற்றொக்கன. ஒடித்த, அடர்த்த முற்றுவினைகள். (புயங்கள்), எழுவாய். ஒடித்த, அடர்த்த, கொணர்ந்தன, பயனிலைகள். கோடு, ஏருது, தரு முறையே செயப்படுபொருள்கள்.

இரண்டாமடி.

ஒருவாரிதியணைக்க - ஒப்பற்ற ஸேதுபந்தனஞ்செய்ய, வருணேசனை நினைக்க - வருணபகவானை நினைத்தமாத்திரத்தில், உடனே வருதல் அற்ற - அந்தக்ஷணத்தில் வராதொளித்திருந்த, அவன் ஆணவம் அடக்கி - அவன் கெர்வத்தைப் பங்கம்பண்ணி, ஒருகோலால் வளையப்புரிந்தன - ஓரம்பினால் வணங்கும்படிசெய்தன.

அணைக்க, அணை - (செய்கவை) என்னும்பொருளடியாகப்பிறந்த வினையெச்சம். (புயங்கள்), எழுவாய். வளையப்புரிந்தன, பயனிலை. (அவன்) செயப்படுபொருள்.

உருள் மாடவிகலைக்குள் - உழுந்துருளுஞ் சிறுவரைகாலத்திற்குள், அடர்மூலபலம் முற்றும் - நெருங்கிவந்தமூலபலசேனை யாத்யந்தமும், உரு மாறி - தத்தம்ரூபங்கள் மாறுதலாகி, அவர்கட்குள் அரியாகி - அவர்களுக்குள்ளாகவே (ஒவ்வொருவர் கண்ணுக்கும் மற்றவர்கள்) சத்துருவாகிய ஸ்ரீராமனாகத்தோற்றி, நனி நிறக உறழ் - (தங்களாலேயே தாங்கள் சாகும்படி) நன்கு நிறகச்செய்து பெருக்கத்தக்க, மோக அசுகம் உய்த்து இருந்தன - மோகனாஸ்த்ரப்ரயோகஞ்செய்து தூஷ்ணீம் பாவத்தை யடைந்திருந்தன.

மாடம், மாஷம் என்னும் வடமொழித்திரிபு. ஆசுகம், வடசொல்; சீக்ரம்செல்வதென்பது பொருள். (புயங்கள்), எழுவாய். இருந்தன, பயனிலை.

உயர்பாரத உயுத்தகளவீரர்கள் - உயர்ந்த பாரத யுத்தரங்கத்திலுள்ள வீரர்கள், வியக்க - அதிசயிக்கும்படி, ஒருவாசவனளித்த - ஒப்பற்ற இந்தி

ரன் தந்த, சுதனும் விஜயன் உற்ற - புதல்வனாகிய அருஜ்ஜுனன் ஏறியி ருந்த, உருள்தேர் ஆர்பரி - உருளைகளையுடைய தேரிற்கட்டிய ஸ்வேதவா ம்புரவிகளை, முன்துரந்தன - முற்காலத்திற்செலுத்தின.

(புயங்கள்), எழுவாய். துரந்தன, பயனிலை. பரி, செயப்படுபொருள்.

உரக ஆபரணன் - சர்ப்பாபரணனாகிய சிவபெருமானும், அத்திமுகன்- யானைமுகத்தையுடைய விநாயகனும், ஆறுமுகன் - ஆறுமுகங்களையுடைய சுப்ரமண்யனும், வெற்றி உடை காலை - போரில் அபஜெயப்படுங்காலத் தில், வரையொத்த புயம் ஆயிரமும் - மலைகளைப்போன்ற ஆயிரந்தோள்க ளும், ஒக்க உக - ஏககாலத்தி லுதிரும்படி, வாணாசுரனைக்கடிந்தன - வாணா சூரனை வென்றன.

உரக + ஆபரணன் = உரகாபரணன், வாண + அசுரன் = வாணாசுரன். இவைதீர் க்கசந்தி. (புயங்கள்) எழுவாய். கடிந்தன. பயனிலை. வாணாசுரன், செயப்படு பொருள்.

மூன்றாமடி.

முருகு ஊறும் மலர் மொட்டுவிரி - வாசனைவீசும்படியான புட்பங்கள் மலர்தலையுடைய, நீர்கொள் மடுவிற்குள் - நீர்நிறைந்த தடாகத்தில், மு ழைவாய் முதலைபற்று - துடுப்புள்ளவாயினால் முதலையாற்பிடிக்கப்பட்ட, கரிராஜவரன் உற்ற - கெஜேந்திராழ்வா னடைந்த, முதுநோவு ஆசு அற- பெருந்துன்பமானது சுவடற்றொழியும்படி, மெய்ப்படிந்தன - அவனது சரீரத்தின்மேற்படிந்து அபயாஸ்தமளித்தன.

முழைவாய், இதில் மூன்றனுருபுதொக்கது, இதற்குப்பொருள் குகைபோன்ற வாய் எனினுமாம். (புயங்கள்), எழுவாய். படிந்தன, பயனிலை.

முதல்நூலின் நெறிவிட்ட - வேதவிதிகளைக் கடந்தவனாய, தனை ஓத உனை இட்ட - (தேவர்கள்முதல்யாவரும்) தன்னையே துதிக்கும்படி (அவ் வேதம்புகல்வதாய்) அதற்குரையெழுதிய, முரண் ஆடகனை-வலிமையுள்ள இரண்யனையும், முக்கண் அரன் ஆகுசரபத்தை - திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானாகிய சரபத்தையும், முனைகூராம் உகிரில்பகிர்ந்தன - கூரிய முனைகளையுடைய நகங்களால் கிழித்தெறிந்தன.

தன்னையே என்பதின் பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற்றொக்கது. உகிரில், உருபு மயக்கம். (புயங்கள்,) எழுவாய். பகிர்ந்தன, பயனிலை. ஆடகன், சரபம், செயப் படுபொருள்கள்.

முனிமாதவர்களுக்கும் - மஹாஸீலராகிய ரிஷிகளுக்கும், இமையோர்- தேவர்களுக்கும், அதிபதிக்கும்-(இவர்கட்கரசனாகிய) இந்திரனுக்கும், முழு வேதனைசெய் துட்ட இனம் - முழுதிலுந் துன்பமிழைத்து வந்ததுஷ்ட சமூகங்கள், ஓர் அரைநொடிக்குள் - ஒரு அரைக்ஷணத்தில், முலைவேரோடு

அற - முளைவேரோடு மறைந்துபோகும்படி, வெற்றிகொண்டன - வேண்டுங்காலெல்லாம் ஜயம் கொண்டன.

வேரோடு, இங்கு முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. (புயங்கள்), எழுவாய். வெற்றிகொண்டன, பயனிலை.

முகில் ஆகமிசை பைந்தவளமாலை - மேகநிறத்தையுடைய திருமார்பிலணிந்த பச்சைத்துழாய் மாலையும், வளை - (வலப்பக்கத்திற் செவ்விய) சக்கரமும், நக்கம் - (இடப்பக்கத்தில் வெள்ளிய) சங்கமும், செவ்வலயத்தின் - அழகிய தோளணியில், முறையே ஒளிவீச - அததற்குரிய பச்சை சிவப்பு வெள்ளைக்கிரணங்களை எதிரெதிராய் வீசுவதால் (இவைகள் ஒன்றி), இருபக்கம் மொய்ப்பும் ஆகாய தநுப்புனைந்தன - இரண்டுபாரிசத்திலும் இந்திர தநுவின் வடிவங்களை ஒத்திருந்தன.

(புயங்கள்), எழுவாய். புனைந்தன, பயனிலை. ஆகாயதநு, செயப்படுபொருள்.

## நான்காமடி.

திருவுரு வடிவத்தை - (இத்திருப்பதியில்) மூலதிவ்ய மங்கள விக்ரகத்தை, மறையாது வெளியிட்ட - மறைந்துபோகாவண்ணம் வெளிப்படுத்தியருளிய, சிறுசாதியனை - கீழ்சாதியாராகிய திருக்குலத்தாரை, மெச்சும் - ஆசிரித்துக்கடாக்ஷித்த, எதிராஜர் உளம் ஒத்த - எங்கள் ராமாநுஜ எதீந்திரரானவர் மனப்பூர்வகமாய் சேமணஞ்செய்த, திரு ஆராதனைபெற்று உயர்ந்தன - திருவாராதனையை யங்கீகரித்து உன்னதமடைந்திருக்கின்றன.

வெளியிட்ட எதிராஜர் எனக் கூட்டுக. ஆராதனை, ஆராதனம் என்னும் வடமொழித்திரிபு, தேவபூசை என்பது பொருள். (புயங்கள்), எழுவாய். உயர்ந்தன, பயனிலை.

சிரமீது உரம்வைத்து - சிரசின்மேற் கரங்களைக்கூப்பி, நெடியோய் திருமால் எம்மையளித்தி என்னுமவர்க்கு - நெடியவனே ஸ்ரீயப்பதியே எம்மைக்காத்தருள்வாய் என்னும் அநந்யகதிகட்கு, வரதம் அபயம் உறச்செய் - வரதத்தையும் அபயத்தையும் லபிக்கச்செய்கின்ற, திறல் மீறு பெருகித் திணிந்தன - மிக்கவல்லாக்யத்தையே அதிகரித்து உறுதியடைந்தன.

(புயங்கள்), எழுவாய். திணிந்தன, பயனிலை.

சிறுசேய்மழலை - சிறியதோர் குழந்தையினது மழலைச்சொல்லானது, பெற்ற அன்னைமார் செவி இனித்த செயல் நேர் என - ஈன்றதாய்மார்களுடைய காதுக்கு இனிமையாயிருக்குஞ்செய்தியை நிகர்க்குமென்றுசொல்லுகிறபடி, வழுக்கொள் வகையாவையும் அடுத்த - குற்றமென்றுகொள்ளத்தக்கவகைகளெல்லாம் அமைந்திருக்கின்ற, சிறியேன் நூலையும் - சிறியவனாகிய இவ்வடியேனாலாக்கப்பட்ட இப்புன்மாலையையும், உற்று அணிந்தன - (பரிவினால்) ஏற்றுப்புனைந்துகொண்டன.

செயனேனெனச் சிறியேனுலையு முற்று எனக்கூட்டுக. நூலையும், என்பதில் உம்மை இழிவுசிறப்பு; புனைதற்கொழிலை யேற்கும் வருமொழியாகிய புயங்களைச் சிறப்பிக்க வந்ததெனின் உயர்வு சிறப்பாம். (புயங்கள்) எழுவாய். அணிந்தன, பயனிலை. நூல், செயப்படுபொருள்.

செறிவேதம் - (பரஸ்வரூப) விஸ்தாரகமான வடமொழிவேதத்தை, மதுரித்த முநிமாறர் - மதுரமானவாக்கினரும் மநநசீலருமாகிய சடகோபாழ்வாரானவர், தமிழ்சொற்ற திருவாய்மொழிகள்-தென்மொழியிற்சொன்ன திருவாய்மொழிகளை, பச்சை நறும்மாலையொடு பெற்ற - பசியவாசனை மணக்குந் திருத்துழாய்மாலையோடு கலந்திருக்கப்பெற்ற, திருநாராயணர் பொன் புயங்களே - திருநாராயண ஸ்வாமியினது அழகிய புயங்கள்தான் (எ-று.)

புயங்கள், எழுவாய். பயனிலையும், செயப்படுபொருளுங், கீழ் காட்டப்பட்டன ()

நேரிசைவெண்பா.

௮. புயங்கமுடி மேனடித்த பொன்னம் புயத்தாள்
இயங்கநின்பால் மேவ விருக்தி—மயங்கலின்றி
நாராயணாய நமவென்ன நன்னெஞ்சே
வாராயணுய மன்வா ரான்.

(இ-ள்.) புயங்கமுடிமேல் நடித்த - காளிங்கன் பணமகுடத்தின்மீது தாண்டவமாடிய, பொன் அம்புயத்தாள் - அழகிய பாதாரவிந்தங்களை, இயங்க நின்பால் மேவ இருத்தி - உன்னிடத்திற் பொருந்தியிருக்கும்படியாகச் சேர்த்து, மயங்கல் இன்றி - சோர்வில்லாமல், நாராயணாய நம என்ன - நாராயணா உனக்கு நமஸ்கரிக்கின்றேன் என்றொருதரஞ்சொல்ல, நல்நெஞ்சே வாராய் - என் நல்லமனமே நீ வருவாயாக (எனெனில்), அணுய் யமன் வாரான் - (அதன்பிறகு) உன்னை நெருங்கி யமன்வரமாட்டான் (தூரத்தே நின்று தெண்டன் சமர்ப்பித்துப்போவான் என்றபடி) (எ-று.)

காளிங்கன்மேல் நடித்தசமயம் திருவடிக்குக் குணம்வலிதெனாது "பொன்னம்புயத்தாள்" என விசேஷித்தது, அதுவே ஆச்ரிதா ளிதயகமலத்துறுங்கால் மெலிதுமாமென்பது பெறற்கு. யானெனதென்னும் அஹங்கார மமகாரங்கட் காச்ரயமானகெடுமனதை "நன்னெஞ்சே" என விளித்தது, அந்தஸ்வாதந்தர்யங்களை ஹிதங்கூறிக் கழித்துச் சரணாகதம் பண்ணற்கென்க. நெஞ்சே (நீ) எழுவாய். வாராய். பயனிலை. (௮)

கட்டளைக்கலித்துறை.

௯. வார்கொண்டயாதவ யால் வரைமேற்றுளி வான்முகில்போல்
சீர்கொண்டமேனியர் நாராயணர்தந் திருமுகமும்
ஏர்கொண்டசெந்துவர் வாயுநகையு மிருவிழியும்
பார்கொண்ட சேவடி யுந்தமியேனுட் பதிகொண்டவே.

(இ-ள்.) வார்கொண்டயாதவ மால்வரைமேல் - நீட்சியாய் வளர்ந்த பெருமை மிக்கயாதவகிரியின்மேல், துளிவான்முகில்போல் - பொழியும் உயர்ந்தமேகத்தைப்போல, சீர்கொண்டமேனியர் - (அடியார்களுக்கு ப்ரம் ஹானந்த ரசத்தைத் துளிக்கின்ற) சிறப்புவாய்ந்த திருமேனியராகிய, நாரா யணர்தம் - திருநாராயணரது, திருமுகமும் - சுந்தரவதநாரவிந்த விலாச மும், ஏர்கொண்ட செந்துவர்வாயும் - அழகிய செம்பவளம்போன்றவாயும், நகையும் - மந்தகாசமும், இருவிழியும் - கருணைநிறைந்த விசாலமான கண் களும், பார்கொண்ட சேவடியும் - பூமியை (வானத்தை) யளந்துகொண்ட செவ்விய திருவடிகளும், தாமேயெனுள்பதிகொண்ட - அடியேன் (சேவித்த நாள்தொடங்கி) மனதிலவிச்சிந்நமாகப் பதிந்திருக்கின்றன (எ-று.)

முகம், வாய், நகை, விழி, சேவடி, எழுவாய். பதிகொண்ட, பயனிலை. (௯)

## எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியச் சந்தவிருத்தம்.

### இரங்கல்.

௧௦. கொண்டல்பொழிந்தநறும்புனல்விஞ்செதிருன்றுறுபொன்றரளம்
மண்டலமெங்குமிலங்கிவளம்பெற வண்டலிடும்பதியார்
இன்றினும்வந்திலர் தஞ்சொனினைந்திலரென்சொலுகென்மடவீர்
தென்றலிவர்ந்திவண் வந்துமதன்கணை பெய்துசெயுந்துயரே.

(இ-ள்.) கொண்டல் பொழிந்த நறும்புனல் - மேகங்கள்பெய்த நறிய நீரானது, விஞ்சு எதிருன்று உறுபொன்தாளம் - விஸ்தாரமாக எதிகிரியி லுள்ள பொன்னையும் முத்துகளையும், மண்டலம் எங்கும் இலங்கிவளம் பெற - பூமண்டலமெல்லாம் செழிப்புற்று வளப்பமுறும்படி, வண்டல் இடும்பதியார் - வண்டலிடத்தக்க (திரவியவண்மைநிறைந்த செல்வமுள்ள) பதியினையுடைய திருநாராயணர், இன்று இன்னும் வந்திலர் - இற்றைத் தினத்தில் இதுவரையினும் வாராதாயினர், தம்சொல் நினைந்திலர் - (வருவ தாகத்தந்த) தம்வாக்தத்தத்தையும் மறந்தவராயினர், (ஆகையால்) தென் றல் இவர்ந்து - தென்றற்றேரையூர்ந்து, இவண் வந்து - இவிடத்திற்குவ ந்து, மதன்கணைபெய்து - மன்மதனுனவன் மலர்ப்பாணங்களைச்சொரிந்து, செயும்துயர் - செய்யும் துன்பத்தை, மடவீர் - தோழிகாள், என்சொலு கென் - என்னவென்று யானெடுத்துரைப்பேன் (எ-று.)

திருநாராயணர் இன்று வந்திருந்தால் தனைப்போன்ற நாயகிகட்கெல்லாம் தான் தலைவியாயாகத்தக்க செல்வமுள்ளவளா யாக்கியிருப்பார் என்பது தோன்ற "பொன் றரளம் வண்டலிடும்பதியார்" என்றாள். அப்படிப்பட்ட செல்வத்தைத் தனக்குக் கொடுப்பதாக வாக்களித்தனர் என்பது விளங்கற்குத் "தஞ்சொனினைந்திலர்" என் றாள். இத்தகைய செல்வத்தை விரும்பாது தான் அவர் தரும் இன்பத்தை மாத்தி ரம் விரும்பின இஷ்டநாயகியாதலின் "மதன்கணைபெய்து செயுந்துயர் என்சொலு கென்" என்று தன் விரகதாபமொன்றையே சொல்லித் துக்கிக்கின்றாள். (நான்) எழுவாய், என்சொலுகென், பயனிலை. துயர், செயப்படுபொருள். (௧௦)

## கொச்சகக்கலிப்பா.

கக. துயரொழிந்த பவவாழ்க்கைத் தொடக்கறநின் றொழும்பனெனப்
பெயர்புனைந்துன் விழுத்தொண்டைப் பெறுமந்நாளெந்நாளோ
உயரநின்றிவ் வுலகளந்த வுத்தமனே மும்மலத்தின்
மயர்வகன்றோர் தொழுமேலை வளநகரில் வளர்பவனே.

(இ-ள்.) துயர் ஒழிந்த - துன்பமற்ற, பவவாழ்க்கைத் தொடக்கு அற - பிறவியாகிய வாழ்க்கைக்குக் காரணமாகிய வினைகளற்று, நின்தொழும்பன் எனப்பெயர்புனைந்து - தேவரீரது அடியானெனவழைக்கப்படும் படியாய், உன்விழுத்தொண்டைப்பெறும் - உமது சிறந்த பணிவிடைகளைச்செய்யும் பாக்கியம் கிடைக்கும், அந்நாள் எந்நாளோ - அந்தச் சிறந்த நாள் எந்த நாளோ?, உயரநின்று - ஓங்கிவளர்ந்து, இவ் உலகு அளந்த உத்தமனே - இந்தலோகத்தை ஓரடியாலளந்து கொண்ட பரமபுருடனே, மும்மலத்தின் மயர்வு அகன்றோர்தொழும் - மும்மல மயக்கமற்றவர்களால் துதிக்கப்பட்ட, மேலைவளநகரில் வளர்பவனே - மேலைக்கோட்டையாகிய வளமைநிறைந்த திருப்பதியில் வாசமாயெழுந்தருளியிருக்கும் திருநாராயண ஸ்வாமியே (எ-று.)

மும்மலமாவது ஆணவம், மாயை, காமியம். "நின்றொழும்பனெனப் பெயர் புனைந்து" என்பதற்கு தேவரீர்க்குத் தொண்டனெனப்பட்டுமது திருநாமங்களை யுருப்போட்டு எனப்பொருளுரைக்கினுமாம். ஓ, கழிவு. அந்நாள், எழுவாய். எந்நாளோ, பயனிலை. (கக)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியச் சந்த விருத்தம்,
## இரங்கல்.

கஉ. வளர்த்திடு கிளிக்கு மெகினக்கு மயிலுக்குமென்
மனத்துய ரனைத்து முரைசெய்
துளக்குறை வகற்றிட விருப்பொடு விடுத்திட
உவப்பெதி கிரிக்க ணரியைக்
களிப்பொடு மலர்ப்பதம் வழுத்தியடி யட்கவர்
கருத்தினை யுரைக்க மருவா
ஒளிக்குமத ரத்தினய னத்திலுரு வத்தினில்
உரத்தொடு தரித்த வவனே.

**(இ-ள்.) வளர்த்திடு கிளிக்கும் எகினக்கும் மயிலுக்கும் - நான் ஊட்டி வளர்த்துவருங் கிஞ்சுகத்துக்கும் அன்னப் புள்ளுக்கும் மஞ்ஞைக்கும், என்மனத்துயர் அனைத்தும் உரைசெய்து - என்மனதிற்குடிகொண்டிருந்த துயரங்கள் யாவற்றையுஞ் சொல்லி, உளக்குறைவு அகற்றிட - என்னுள்ளத்துள்ள குறையை நிவர்த்திசெய்துகொள்ள, விருப்பொடு விடுத்திட-**

மகிழ்ச்சியோடு தூதனுப்ப, உவப்பு எதிகிரிக்கண் அரியை - உயர்ந்த எதிகிரியில் நித்யவாசம்பண்ணுந் திருநாராயணனை, களிப்பொடு மலர்ப்பதம் வழுத்தி - மகிழ்ச்சியோடு மலரடியிற்றாழ்ந்து, அடியட்கு அவர் கருத்தினை உரைக்க மருவா-அடியாளுக்கு அவர் திருவுள்ளக்கிடையைச்சொல்ல இவ்விடத்திற்கு வாராதனவாய், ஒளிக்கும் அதரத்தில் - பிரகாசிக்கும் இதழினும், நயனத்தில் - கண்களினும், உருவத்தினில் - திருமேனியினும், உரத்தொடு தரித்த அவனை - ஈடுபட்டுறுதியாய் அவிடத்திலேயே நின்றுவிட்டன. (எ-று.)

கிளி, அதரம்; எகினம், நயனம்; மயில், உருவம்; இவைபெயரும் பெயருமாய் வந்த முறைநிரனிறை. இங்குக்காட்டிய எம்பெருமானது திவ்யாவயவங்களை, அவைகளின் உபமானப்பொருள்களைப் பரிந்துத் தூதாகச்சென்றவைகள் அப்பொருள்களிற் றத்தமக்குரிய ஸ்வாபாவிக விருப்பமேலீட்டால் ஈடுபட்டு நின்றவெனக் கொள்க. எகினக்கு, அத்துச்சாரியை தொகுத்தல். அனைத்தும், இதில் உம்மை, முற்றுப்பொருட்டு. மருவா, முற்றெச்சம். ஒளிக்கும், உரிச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்சம். ஈற்றேகாரம், தேற்றம். அவை, எழுவாய். தரித்த, பயனிலை. (கஉ)

## கட்டளைக்கலித்துறை.

கங. அவனியி லன்னை யகட்டை யல்லற்படுப் போருந்தம்மை
அவமுறச் செய்யு மசடரு மாகுவ ராசகன்ற
உவண னளித்த முடிபொறுத் தேயிவ் வுலக முய்யப்
பவனி வருந்திரு நாராயணர் புகழ் பாடிலரே.

(இ-ள்.) ஆசு அகன்ற உவணன் அளித்த முடிபொறுத்து - குற்றம் நீங்கிய கருடாழ்வான் வணங்கித் தரித்த வைரமிழைத்த முடியைத்தரித்து, இவ்வுலகம் உய்யப் பவனிவரும் - இவ்வுலகத்தாருய்யும் வண்ணம் சேவை சாதிக்க உலாப்போகின்ற, திருநாராயணர் புகழ்பாடிலரே - திருநாராயணருடைய கீர்த்தியைக் கொண்டாடித் துதியாதவர்தான், அவனியில் - பூலோகத்தில், அன்னை அகட்டை - தாயார்கர்ப்பத்தை, அல்லல்படுப்போரும் - துன்பப்படுத்துவோரும், தம்மை அவம் உறச்செய்யும் அசடரும் - தம்மை நிஷ்ப்ரயோசகர்களாகச் செய்துகொள்கின்ற பாவிகளும், ஆகுவர் - ஆவார்கள், (எ-று.)

ஆசு அகன்ற முடிவு எனக் கூட்டுக. பாடிலரே என்பதில், ஏகாரம் தேற்றம். உலகம், ஆகுபெயர். பாடிலர், எழுவாய். ஆகுவர், பயனிலை. (கங)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கச. பாடில்பாழ்மடப் பலமதப் படுகுழி பட்டுழலுதி நெஞ்சே
கோடில் வான்புகழ் நாரணர் சினகரங் குறுகிலை குலத்தொண்டர்த்
தேடி நம்மெதிபதிகுணக் கடலினிற் றிளைத்திலை தமிழ்வேதம்
பாடி யாடிலை யெங்ஙன முய்தியாற் பழவினை தொலைந்தம்ம.

(இ-ள்.) பாடுஇல் பாழ்மடப் பலமதப் படுகுழி-யாதொரு பிரயோசனத்தையுந் தரத்தக்கனவல்லாத நாஸ்திக முதலிய அஜ்ஞாநாந்யதாஜ்ஞாநங்களைப் பெருக்கும் பலமதங்களாகிய படுகுழியில், பட்டு உழலுதிநெஞ்சே-(மதத்தர்தோர் யானைபோன்று அலைந்து) வீழ்ந்து சுழல்வாயாகிய நெஞ்சமே, சேரடு இல்வான்புகழ் - வரம்பிகந்த பெருமைமிக்க கீர்த்திபெற்ற, நாரணர் சினகரம் குறுகிலை - திருநாராயணர் சந்நிதியை நெருங்கிலாயாயினை, குலத்தொண்டர்த்தேடி - ஸ்ரேஷ்டராகிய பாகவத கோஷ்டியைத்தேடி, நம் எதிபதி குணக்கடலினில் திளைத்திலை - நமது யதிராஜராகிய எம்பெருமானாரது திவ்ய திருக்கல்யாண குணஜநிசய சாகரத்திற்படிந்து அனுபவித்தாயில்லை, தமிழ்வேதம்பாடி ஆடிலை - ஆழ்வார்கள் பாடியருளிய திருவாய்மொழியைச் சேவித் தீடுபட்டாநந்தநர்த்தனஞ் செய்தாயில்லை, பழவினை தொலைந்து - (இங்ஙனமாயவுனக்கு) முன் ஜன்ன சேடம்போய், எங்ஙனம் உய்தி - நீ எவ்வண்ணங் கடைத்தேற விருக்கின்றனை (எ-று.)

தொண்டர், இரண்டாம்வேற்றுமைத்தொகை. இங்குவலி விகாரத்தான்மிக்கது. ஆல், அசை. அம்ம, இரக்கக்குறிப்பு. (நெஞ்சேசீ) எழுவாய். எங்ஙனம் உய்தி, விறைப்பயனிலை. (௧௪)

## கட்டளைக்கலித்துறை.

௧௫. தொலையாத துன்பத் தழைத்த கரிக்கெதிர் தோன்றினவெள்
ளலையார் பயோததி நேர்வாவிக ணிறை யாதவமா
மலையா தரித்து வதிந்தன கோதமன் மாதுடலம்
சிலையான சாபந் தவிர்த்தன நாரணர் சேவடியே.

(இ-ள்.) நாரணர்சேவடி - திருநாராயணரது செவ்வியதாள்கள், தொலையாத துன்பத்து அழைத்தகரிக்கு எதிர்தோன்றின - தேவதாந்தரங்களால் தொலையாத துன்பத்தழுந்தி யோலமிட்டழைத்த கஜேந்திராழ்வான் முன் ப்ரத்யக்ஷமாயின, வெள் அலை ஆர் பயோததிநேர்வாவிகள் நிறை - வெள்ளிய அலைகளடர்ந்த திருப்பாற்கடலே நிகர்த்த தடாகங்கள் நிறைந்த, யாதவமாமலை ஆதரித்துவதிந்தன - மாட்சிமைபெற்ற யாதவமலையை விரும்பி யதன்மேற்றங்கியிருக்கின்றன, கோதமன் மாது உடலம் சிலையான சாபம் தவிர்த்தன - கௌதம ரிஷியின் பத்நியாகிய அஹல்யையின் தேகங் கல்லாய்ச் சமைந்த சாபத்தை விமோசனஞ்செய்தன (எ-று.)

சேவடி, எழுவாய். (௧) தோன்றின, (௨) வதிந்தன, (௩) தவிர்த்தன, பயனிலைகள். (௩) சாபம், செயப்படுபொருள். (௧௫)

## கட்டளை மண்டலக் கலிப்பா.

### மடக்கு.

௧௬. அடிமை யேற்றதஞ் சக்ரநாகமே
அடிக ளேற்றதஞ் சக்கரநாகமே

குடை கவிழ்த்தது மஞ்செறிநாகமே
கோடி வைத்தது மஞ்செறிநாகமே
இடை தரித்தது மாதங்கநாகமே
எய்த்தழைத்தது மாதங்கநாகமே
நடஞ்சரண்புரி யாதவநாகமே
நாரணன் புரி யாதவநாகமே.

(இ-ள்.) அடிமை ஏற்றது - (திருநாராயணர் சக்ரவர்த்தித் திருமகளுக்காக் கானஞ்சென்ற காலத்தில் வலியவந்து பக்திமேலீட்டால்) திருவடிக் கைங்கர்யத்தை பெற்றுக்கொண்டது, அஞ்சு அக்கரநாகமே - பஞ்சாக்ஷரத்திற் கதிபதியாகிய சிவபெருமானது அம்சமாகிய அனுமானே, அடிகள் ஏற்றது - (அவர்வாமனனாகவந்து) திருவடிகளாலளந்து கொண்டது, அம்சக்கரம் நாகமே - அழகிய பூமியையும் ஆகாயத்தையுமே, குடைகவிழ்த்ததும் - (அவர் கன்னனையவதரித்து) குடையாகக் கவிழ்த்தேந்தியதும், அம்செறி நாகமே - மேகங்கள்தவழும் கோவர்த்தனகிரியாகிய மலையையே, கோடிவைத்ததும் - (அவர் ஆயர்மாதர்களது) வஸ்திரங்களைக் கவர்ந்தொளித்து வைத்ததும், மஞ்சு எறிநாகமே - சுற்றிலும் அழகைவீசும் புன்னைமரத்தின் கண்ணே, இடைதரித்ததும் - (அவர்) இடையில் உடுத்தியிருப்பதும், மாதங்கநாகமே - அழகிய பீதாம்பரத்தையே, எய்த்து அழைத்ததும் - துன்பத்தழுந்தி (அவரை) ஓலமிட்டுக் கூவியதும், மாதங்கநாகமே - பர்வதாகாரமாகிய ஒரு யானையே, நடம் சரண்புரியாத அந்நாகமே - (அவர்) நர்த்தனஞ் செய்தது வணங்காத அந்த (காளிங்கன் என்னுஞ்) சர்ப்பத்தின் (பணாமுடியின்) கண்ணே, நாரணன்புரி - அத்திரு நாராயணர் எழுந்தருளி யிருக்குமிடம், யாதவநாகமே - யாதவகிரியே (எ-று.)

அஞ்சக்கரம், அன்மொழித்தொகை. இச்செய்யுளில் செயப்படுபொருளைச் செய்ததுபோலத் தொழிற்படக்கூறும் வழுக்கின்படி.—

| எழுவாய். | பயனிலை. |
|---|---|
| (நாரணனது) அடிமை | அஞ்சக்கர நாகமேற்றது |
| சக்கரம் நாகம் | (நாரணன்) அடிகளேற்றது |
| அம்செறி நாகம் | (நாரணன்) குடைகவிழ்த்தது |
| கோடி | (நாரணன்) வைத்தது |
| மாதங்க நாகம் - பீதாம்பரம் | (நாரணன்) இடைதரித்தது |
| (நாரணன்) | மாதங்க நாகமழைத்தான் |
| நாகம் | (நாரணன்) நடம் (செய்தது) |
| நாரணன்புரி | யாதவ நாகம். |

(கசு)

## நேரிசைவெண்பா.

கஎ. நாகமலை வானடித்த நற்றுளை யென்முடிமேல்
ஆகமலை வான மைத்திட்டு—மாகமலை

மேலைக்கோட்டைப்பதியான் மேவத் தலையிலயன்
கோலைக்கோட்டைப்பதியான் கோ.

(இ-ள்.) மாகமலை - அழகிய பெரியபிராட்டியாருக்கும், மேலைக்கோட்டை - மேலைக்கோட்டைக்கும், பதியான் - நாயகராகிய திருநாராயணர், நாகம் மலைவான்நடித்த நல்தாளை - காளிங்கன் முடிமேல் அவனை வெல்லுமாறு பாய்ந்தாடிய திருவடிகளை, என்முடிமேல் - அடியேனது சிரசின்பேரில், ஆகம் அலைவான் அமைத்திட்டு - என் ஜனனம் மாயும்படிபொருத்தி, மேவ - விரும்பிக் கடாக்ஷிப்பரேல், அயன் - பிரமனெனவன், தலையில் - என்தலையில், கோலை கோட்டைபதியான் - தன்னெழுதுகோலால் லிபியைப்பதிக்க மாட்டான் (எ-று.)

காளிங்கன் மேற்பாய்ந்த வன்மையானதாள் வணங்கிய பின்னர், அவனுக்கு நன்மையைப் பயத்தலின் "நற்றாள்" என்றும். ஆகம், ஜநநத்தின் காரியமாதலின், காரியவாகுபெயர். மாகமலை என்பதை, மா கம் அலை எனப்பிரித்து, அழகிய மேகம் படரும் என மேலைக்கோட்டைக்கு விசேடணமாக்குவது மொன்று. பதி யான் மேவ, பதிக்கு யான் செல்ல எனவுரைக்கினுமமையும். கோலை உருபுமயக்கம். கோ, அசை. அயன், எழுவாய். பதியான், பயனிலை. கோல், கோடு செயப்படுபொருள்கள். (௧௭)

### கட்டளைக்கலித்துறை.

௧௮. கோகனகம்பத்திலகு பொன்மேனியன் கோமகற்காய்
மாகனகம்பத்தில் வந்தவன்யாதவ மாமலையில்
ஏகனகம்பத்தி வெம்பிடவெய்தவ னிந்திரையாள்
ஆகனகம்பத்தி யானையுமாறெனை யாண்டவனே.

(இ-ள்.) கோகனகம்பத்து இலகுபொன்மேனியன் - ஆங்காங்கு மலர்ந்து வெவ்வேறுதிசயமுளவாய பத்தரவிந்தங்கள் பிரகாசிக்குந் திவ்யநீலவண்ணத் திருமேனியன், கோமகற்காய் மாகனகம்பத்தில் வந்தவன் - தானவர்க்கரசனாகிய இரணியனுக்கு மகவாயுதித்த பிரகலாதாழ்வானது சம்ரக்ஷணார்த்தமாகப் பெருத்ததோர் திரண்ட கம்பத்தினிடமாக அழகிய சிங்கமாக உதித்தவன், யாதவமாமலையில் ஏகன் - மாட்சிமைபெற்ற யாதவகிரியின்கண் விளங்கும் அத்விதீயனான எம்பெருமான், நகு அம்பு அத்தி வெம்பிட எய்தவன் - வருணனதுடலம் வாடும்படியாகப் பிரகாசிக்கும் பாணத்தை (ச்சேதுபந்த நார்த்தமாக)த் தொடுத்தவன், இந்திரை ஆள் ஆகன் - லக்ஷ்மீ ஆட்சியாகக்கொண்ட வக்ஷஸ்த்தலத்தையுடைய நாராயணன், (இத்தகைய பரமபுருடன்றான்) அகம்பத்தியால் நையுமாறு எனை ஆண்டவன் - அடியேன் மனதையவன்றிருத் தொண்டினிடத் தன்பினாலுருகும்படி திருத்தியாட்கொண்டவன். (எ-று.)

ஏகனகம்பத்திவெம்பிட வெய்தவன் என்பதை ஏகன் என்றபின் அ, கம், பத்தி வெம்பிட, எய்தவன் எனப் பிரித்துப் பிராட்டியைச் சிறையிலிட்ட அந்த தன்

மார்க்கணாகிய ராவணனது தலைவரிசையானது வாடி யுதிரும்படி பாணந்தொட்டவன் எனப் பொருள்கொள்ளினுமாம். இங்கு அக், கம் என்பது அகம் எனத்தொகுத்த தென்க. பொன் மேனியன் என்றதனால் சாந்தவுருவத்தன் என்றும், கம்பத்தில் வந்தவன் என்றதினால், அன்பர்பக்கலிற்சாந்த வுருவமுள்ளானாயினும், அவர்களிடத் தபசாரப்படுவோர் பக்கலில், உக்ரரூபமுள்ளானெனவும்; நகம்பத்தி வெம்பிடவெய்தவன் என்றதனால் தன்னிடத்தபசாரப்படுமவர்க்கு வெம்பத்தக்க பாணமுடையவனென்றும்; அந்த வுடனே இந்திரையாள் ஆகன் என்றதனால் அவ்வபராதிகள் மனந்திரும்பிச் சரணாகதிபண்ணினால் அவர்களையும் பிராட்டியின் புருஷகாரத்தால் ரக்ஷிக்கு மிரக்கமுடையவனென்றுங் குறிப்பாயாவதைக்காண்க. இக் கல்யாண குணங்கள் யாதவமாமலையிலேகனுக்குளவென அரிமாநோக்க நிலையாலாவது முணர்க. "கோமகதற்காய் மாகன கம்பத்தில் வந்தவன்" என்பதற்கு பிரகலாதாழ்வானது சம்ரக்ஷணார்த்தமாய் என்பதல்லாமல் இரணியசம்ஹாரார்த்தமாயும் நரசிம்ஹாவதாரமெடுத்தவன் என்று எஞ்சிநின்றதையுங்கொள்க.

கோகனகம் பத்தாவன— "கடல்விளிம்புடுத்த கண்ணகன் ஞாலமுடன்முழுதளந்தது ஓர்தாமரை. வகிரிளம்பிறையான் வார்சடை தேங்கப் பகீரதி கான்றது ஓர் பங்கேருகம். யாவையும் யாரையும் படைக்க நான்முகக்கோவை யீன்றது ஓர் கோகனகம். திருமகட்கு இனிய திருமனையாகிப் பருமணி இமைப்பது ஓர்பதுமம். சடைத்தலைதாழ்த்துச் சங்கரன் இரப்பமுடைத்தலை தவிர்த்தது ஓர்முளரி. ஆங்கு மண்டோதரி அணிந்த மங்கல நாண்வாங்கலில் வாங்கியது ஓர் வனசம். விரிந்தபுகழ் இலங்கைவேந்தற்குத் தென்றிசைபுரிந்து அருள்மலர்ந்தது ஓர் புண்டரீகம். மண்டிணிஞாலமும் வானமும் உட்பட அண்டம் உண்டு உமிழ்ந்தது ஓர் அம்போருகம். கடைசிவந்துஅகன்று கருமணிவிளங்கி இடைசிலவரிபரந்து இனியவாய் நெடியவாய் இன்பத்தழீஇயன இருகமலம்." இவைமுறையே எம்பெருமானது வலப்பாதம், இடத்திருவடி, உந்தி, மார்பு, வலக்கரம், இடதுகை, திருமுகம், வாய், திருக்கண்கள் ஆகிய இவ்வவயவங்களைக் குறிப்பித்தலையறிக. ஸ்ரீமந்நாராயண னவதரிக்கப்பெற்ற பெருமைத்தாதலின் "மாகம்பம்" என்றும். அத்தி, அதற்கதிபனாகிய வருணனை யுணர்த்திநின்றது. இது அப்தி என்னும் வடமொழித்திரிபு. மேனியன், வந்தவன், ஏகன், எய்தவன், ஆகன், எழுவாய். ஆண்டவன், பயனிலை. என்னை, செயப்படுபொருள். (௧௫)

கலிநிலைத்துறை.

௧௬. ஆண்டவனம் புள்ளின்வாய் கீண்டவன்பாண்
டவன் சரத்தாலன்றெறிந்த
காண்டவன்கா ளிங்கன்முடித் தாண்டவன்மா
வலிபால்மண் காதலித்து
நீண்டவன்மா மணிமார்பிற் பூண்டவன்வாழ்
யதுகிரிப்பொன் னிலயமெய்தி
மீண்டவன்றே சரண்புகுந்தே னவன்பாத
மலரென்முடி மேலணிந்தே.

(இ-ள்.) ஆண்டவன் - இரக்ஷகன், அம்புள்ளின் வாய் கீண்டவன்- அழகிய உருக்கொடுவந்த குரண்டகத்தின் வாயைக் கிழித்தவன், பாண்டவன் சரத்தால் அன்று எரித்த காண்டவன் - பாண்டுபுத்ரனாகிய விஜயனது பாணத்தால் கண்ணனாயவதரித்தகாலத்தில் அக்கினிபகவானுக் காஹுதி கொடுத்தவன், காளிங்கன்முடித் தாண்டவன்-காளிங்கனது பணாமுடியில் தாண்டவமாடியவன், மாவலிபால் மண்காதலித்து நீண்டவன்-(வாமனாவதாரமெடுத்து)மாவலியிடத்து மூவடிமண் வேண்டி மண்ணும்விண்ணு மளந்துகொள்ள ஓங்கிவளர்ந்தவன், மாமணிமார்பில்பூண்டவன்-அழகிய கௌஸ்துபரத்நத்தை மார்பிற்றரித்தவன், வாழ் யதுகிரிப் பொன் நிலயம் எய்தி - (இத்தகைமைவாய்ந்த) திருநாராயணன்வீற்றிருக்கும் யாதவகிரிக்கண்ணிலகுந்திருக்கோயிலினுட்புகுந்து, மீண்ட அன்றே-(விஷயாந்தரங்களினின்று மவனருளால் மனந்) திரும்பியவற்றைத் தினமே, அவன்பாதமலர் என்முடிமேலணிந்து சரண் புகுந்தேன் - அவனது திருவடியிலருச்சித்த மலரை அடியேன் சிரசிற்சூடி அடைக்கலம்புகுந்தேன் (எ-று.)

மாமணி என்பதற்குப் பெரியபிராட்டியையும், கௌஸ்துபத்தையும் எனப் பொருள்கொள்ளலுமாம். அணிந்து, அலங்கரித்து என்றுமாம். ஏகாரங்களில், முன்னது தேற்றம். பின்னது, அசை. (நான்) எழுவாய். சரண்புகுந்தேன், பயனிலை.(கஅ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியச் சந்தவிருத்தம்.
இரங்கல்.

உ௦. மேலணிந்த துகில்சோர வால்வளைகள்
வீழ வேள்கணைசெய் வேதையால்
நீலவேல்விழிக ணித்தி லச்சா
நெருங்கு கொங்கைவழி வீழவே.
ஞாலமீதெமது பாவை சோகமுறல்
ஞாயமோ வுரைசெய் நாரணா
ஓலநீடுகரி ராஜ னேர்துய
ரொழித்த வான்கருணை யோதமே.

(இ-ள்.) நாரணா - ஓதிருநாராயண ஸ்வாமியே, ஓலம் நீடு - (ஆதிமூலமே யென்று) உரக்கக் கூவியழைத்த, கரிராஜன் நேர் துயர் ஒழித்த - கஜேந்திராழ்வானது பெருந்துன்பத்தைப் போக்கிய, வான்கருணை ஓதமே - உயர்ந்த கருணையங்கடலாகிய வுனக்கு, வேள் கணைசெய் வேதையால்- மன்மதனது பாணஞ்செய்யும் வேதனையால், எமது பாவை - பாவையைப் போன்ற அழகிய எம்பெண்ணானவள், மேலணிந்த துகில்சோர - உடுத்தியிருக்குங் கலைநெகிழவும், வால்வளைகள்வீழ - கையிலணிந்திருக்கும் வெள்ளிய வளையல்கள் கழன்று கீழேவீழவும், நீலவேல்விழி கண் - நீலமலரை

யும் வேலையும்போன்ற கண்களினின்றும், நித்திலச்சரம் - (துன்பத்தாலுதிர்க்கு நீர்) முத்துச் சரத்தைப்போல், நெருங்கு கொங்கைவழி வீழ- அடர்ந்த தனங்களின்மீது சொரியவும், ஞாலமீது - பூமியின்கண்விழுந்து, சோகமுறல் - சோகத்திலகப்பட்டுத் துயரப்படுதல், ஞாயமோ உரைசெய் - நீதியாகுமோ சொல்வாயாக. (எ-று.)

துகில்சோர்தலையும், வளைவீழ்தலையும் கூறியக்கால், தேகங்குன்றியதும்கூறுமலே போதரல் காண்க. நீலம், பண்பாகுபெயர். நீலவேல்விழி, உவமத்தொகை. ஓ, கழிவு. பாவை, உவமையாகுபெயர். (நாரணா, நீ) எழுவாய். உரைசெய், பயனிலை. (ஞாயமோ, இதை) செயப்படுபொருள். (௨௦)

## கலிவிருத்தம்.

௨௧. ஓதரிய தென்மறை யுவந்துபி னுலாவும்
பாதமல ரென்முடி தனிற்பதிய வைப்பாய்
சீதமதி சூடிவிதி செய்துதி சிறக்க
யாதவ கிரிக்கணம ராதிபெரு மானே.

(இ-ள்.) சீதமதிசூடி - குளிர்ச்சியைத்தருஞ் சந்திரனை ஜடாபாரத்திற் சூடிய சிவபெருமானும், விதி - பிரமனும், செய்துதிசிறக்க - ஒன்று சேர்ந்துபாடுங் கீர்த்தனை பெருமையுறும்படி, யாதவகிரிக்கண் அமர் ஆதி பெருமானே - யாதவகிரியின்மேல் வீற்றிருக்குந் தேவாதிதேவனே, ஓத அரிய தென்மறை உவந்து-சொல்லற்கரிய தமிழ்வேதத்தை விரும்பி, பின் உலாவும் பாதமலர் - அதைப் பின்பற்றிச்செல்லுகின்ற பாதாரவிந்தங்களை, என் முடிதனில் பதியவைப்பாய்-எளியேன் சிரசின்பேரில் பதிந்திருக்கும்வண்ணம் வைத்தருள்வீராக. (எ-று.)

தென்மொழி வேதத்தைப் பின்பற்றிச்செல்லுந் திருவடியென்றதனால், திருவடியைத் தேடிச்செல்வது வடமொழி வேதமென்றாயிற்று. தென்மறை, தென்றிசையில் வழங்கும் மொழியாலாய மறையென விரிதலால், திசைப்பெயர் மொழிக்காயது. ஓத என்னும் வினையெச்சவீறு கெடுதல்விகாரம் பெற்றது. (பெருமானே நீ) எழுவாய். வைப்பாய், பயனிலை. பாதமலர், செயப்படுபொருள். (௨௧)

## கட்டளைக் கலித்துறை.

௨௨. மானகங்கைத்தனு வாக்கொண்டபிஞ்ஞகன் மாமுடிக்கு
வானகங்கைத்தண் புனலீந்தசெய்தி மதித்துலகீர்
ஏனகங்கைத்துப் பரவகில்லீர்கள் யதுகிரியில்
ஞானகங்கைத்துச் சரண்போந்தனன்றிரு நாரணர்க்கே.

(இ-ள்.) உலகீர் - உலகத்தவர்களே, மால் நகம் கைத்தநுவாக்கொண்ட - நீண்ட மகாமேருபர்வதத்தைக் கைவில்லாகவேந்திய, பிஞ்ஞகன்மா முடிக்கு - சிவபெருமானது சடைமுடியிற்றங்கும்படி, வானகங்கைத்தண்

புனல் ஈந்த செய்திமதித்து-ஆகாயகங்கையின் குளிர்ச்சிபொருந்தியநீரைத் (திருநாராயணர்) தந்தருளிய வரலாற்றை மதிப்பிட்டு, என் அகம் கைத்துப் பரவகில்லீர்கள் - என்மனதை நிர்மலமாக்கிக்கொண்டு அவரைவணங்க மாட்டீர்கள், நான் - யான் (என்செய்தேனென்று கேட்பீராகில் அதைச் சொல்லுகின்றேன்) யதுகிரியில் - யாதவகிரியில், திருநாரணர்க்கு - அந்த திருநாராயணஸ்வாமிக்கு, அகம் கைத்துச் சரண் போந்தனன் - அகங்கார மமகாரங்களற்றுச் சரணாகதி பண்ணினேன் (எ-று.)

மதித்து, என்றவிடத்து சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. பரவகில்லீர், என்பதில் கில் வன்மையை யுணர்த்தநின்றது. போந்தனன், என்பதில் புகு என் பகுதி திரிந்து போ என்றாயது. உலகீர் (நீங்கள்) எழுவாய். என் பரவகில்லீர்கள்-வினைப் பயனிலை. (திருநாராயணர்) செயப்படுபொருள். (௨௨)

மடக்குக் கலித்தாழிசை.

அம்மானை.

௨௩. திருநா ரணரெழிலி சேராரை யாதவமால்
தருவார் விபுலவகச் சக்கரத்தா ரம்மானை
தருவார் விபுலவகச் சக்கரத்தா ராமாகில்
மருவார் பூவேற்பரோ மாவலிபா லம்மானை
மாவலிபா லேற்றதும்பூ மாலிலக வம்மானை.

(இ-ள்.) திருநாரணர் - திருநாராயணர், எழிலிசேர் ஆரை - மேகம் படரு மதிலையுடைய, மால்தரு ஆர்விபுல அக - மேன்மையுள்ள தருக்களடர்ந்த விசாலமான விடங்கொண்ட, யாதவ சக்கரத்தார் அம்மானை - யாதவகிரியையுடையவர் அம்மனையே! தரு ஆர்விபுல அகச்சக்கரத்தார் ஆமாகில் - தருக்கள் நிறைந்த மலர்தலை யுலகத்தையுடையாராகில், மரு ஆர் பூ ஏற்பரோ மாவலிபால் அம்மானை - கந்தமுள்ள பூமியை (வாமனராய்ச் சென்று) மாவலிச் சக்ரவர்த்தியினிடத்து தானமாகவாங்குவாரோ அம்மனையே! மாவலிபால் ஏற்றதும்பூ - மாவலியினிடத்துப் பூவை அங்கீகரித்ததும், மால் இலக அம்மானை - மால் விளங்கும் பொருட்டாகத்தான் அம்மனையே (எ-று.)

அம்மனை என்பது ஓர்மகளிர் விளையாட்டு. அது அம்மானையென்றாயது நீட்டல் விகாரம். இது கலம்பகத் தோருறுப்பாய் விளையாடும் மகளிர் மூவர் சல்லாப சம்பாஷணையாக ஒருவரையொருவர் முன்னிட்டு முதற்பெண் ஒன்றுசொல்ல, அதையிரண்டாவதுபெண், முதற்பெண் சொல்லிய சொற்கள் செல்லுழி மாறுபொருள்கொண்டு ஆக்ஷேபிக்க, மூன்றாவதுபெண், அவ்விருவருக்குஞ் சமாதானமாம்வண்ணம் சிலேடையாய் ஓர்முடிவுசொல்லி, சம்பாஷணையைப் பூர்த்திபடுத்தியதாகக் கூறுவது.

இவ்வம்மானையில், முதற்பெண்சக்கரத்தார் என்பதை மலையையுடையார் எனும் பொருள்கொண்டுகூற, இரண்டாம்பெண் அதைப் பூமியையுடையாரென மாறு பொ

ருள்கொண்டு சங்கிக்க, மூன்றும்பெண்கூறிய "மாவலிபாலேற்றதும் பூமாலிலக" என்றதில் மாவலிச் சக்ரவர்த்தியினிடத்து பூமியைத் தானமாக வாங்கியது இந்திரன் தன்பதியில் நிலைத்துவர்த்திக்கச்செய்யவேண்டியநிமித்தத்தாலென்றும், மாவல்லியாகிய திருக்கோதையிடத்துப் பூமாலையையேற்றது, அவரதுபக்தி மேன்மைவிளக்கு நிமித்தத்தாலென்றும் சிலேடையாய் முன்னிருவர்க்குஞ் சமாதானமாம்வண்ணம் சம்பாஷணை பூர்த்தியானமைகாண்க.

மஹாபலி என்னும் வடமொழித்திரிபு மாவலி, மிகுபலமுள்ளவனென்பது பொருள்.

| எழுவாய். | பயனிலை. | செயப்படுபொருள். | |
|---|---|---|---|
| திருநாரணர். | சக்கரத்தார். | ,, | |
| ( ஷை ) | ஏற்பரோ? | பூ. | |
| பூ. | (திருநாரணர்) ஏற்றது. | ,, | (௨௩) |

## நேரிசைவெண்பா.

௨௪. அம்மானை யம்மானை யாங்கடர்த்த வம்மானை
எம்மானை யோங்கும் யதுகிரியிற் பெம்மானைப்
பாதந்தனை நெஞ்சே பற்றுதியே னன்கெனக்கு
நீதந்தனை தஞ்ச நின்று.

(இ-ள்.) அம்மானை - அழகிய பொன்மானாய் வந்த மாரீசனையும், அம்மானை-தாயுடன் பிறந்தோனாகிய கம்சனையும், ஆங்கு அடர்த்த அம்மானை-அக்காலத்திற் பொருதிய பகவானை, எம்மானை - எம்பெருமானை, ஓங்கும் யதுகிரியில் பெம்மானை - ஓங்கிவளர்ந்த யாதவகிரியிலிருக்கும் பெருமானை, நெஞ்சே - ஓமனதே, பாதந்தனை பற்றுதியேல் - அவன் பாதாரவிந்தங்களை ரக்ஷகமென நினைப்பையேயாகில், நன்கு எனக்கு நீதந்தனை தஞ்சம் நின்று-நீ நடுநின்று எனக்கோர் பற்றுக்கோட்டை நானுஜ்ஜீவிக்குமாறு உபகரித்தாயாகுவை (எ-று.)

ஆங்கு என்றதனால், மாரீசனையும் கம்சனையும் பொருதியது முறையே, சக்ரவர்த்தித் திருமகனாயும், கண்ணனாயு மவதரித்த காலத்தில் எனக்கொள்க. பெம்மான், பெருமான் என்பதின் மரூஉ. பெம்மானை, பாதந்தனை, இங்கு ஐயுருபு இரண்டிணைந்து வந்தன. பற்றுதியேல் என்னும் எதிர்கால வினையெச்சங்கொள்ளுந் தருவை என்னும் முற்றுவினை தந்தனை என்றாயது தெளிவின் கண்வந்த காலவழுவமைதி. நின்று, சலநமின்றி யொருவழிப்பட்டு நின்று என்றுமாம். நெஞ்சே (நீ), எழுவாய். தந்தனை, பயனிலை. தஞ்சம், செயப்படுபொருள். (௨௪)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியச் சந்த விருத்தம்.

௨௫. தஞ்சமென முந்தறிவழிந்து தனி யன்புகொடு
தந்திமுக னுந்து மயில்வேள்
நஞ்சமமர் கண்டனுமை யென்பவரை யன்பொடு
நவின்றுதின மஞ்சலி செய்வீர்

எஞ்சுமவர் மங்கிடுப தந்தருவ தன்றியிலை
யென்றும்யது குன்றின் மிசைவாழ்
மஞ்சனைய நங்கள்பர மன்கழல் வணங்கல் செயின்
மங்கலில்ப தந்தருவனே.

(இ-ள்.) தஞ்சம் என முந்து அறிவு அழிந்து - சஹஜப்ராப்யமான சேஷசேஷி பாவசம்மந்த ஜ்ஞாந விசேஷத்தை யிழந்தவராகி, தனி அன்பு கொடு - (அந்தஸ்வாபாவிகமான விக்ஜ்ஞாநத்தை த்யஜித்துத்) தனித்த ஆராமைகொண்டு, தந்திமுகன்-யானைமுகக் கணபதி, உந்தும் மயில்வேள்-மயில் வாகனக்கந்தன், நஞ்சம் அமர்கண்டன் - கண்டத்தில் நஞ்சமிருக்கும் சிவபெருமான், உமை - உமாதேவியாகிய சத்தி, என்பவரை - என்று சொல்லும்படியான இத்தேவதாந்தரங்களை, அன்பொடும் நவின்று தினம் அஞ்சலிசெய்வீர் - அன்போடு நித்தமும்பாடி நமஸ்கரிக்கின்றவர்களே, எஞ்சும் அவர் - (எம்பெருமானில்) தாழ்ந்த அவர்கள், மங்கிடுபதம் தருவது அன்றி இல்லை - (தரவேண்டுமாகில்) அழியும்படியான தத்தம் பதவியைக் கொடுப்பதேயல்லாமல் அவர்களிடத்தில் யாதுளது, என்றும் யதுகுன்றின்மிசைவாழ் - எக்காலத்தும் யாதவகிரியில் வாழ்கின்ற, மஞ்சு அனைய நங்கள் பரமன் கழல் வணங்கல் செயின் - நீலமேகம் போன்ற நம்முடைய பராத்பரனாகிய திருநாராயணன் பாதத்தில் வணக்கஞ் செய்வீர்களாகில், மங்கல் இல்பதம் தருவன் - ஸ்வாத்மாநுபவாதி கெடுதலில்லாத, அவனோடொன்றிவாழும் பதவியைத்தந்து கடாக்ஷிப்பன் (எ-று.)

மங்கிடு என்பதில், இடு, அசை. தருவது, தொழிற்பெயர். இங்கு பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற் றொக்கது. கைம்மாறு கருதாது கருணாரஸத்தைப் பொழிந்து காக்குங் கடவுளாதலின் "மஞ்சனைய நங்கள் பரமன்" என்றும். பரமன், இது மன்விகுதிப் பெயர். பரமன், எழுவாய். தருவன், பயனிலை. பதம், செயப்படுபொருள்.(உடு)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உசா. தருக்காட்டு நீழலமர்பொருங்குலிசத்
தடக்கையர் தரங்கவாரி
வெருக்காட்டு நஞ்சமயின் மணிமிடற்றர்
மறைமலர்க்கண்மேலாராவர்
கருக்காட்டுங் கடும்பிறவிக்கடல் கடக்கும்
பெரும்புணையாக் கதித்துத்தோன்றித்
திருக்காட்டும் யதுகிரிவான் பரஞ்சுடரைப்
பணிந்ததவச் செல்வர்தாமே.

(இ-ள்.) கருகாட்டும் - தாய்மார் கருப்பத்திற்றள்ளும், கடும் பிறவிக் கடல் கடக்கும் - கோரமான ஜன்மசாகரத்தை நீந்துவதற்கான, பெரும்

புணையாக்கதித்துத் தோன்றி - பெரியதோர் மரக்கலம்போல் பருத்தெழுந்து, திருக்கு ஆட்டும் - தோஷங்களைப் பரிகரிக்கும், யதுகிரிவான் பரஞ்சுடரை - யாதவகிரியில் வாழும் உத்தமமான பரஞ்ஜோதிஸ்வரூபனை, பணிந்த தவச்செல்வர்தாமே - வணங்கிய தபோதனத்தையுடையவர்களே, தருக்காட்டு நீழல் அமர்பொரும் குலிசத்தடக்கையர் - கல்பதரு பஞ்சகச்சோலை நீழலிலமர்ந்த பொருதும் வஜ்ராயுதங் கையிற்றாங்கிய இந்திராதியும், தரங்கவாரி வெருகாட்டும் நஞ்சம் அயில் மணிமிடற்றர்-அலைகளையுடைய பாற்கடலிற்றோன்றிப் பயங்கரத்தை யுண்டாக்கிய விடத்தைக் கொண்ட நீலகண்டத்தையுடைய வுருத்திரரும், மரைமலர்க்கண்மேலார் - தாமரைமலர்மேல்வாழும் பிரமரும், ஆவர் - என்னப்படுபவர்கள். (எ-று.)

கல்பதரு பஞ்சகமாவன - சந்தானம், அரிச்சந்தனம், மந்தாரம் பாரிஜாதம், கற்பகம் என்பவைகளாம். நீழல், நீட்டல்விகாரம். தாம், சாரியை. செல்வர், எழுவாய். ஆவர், பயனிலை. (உ௬)

வேற்றொலி வெண்டுறை.

உ௭. மேதினியிலுயர்குலத்திற்பிறந்துமரசுரிமையெலா மேயோரேனும்
வேதியராய்முதுமறைகளுணர்ந்துநனிமகம்புரியுமேலோரேனும்
யாதவகிரிக் கணமர் மாதவனை யேத்தா
ஆதர்தமை யோர்பொருள தாகமதியாமே.

(இ-ள்.) மேதினியில் உயர்குலத்தில் பிறந்தும் - லீலாவிபூதியில் ஆபிஜாத்யராயுத்பவித்தும், அரசு உரிமை எல்லாம் மேயோரேனும் - க்ஷாத்ரதர்மத்துக்குரிய ஸர்வசிந்நங்கள் யாவும் பொருந்தியவருமானாலும், வேதியராய் முதுமறைகள் உணர்ந்தும் - ப்ராம்ஹணராகி அப்ராக்ருதமானவேதத்தை யோதியுணர்ந்தும், நனிமகம்புரியும் மேலோரேனும் - ஜோதிஷ்டோமாதி யாகங்களைப் பாங்காகச்செய்யும் ஸோமயாஜிகளானாலும், யாதவகிரிக்கணமர் மாதவனை - யாதவகிரியில் வீற்றிராநின்ற பெரிய பிராட்டிக்கு வல்லபனாகிய திருநாராயண ஸ்வாமியை, ஏத்தா ஆதரை - பாடித்துதிக்காத சிதடரை, ஓர்பொருளதாக மதியாம் - ஒரு ப்ரயோஜநகவஸ்துவாக மதித்தாமில்லை. (எ-று.)

பிறந்தும், உணர்ந்தும், மேயோரேனும், மேலோரேனும், என்பவைகளில் உம்மை உயர்வு சிறப்பு. பின்னிரண்டும் எண்ணுப்பொருளவுமாம். ஏனும், எனின் என்பதின் மரூஉ. பொருளதாக, இழிபிணல்வந்த திணைபால் வழுவமைதி. தம், அசை. (யாம்) எழுவாய். மதியாம், பயனிலை. ஆதர், செயப்படுபொருள். (உ௭)

கட்டளைக்கலித்துறை.

உ௮. மதியார் மலர்மகள் கோனடி யாரை வணங்கிநிதம்
துதியார் பதின்மர் மறைத்தமிழ்மாலையைத் தொன்முனிவர்
விதியார் பணிதிரு நாராயணர் புகழ் வீறுரைத்துக்
குதியா ரிவரெங் ஙனமுய்கு வாரிக் குவலயத்தே.

(இ-ள்.) மதியார் மலர்மகள்கோன் அடியாரைவணங்கி - அலர்மேன் மங்கைக்கு நாயகனுகிய எம்பெருமானது அடியார்கட்கு நைச்சிகராய் அவ்வடியார்களை மதியாதவரும், நிதம் துதியார் பதின்மர் மறைத்தமிழ்மாலையை - ஆழ்வார்களருளிச்செய்த திவ்யஸூக்தியாகிய திராவிடவேதத்தை நித்தஞ்சேவித்துத் துதியாதவரும், தொல்முனிவர் விதியார் பணிதிரு நாராயணர் புகழ்வீறு உரைத்துக்குதியார் - மஹரிஷிகளும் பிரமனும் துதிக்கும் திருநாராயணருடைய பிரபாவத்தை வியந்து ஸஸம்ப்ரமநர்த்தநம் பண்ணுதவரும், இவர் - ஆகிய இவர்கள், எங்ஙனம் உய்குவார் இக்குவலயத்து - இவ்வுலகின் கண் எவ்வாறு உஜ்ஜீவிக்கவிருக்கின்றூர்கள்? (எ-று.)

மகள்கோன், உயர்திணையின்கண் வலியியல் பாயது. மறைத்தமிழ், தமிழ்மறையெனமாறுக. விதியார் என்பதில் ஆர், உயர்வுபற்றிவந்த விகுதி. எங்ஙனம் என்னும் வினு, எதிர்மறையைக்குறிக்கின்றது. உய்குவார் என்பதில் கு சாரியை. இவர், எழுவாய். எங்ஙனமுய்குவார், வினுப்பயனிலை. (உரு)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

துறம்.

உசு. குவலயக் கற்பகப் பூங்கொம் பன்னுய்
குறத்திசொ லென்றிக ழாமற்கோடி
துவளநு சுப்பிரு பொற்குன் றம் போல்
துணைக்கொங்கை விம்முறு கொள்கையன்றி
நவமல ரங்கை வரையி னன்மை
நாடுறின் யாதவ வெற்பின் மிசைத்
தவர்விழை மாமணி நாளை வந்துன்
றனமுறு நெஞ்சந் தளர்ந்திடலே.

(இ-ள்) குவலயக்கற்பகப் பூங்கொம்பு அன்னுய் - கற்பகத்தருவினது அழகிய ஓர் கொம்பு மண்ணுலகத்தில் வந்து வளர்ந்தாலொத்த ஓ பெண்கொடியே, குறத்திசொல் என்று இகழாமல் கோடி - நான்சொல்லுங்குறியைக் கட்டுவெச்சிசொல்லுஞ் சொல்லென்று தள்ளாது கொள்வாயாக. (அதென்னவெனில்) இருபொன்குன்றம்போல் துணைக்கொங்கை - மேருத்வயம் நேர்கொள்ளும் உன்னிருதனங்களும், நுசுப்புதுவள - உன்னிடை நுணங்கும்படியாக, விம் உறுகொள்கை அன்றி - வீங்குந் தன்மையொன்றேயல்லாமல், நவமலர் அங்கைவரையின் நன்மை - அன்றலர்ந்தமலருக்கொப்பாகிய அகங்கைரேகைகளின் குறியையும், நாடுறின் - த்வந்தித்துப் பார்த்தால், யாதவவெற்பின் மிசை - யாதவகிரிமேல் வீற்றிருக்கும், தவர்விழைமாமணி - தவசிகள் வ்யாமோகிக்கும் பெரிய மணியானது, நாளைவந்து உன்தனம் உறும் - நாளையதினமேவந்து உன்கொங்கையாகிய தனத்

திற்பதியும், (ஆகையால்நீ) நெஞ்சம் தளர்ந்திடல் - மனந் தளர்ச்சியடையாதிருப்பாயாக என்பதே (எ-று.)

யாதவகிரியிலிருந்து ஜ்வலிக்கும்படியான மணியானது "பாவையிரங்கு மசோதைக்கு முத்தும்; பவளச்செல்விக்கு எவையிரண்டன்ன கண்மணி நீலமும்; இருசரணப்பூவை இரந்தவர்க்கின் பவளமும்; அசுரர்க்கு என்றும் மா வைரமும்; திருவேங்கடத்து ஓங்கும் மரகதமும்;" ஆகும் என்பாள் பொதுப்பட "மாமணி" என்றும்; இது சாமானியரால் கவரப்படும் ரத்னமாகாது வ்யாச பராசர நாரதாதி முனிவரரால் மோகிக்கப்படும் மேலான ரத்னமென்பாள் "தவர்விழைமாமணி" என்றும், அன்னது பதியநாயகியின் கொங்கையாகிய தனந்தான் தகைமைத்தென்பாள் "உன்றனமுறும்" என்றும்; அத்தனம் மகாமேருவினுஞ் சிறந்த மாற்றையுடைய தங்கம் என்பாள் "பொற்குன்றம்போல் கொங்கை" என்றும் கூறினளாக. "குறத்திசொலென்றிகழாமற்கோடி" என்றது தான்சாமானியகுறத்தியன்று, திரிகாலமு முணர்ந்த கட்டுவச்சியென்றறிவித்தற்கு. நாயகி ஷெ மணியைத் தன்றனத்துற்று வேண்டிற்றெல்லாந் தரும் மண்ணுலகக் கற்பகத்தாருவாய்இனிவிளங்க விருப்பதைக் குறிபார்க்கு முன்னர் நினைத்துணர்ந்து "|குவலயக் கற்பகப் பூங்கொம்பன்னாய்" என விளித்தாள் என்க.

கோடி, இதிற்பகுதி முதனீண்டது. விம்மூறு, விம்மு என்ற பகுதி யீற்றுகரம் "முற்று மற்றொரோவழி" என்ற விதியாற்கெட்டது; விம்மல் என்பதின் விகுதி குன்றிய தெனினுமாம். தளர்ந்திடல், எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. (நீ) எழுவாய். தளர்ந்திடல், பயனிலை. (௨௯)

பன்னிரு சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இரங்கல். மடந்தை.

௩௦. தளர்ந்தனையரு மனங்கனையார்
தகைசெய்பவரு மனங்கனையார்
தண்டலையூருந் தென்மாலை
சகியேயன்றா னுந் தென்மாலை.
வளர்பூங்கானற் கோகிலமே
வருமோதமியேற் கோகிலமே
மாலைசெய்வா னல்லையே
மாரன்செய்வா னல்லையே.
அளிசெய்வாய் முனி யாதனமே
அழகார் வார்நிலை யாதனமே
அந்தளிரலர்கள் பொருந்தேனே
அரிவையரலர்கள் பொருந்தேனே.
ஒளியே யணையா தவமலையார்
உழையே யணையா தவமலையார்

உயரும் பூவைக் குருகிரோ
உலையும் பூவைக் குருகிரோ.

(இ-ள்.) தளர்ந்து அன்னையரும் மனம் கரையார்-என்தாய்மாரும் என் பருவச் செவ்வியை நோக்கி நெஞ்சந்தளர்ந்து மனமுருகாராயினர், தகை செய்பவரும் அனங்கரையார் - மதவேள் செய்யுந் துன்பத்தைத் தடுப்பவர் களோ ஒருவருமில்லை, தண்டலை ஊரும் தென்மாலே-சோலைகளிற்படிந்து நறுமணம் பெற்றுவீசும் மலயமாருதமே, சகியேன் தூறு உந்து என்மாலே-அலர் தூற்றற்குரிய வென்னவாவைச் சகிக்கச் சக்தியுள்ளேனல்லேன், வளர்பூம்கானல் கோகிலமே - பூங்காவனத்தில் வாழுங் குயில்களே, வருமோ தமியேற்கோ கிலமே - சிறுமை வருமோ? அப்படிவருவது தனித்திருக்குமெனக்கோ? மாலே - மேகமே, செய் வான் அல் அலையே - அழகிய உயர்ந்த கரிய கடலலையே, மாரன் செய்வான் அல்லலையே-மன்மதன் துன்பத்தை விளைவிப்பான். அளிசெய்வாய் முனியாது அன்னமே - என் மேற் சீறாது கிருபைசெய்வீர் அன்னப்பக்ஷிகளே (எனென்றால்) அழகு ஆர்வார் நிலையா தனமே - அழகியகச்சுக்குள் என்தனங்கள் நிலையாது விம்முகின்றவாதலால், அம்தளிர் அலர்கள் பொரும்தேனே - அழகிய தழைகளடர்ந்த மலர்களின்வாய் ரீங்காரம்செய்யும் வண்டுகளே, அரிவையர் அலர்கள் பொருந்தேனே - பெண்கள் என்னைத் தூற்றுந் தூற்றலுக்கு அமைதலுறேன், உழையே - மான்கூட்டமே, ஒளி எய் அண் ஐ யாதவமலையார்-சூரியன் பொருந்திச் சேரும்படி உயர்ந்த யாதவகிரிவாணர், அணையாது அவம் அலையார் - வந்து என்னைப் புணர்ந்தாலல்லது என் அவத்தைப் போக்கவல்லாரல்லர், உயரும் பூவைக் குருகிரோ - உயரப்பறக்கும் நாகணவாய்ப்புட்களே, உலையும் பூவைக்கு உருகீரோ - வருந்தும் பெண்மகளாகிய வென்பொருட்டு மனமுருகமாட்டீர்களா? (எ-று.)

அன்னையரும் என்றது பெற்றதாய், வளர்த்ததாய் முதலானோரை. இதில் உம்மை உயர்வுசிறப்பு. தகைசெய்பவரும் என்றதில், உம் அசைத்தற்பொருட்டு. வருமோதமியேற்கோ, இவ் ஓகாரங்களில் முன்னது கழிவு; பின்னது உயர்வு சிறப்பு. தளிர்கள், அலர்கள் எனவிரித்திடுக. அரிவையரலர்கள் என்பது பெண்களது அலர் தூற்றல் எனப்பொருள்படலால் ஒருமையிற் பன்மை. ஒளி, பண்பாகுபெயர். பூவைக்குருகீர், இருபெயரொட்டுப் பண்புத்தொகை. பூவைகாள் குருகீர் எனக்கொளினுமாம். தென்மாலே, கோகிலமே, மாலே, அலையே, அன்னமே, தேனே, உழையே, குருகீர் (நீங்கள்) எழுவாய். உருகீர், பயனிலை. (௫0)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சித்து.

௫க. குருகுறங்கு மலர்வாவி யிலகு மேலைக்
குன்றினில்வாழ் நெடியோன்ற னுபயபாத
மருமலர்ச்சீர் பராவுபுகழ்ச் சித்தரேம்யாம்
மாறனக்குத் தாரம் பொன்னாக்கித்தந்தேம்

அரியதாயகி யுறையன் னவற்கே செய்தேம்
அவிர்முடி தாழ்த்தித் திருநாராயணன்பால்
அரணிரப்ப வங்கம் வங்கமாக மாற்றி
அகமகிழ்ந்தே மெமதுவித்தை யரியதன்றே.

(இ-ள்.) குருகு உறங்கும் மலர்வாவி இலகும் - பறவைகள் மலர்ச்சேக்கையிற் கண்வளரா நின்ற பொய்கைகள் திகழும், மேலைக்குன்றினில்வாழ்- மேலைக்கோட்டையின்கண் (அர்ச்சாவதாரமாக) வெழுந்தருளி நித்யவாசம்பண்ணுநின்ற, நெடியோன் தன் உபயபாத மருமலர்ச்சீர் - பெருமானது வாசமணக்கும் பாதாரவிந்தங்களின் சீர்த்தியை, பராவு புகழ் சித்தரேம்யாம் - புகழும் பெருமைவாய்ந்த சித்தராகிய நாங்கள், மால்தனக்குத் தாரம் பொன்னாக்கித் தந்தேம் - இந்திரனுக்கிரதத்தைப் பொன்னாகச் செய்துகொடுத்தோம், அரியதாய் அகி உறை அன்னவற்கேசெய்தேம் - பொன்னாகை இரும்பையும் கஞ்சத்தையும் அந்த இந்திரனுக்கே செய்துகொடுத்தோம், அவிர் முடிதாழ்த்தித் திருநாராயணன்பால் அரன் இரப்ப - பிரகாசிக்குஞ் சடைமுடியை வணக்கி எங்கள் திருநாராயணனிடத்துவந்து சிவபெருமான் இரந்துகேட்க, வங்கம் வங்கமாகமாற்றி அகம் மகிழ்ந்தேம் - ஈயத்தை வெள்ளியாக மாற்றிக்கொடுத்து மனம்பூரித்தோம், (ஆகையால்) எமது வித்தை அரியது அன்றே - நாங்கள் கற்றிருக்கும் விஞ்சையானது அரிதானதல்லவா ? (எ-று,)

சித்து, கலம்பகத்தோருறுப்பு. அது சித்தர் தங்கள் வல்லமையைப் புகழ்வதாய்க்கூறுவது. வித்தை, எழுவாய். அரியதன்றே, வினைப்பயனிலை. இற்றேகாரத்தை அசையாக்குங்கால், மால்தனக்குத் தாரம் பொன்னாக்கித் தந்தேம் என்பது, திருமாலுக்கு மனைவி இலக்குமியாகச் செய்தோம் எனவும், அரியதாய் அகி உறை அன்னவற்கேசெய்தேம் என்பது, அத்திருமாலுக்கே அகி உறை அரியாக - (பாம்பு பரியங்கமாகவும், இடம் கடலாகவும்) செய்தோம் எனவும், அரன் அங்கம் வங்கமாகமாற்றி அகமகிழ்ந்தேம் என்பது, சிவபெருமானது தேகத்தை வெள்ளைநிறமாக்கி யானந்தித்தோம் எனவும், எமது வித்தை அரியது அன்று என்பது (இவையுள்ளனவேயாதலின்) எமது வித்தை யருமையான தன்றென்று கூறியதாகவாதலுணர்க. இங்கு வித்தை, எழுவாய். அரியதன்று, பயனிலை. (௬௧)

### கட்டளைக் கலித்துறை.

௬௨. அன்று கராப்பற் றிபமூல மென்னவந் தாண்டிலரால்
மன்று ணடிக்கு நதிச்சடி லன்முதல் வானவர்கள்
ஒன்றுட னொன்றிரண் டாகாத காது முனையொப்பரோ
என்று வலஞ்செய் யதுகிரி நின்ற வெழிற்பதனே.

(இ-ள்.) என்று வலம்செய் - ஆதித்தன் நித்தம் பிரதக்ஷிணம்வந்து தெண்டன் சமர்ப்பிக்கும், யதுகிரி நின்ற எழில்பதனே - யாதவகிரியின்

மீது நித்யவாசம் பண்ணுநின்ற அழகிய பாதாம்புயங்களையுடைய திருநாராயண ஸ்வாமியே, மன்றுள் நடிக்கும் - தில்லையிலானந்தக் கூத்தாடும், நதிச்சடிலன் முதல் வானவர்கள் - கங்கைவேணியனாகிய சிவபெருமானே முதலாகிய விண்ணாட்டினர், அன்று கராபற்று இபம் மூலம் என்ன - முதலையாற் பிடிக்கப்பட்ட யானையானது ஆதிமூலமே யென்றோலமிட்டழைத்த காலத்தில், வந்து ஆண்டு இலரால் - ஓடிவந்து ஆட்கொண்டாரில்லையாதலினால், ஒன்று உடன் ஒன்று இரண்டு ஆகாதகாலும் - ஒன்றும் ஒன்றும் கூட்டினால் இரண்டென்று ஆகாத காலமுண்டேல் அக்காலத்திலுங் கூட, உன்னை ஒப்பரோ - தேவரீர்க்கொப்பாவார்களா? (எ-று.)

எல்லா நூற்குமாதாரமாயுள்ளது மின்றியமையாததுங் கணிதநூலன்றே? அதினுண்மை முக்காலத்தும் பிறழ்வதின்று, ஒருக்காலஃது சம்பவிக்கினும், ஸர்வேச்வரனுக்குத் தேவதாந்த்ரங்கள் ஒப்பாதன் மாத்திரமின்றாதலின் "ஒன்றுடனொன்றிரண்டாகாதகாலு முனையொப்பரோ" என்றும் "பொன்னைக் கரியொத்தபோது மொவ்வார்" என்றூற்போல. உடன், மூன்றாவதன் ஒற்றுமைப் பொருளில்வந்த சொல்லுருபு "எழுத்துடன் புணர்ந்தசொல்" என்பதுபோல, ஒன்றுடனொன்று = இரண்டு. காலும், உம்மை உயர்வுசிறப்பு. ஒப்பரோ, ஓ, எதிர்மறை. வானவர்கள், எழுவாய். ஒப்பரோ, வினைப்பயனிலை - உனை, செயப்படுபொருள். (௫௨)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

### தவம்.

௫௩. பதந்தனை மெலித்துக் கானிடை திரிந்து
பற்பல காய்கனி யருந்திச்
சதந்தனை யயின்று துறவுபூண் டரிய
தவமிழைத் தும்பல னடையீர்
கதந்தனை யொருவி யதுகிரி யடைந்து
கலியாணி யாடிக் காப்பணிந்து
சிதந்தனைத் தருநம் பதின்மர்தம் பனுவல்
சேவிப்பதே யுயர் தவமே.

(இ-ள்.) பதந்தனைமெலித்து - பாதங்கள் மெலிந்துபோமாறு, கானிடை திரிந்து - ஆரண்யத்திற்றிரிந்து, பல்பல காய்கனி அருந்தி - கிடைத்த காய்கனி வர்க்கங்களைப்புசித்து, சதந்தனை அயின்று - தழைகளைத்தின்று, துறவு பூண்டு - துறவறத்தைக் கைக்கொண்டு, அரியதவமிழைத்தும் பலன் அடையீர் - அகோரதபத்தைச்செய்தும் யாதொரு பிரயோசனத்தையும் பெறாதவர்களே, கதந்தனை ஒருவி - சினத்தையடக்கி, யதுகிரி அடைந்து - யாதவகிரியைச்சார்ந்து, கலியாணி ஆடிகாப்பு அணிந்து - கலியாணிதீர்த்தத்தில் மூழ்கித் திருமண்காப்பு சாத்தி, சிதம் தனைத்தரும் - ஸ்வரூபாநுரூபமானஜ்ஞானத்தைத்தரும், நம்பதின்மர்தம் பனுவல் சேவிப்பதே - நமது

ஆழ்வார்கள் திருவாய்மலர்ந்தருளிய பிரபந்த காலக்ஷேபஞ்செய்வதே, உய ர்தவம் - மேலான தவமாகும் (எ-று.)

இளைத்தும் என்பதில் உம்மை உயர்வுசிறப்பு. அடையீர் என்பதில் விளியுருபுதொக்கது. ஓதலைச்சேவிப்பதென்ப தயர்ந்தோர்கொள்கை. சேவிப்பதே, இதில் ஏகாரம் பிரிநிலை. தன், தம், சாரியைகள். சேவிப்பது, எழுவாய். தவம், பயனிலை. (௬௩)

பன்னிருசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

இரங்கல் - மடக்கு.

௬௪. உயர்விண் வாழுங் கந்தரமே
உண்டே துயர்க்கிங் கந்தரமே
ஊதற்குறுமாம் பலமலரோ
ஒருவேளெய்யும் பலமலரே.
மயர்வுநீங்கி யஞ்சேலே
மாதேயென்றா யஞ்சேலே
வயங்குநாவி யேந்தலையே
வருமாறருடி யேந்தலையே.
துயர்விலமரார்க் கருமணலே
துன்றாரென்னைக் கருமணலே
சொல்லும்புகழ்யா தவமலையார்
துனியைச்செய்யா தவமலையார்.
செயிரோய்விடையோ னாரணனார்
தேடும்பதவா னாரணனார்
தெருளேனலனோ விடவரவே
தென்றலெனக்கோ விடவரவே.

(இ-ள்.) உயர்விண்வாழும் கந்தரமே - உயர்ந்தவானத்திற் சஞ்சரிக்கின்ற மேகமே! உண்டே துயர்க்கு இங்கு அந்தரமே - இங்கெனக்குண்டாகிய துன்பத்திற்கு ஒருமட்டுண்டா! அமலர் ஊதற்கு உறும் ஆம்பலே - பரிசுத்தராகிய என்றலைவரது வேணுநாதத்திற்குரிய மூங்கிற்குழலே! ஒருவேள் எய்யும் பலமலரோ - என்மாற்றானாகிய மன்மதன் பலமலரம்புகளை அபரிமிதமாக ப்ரயோகிக்கின்றான், அம்சேலே - அழகிய மீனே! மயர்வு நீங்கி அஞ்சேல் ஏ மாதே என்றாய் - உன் வ்யாமோகந்தீர்த்து நிர்ப்பீதையாயிரு ஓமங்கையே என்று சொல்லமாட்டாய்! வயங்கும் நாவிவந்து அலையே - பிரகாசிக்கும் நித்திலங்களை வாரிவருங்கடற்றரங்கமே! வருமாறு அருள்தி எந்தலையே - எனது நாயகனை இவிடம்வரும்படி கிருபைசெய்! துயர்வு இல் அமரார்க்கு அரும் அண்ணலே - துயரமில்லாததேவர்கட் கரியவ

ரிய என்னண்ணலானவர், துன்னார் என்னை சருமணலே - என்னை நெருங்காராயினர் கரியவறலே! சொல்லும் புகழ்யாதவ மலையார் - மேலோராற் சொல்லத்தக்க கீர்த்திபெற்ற யாதவகிரிவாணர், துனியைச்செய்யாது அவம் அலையார் - முன்துன்பத்தைத்தராமல் என் அவத்தைக்கெடுக்கார், செயிர் ஏய் விடையோன் - சீற்றமுள்ள விடபமேலேறுஞ் சிவபெருமானும், ஆரணனார் - வேதனும், தேடும்பதவான் நாரணனார் - தேடும் மேலானபதத்தையுடைய திருநாராயணர், வரவிட - வரத்தவறினால், தெருளேன் அலனே - தெளிவற்றவளல்லளாவேனோ, தென்றல் எனக்கோ விட அரவே - எனக்கு இம்மலய மாருதமானது விடமுள்ள சர்ப்பத்துக்கொப்பாக விருக்கின்றது (எ-று.)

உண்டே, இதில் ஏ வினாப்பொருட்டு. ஆம்பலமலரோ, ஏகாரத்தைப்பிரித்து ஆம்பலுடன்கூட்டி அமலர் ஊதற்குறு மாம்பலே என்க. ஏமாதேயென்றாய் என்பதை, மாதே யென்றாயே, எனமாறி ஏ இரக்கப்பொருட்டு மென்க. தெருளேன் தன்மையிடத்து வந்த எதிர்மறைக்குறிப்பு வினையாலணையும் பெயர். அலன் என்பது மஃதே, ஓ எதிர்மறைப்பொருட்டு. ஆகவே இம்மூன்று மொன்றி எதிர்மறையேயாகி தெளிவற்றவளாவேன் எனும் பொருளைத்தா நின்றன.

| எழுவாய், | பயனிலை, | செ. பொருள். | எழுவாய், | பயனிலை, | செ. பொருள். |
|---|---|---|---|---|---|
| 1. அந்தரம் | உண்டோ (வினா) | | 5. அண்ணல் | துன்னார் | என்னை |
| 2. வேள் | எய்யும் | மலர் | 6. யாதவமலையார் | அலையார் | அவம் |
| 3. சேலே (நீ) | அஞ்சேலென்றாய் | | 7. (நான்) | தெருளேனலனே | |
| 4. அலையே (நீ) | அருடி | | 8. தென்றல் | அரவு. | (௫௪) |

## நேரிசை வெண்பா.

௫௫. விடையேறம் வேணியனும் வேதாவும் போற்ற
முடையேறம் வேணியினில் முன்னாள் நடையேறம்
சிந்துரக் கோடீர்த்துவந்தான் செல்வன் சிறியேன்முன்
வந்துரக்கோ டீர்த்துவந்தான் மன்.

(இ-ள்.) விடை ஏறு அம்வேணியனும் - இடபத்தையூரும் கங்கைவேணியனாகிய சிவபெருமானும், வேதாவும் - பிரமனும், போற்ற - துதிசெய்யாநிற்க, முடை ஏறு அம்வேணியினில் - முடைநாற்றமணக்கும் அழகிய (திருவாயர்பாடி) வீதியினில், முன்னாள் - கண்ணனாயவதரித்த காலத்தில், நடைஏறு - (கம்சனாலேவப்பட்டு) நடையின் மதர்த்த, அம் சிந்துரக்கோடு ஈர்த்து உவந்தான் - (குவலயாபீடம் என்னும்) மேகத்தைநிகர்த்த யானையின் கொம்புகளை யொசித்து உவகைகொண்டவனாகிய, செல்வன் - சம்பத்குமாரன், சிறியேன்முன் வந்து உரக்கோள் தீர்த்து வந்தான்-எளியேன் முன் கிருபைகூர்ந்தெழுந்தருளிவந்து என்வலிய திருக்கியாவும் கெடும்படியருள் புரிந்துவந்தான் (எ-று.)

இடைச்சேரியில் ஆய்ப்பி முதலியனவா லுண்டாகும் கந்தமியல்பாதலின் "மூடையேறும் வேணி" என்றும். மன், அசை. செல்வன், எழுவாய். தீர்த்துவந்தான், பயனிலை. கோள், செயப்படுபொருள். (கூ௫)

கட்டளைக் கலித்துறை.

கூசு. தான்மன்னு வைகுந்தந் தந்திடற் றிண்ணந் தரணியுள்ளீர்
வான்மன்னு கூடம் வயங்கும்ய துகிரி மாயன்கையில்
மான்மன்னு மேசன் மலரயன்வாழ்த்திய மாணடியில்
தேன்மன்னு பூந்துணர் சேர்த்துபுவந்தனை செய்ம்மின்களே

(இ-ள்.) தரணியுள்ளீர் - பூவுலகவாசிகாள், வான்மன்னுகூடம் வயங்கும் யதுகிரிமாயன் - மேகமளாவிய சிகரங்கள் பிரகாசிக்கும் யாதவகிரியில் வாழுந் திருநாராயணரது, கையில் மான் மன் உமேசன் மலர் அயன் வாழ்த்திய மாண் அடியில் - கரத்தில் மானையேந்தியிருக்கும் உமைபாகனும் தாமரைமலர்மேல் வாசனாகிய பிரமனும் புகழுஞ் சிறப்புவாய்ந்த திருவடிகளில், தேன் மன்னு பூந்துணர் சேர்த்துபு - வண்டுகள் மொய்க்கும் மலர்மாலையணிந்து, வந்தனைசெய்ம்மின்கள் - வந்தனைவழிபாடு செய்யுங்கள், (அப்படிசெய்தக்கால் அந்த சர்வேச்வரன்) தான் மன்னுவைகுந்தம் தந்திடல் திண்ணம் - தான் வீற்றிருக்கும் பரமபதமாகிய தன்னுேடொன்றி வாழத்தக்க பதவியைத் தருவது சத்யம் (எ-று.)

சேர்த்துபு, செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இதிற்பகுதி, சேர்த்து. தந்திடல், எழுவாய். திண்ணம், பயனிலை. (கூசு)

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கூஎ. மின்னிலங்கு மணிமுடியு நிலவு மூரல்
விரவுவதனமுங் கருணை மிகுகண் ணேக்கும்
பொன்னிலங்கு யத்தழுந்திச் சுவட ளாய
பொற்புரமுங் கொற்றத்திண் புயமு முந்தி
தன்னிலங்கு ரித்துமல ரயன்புக் கில்லுந்
தம்மையே தாம்புரையுந் தாளு மோர்கால்
உன்னிலங் குவட்டெதிகி ரிக்க ணெம்மான்
உவந்தருளு முந்தைவினை முந்தா வாங்கே.

(இ-ள்.) மின் இலங்கு மணி முடியும் - மின்னலை யொத்துப்பிரகாசிக்கும் நவரத்ன கசிதமான திருமுடியையும், நிலவு மூரல் விரவுவதனமும் - மந்தகாசம் பொலிந்த குளிர்ந்த முகாரவிந்த விலாசத்தையும், கருணைமிகு கண்ணேக்கும் - கிருபாரசம் பெருகுகின்ற நயனங்களையும், பொன்னிலங்குயத்து அழுந்தி சுவடு அளாய பொற்பு உரமும் - ஸ்ரீதேவி பூதேவியாரது

தனங்களிற்படிந்து தழும்புற்று அழகுவாய்ந்த மார்பையும், கொற்றதிண் புயமும் - வெற்றிபெறத்தக்க வலியதோள்களையும், உந்திதன்னில் அங்குரித்து மலர் அயன்புக்கில்லும் - நாபியில் முளைத்து விகசித்தொளிரும் பிரமன் பொருந்திய மனையையும், தம்மையே தாம்புரையும் தாளும் - ஒப்புயர்வின்றித் தம்மைத்தாமே நிகர்த்த திருவடிகளையும், ஓர்கால் உன்னில் - ஒருதரந் தியானித்தாலும், அம்குவட்டு எதிகிரிக்கண் எம்மான் - அழகிய கொடிமுடிகளையுடைய எதிகிரிவாணனாகிய எம்பெருமான், முந்தைவினை நூந்தாவாங்கு - பழவினைகள் முந்துறுவண்ணம், உவந்து அருளும் - மகிழ்ந்து கடாக்ஷிப்பன். (எ-று.)

கருணையை வெளிப்படுத்துவது கண்ணாதலின் "கருணைமிகுகண்ணேனுக்கு" என்றது. அங்குரித்த, அங்குரம் என்னும் வடசொல்லடியாகப் பிறந்த தெரிநிலைவினைப்பெயரெச்சம். தம்மையே, இதில் ஏகாரம் தேற்றம். உன்னில், இங்கு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. எம்மான் அருளும். செய்யுமென்முற்று ஆண்பால் முடிபேற்றது. எம்மான், எழுவாய். அருளும், பயனிலை. (கஎ)

### கட்டளைக் கலித்துறை.

கஅ. வாங்காவளத்திரு வேங்கடஞ்சோலை மலையொடொன்றி
ஓங்காரணங்கட் கடியாம் பணவ முறழுருவப்
பாங்காம்யதுகிரிச் சோதிச்சுடரிற் பதிந்துசதா
தூங்காமற்றூங்குஞ்சுகம்பெற நாடென்றுணையினெஞ்சே.

(இ-ள்.) வாங்காவளத் திருவேங்கடம் சோலைமலையொடு ஒன்றி - என்றும் வளப்பங்குன்றாத திருவேங்கடமலை திருமாலிருஞ்சோலைமலை என்று சொல்லும்படியான இவ்விரண்டினோடு சேர்ந்து மூன்றாகி, ஓங்கு ஆரணங்கட்கு அடியாம் பணவம் உறழ் - உயர்ந்தவேதங்களுக்கு முதற்காரணமாகிய பிரணவ ஸ்வரூபத்தை நிகர்த்த, உருவம் - உருவத்தையுடைய, பாங்காம் யதுகிரிசோதிச் சுடரில்பதிந்து - அழகிய யாதவகிரியின்மீது ஜோதிர்மயமாக ஜ்வலித்துக்கொண்டிருக்கும் திவ்யமங்கள விக்ரகத்திலீடுபட்டு, சதா தூங்காமல் தூங்கும் சுகம்பெற - எஞ்ஞான்றுந் தூங்காமல் தூங்கும்படியான நிலைக்குவந்து பரமானந்தத்தை யனுபவிக்க, நாடு என்துணையில் நெஞ்சே - எனது ஒப்பற்ற மனமே நீ முயல்வாயாக. (எ-று)

வேதத்திற் காதிகாரணமாகிய பிரணவத்திற் காதாரபூதனாகிய சர்வேச்வரன் வீற்றிராநின்ற காரணத்தால் திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, யாதவகிரி இம்மூன்று திருமலைகளின் நிலையை யொருங்குகூட்டி மனதின்கண் நோக்கக் காணப்படும் ஸ்வரூபத்திற்குப் பிரணவத்தை உவமித்தாம். எம்பெருமானது ஜோதிர் மயமான திவ்யமங்கள வுருவத்தில் மனதைலயிப்பித்துத் தத்வெதிருக்த பதார்த்தங்களில் நாட்டமின்றி ஆநந்திக்கு நிலையைத் "தூங்காமற் றூங்குஞ் சுகம்" என்றாம். திருவேங்கடஞ் சோலைமலையொடு, இங்கு எண்ணுப்பொருட்டாகிய ஒடு ஒரோவிடத்து நின்றது. திருவெண்பதை சோலைமலையொடுங் கூட்டித் திருமாலிருஞ் சோலைமலை என்க.

ப்ரணவமென்னும் வடமொழிச்சிதைவு பணவம். சுடர், பண்பாகு பெயர். நெஞ்சே (நீ), எழுவாய். நாடு, பயனிலை. (௩௮)

## நேரிசைவெண்பா.

௩௯. நெஞ்சத் திருப்பாவை நேசமிலே னின்பதத்தைக்
கஞ்சத் திருப்பாவைக் கண்ணனே - துஞ்சத்தி
பாலன்பாவைக்கணருள் பார்த்ததிரு நாரணவென்
பாலன்பாவைக்கணருள் பார்த்து.

(இ-ள்.) கஞ்சத்திருப்பாவை கண்ணனே - அரவிந்தமலர்த் தவிசில்வளரும் பெரியபிராட்டியாரது கண்மணிபோன்றவனே, நின்பதத்தை - உமது திருவடியை, நெஞ்சத்து இருப்பாவை நேசம் இல்லேன் - மனதில் சதா இருத்தித்துதிக்கும் அன்பில்லாதவனாயினேன், (ஆயினும்) துஞ்சு அத்தி(க்கண்) - உயிர்நீங்கு நிலையிலிருந்த கஜேந்த்ராழ்வான்பக்கலினும், பாலன்(கண்) - சிறுமகவாகிய ப்ரஹ்லாதாழ்வான் பக்கலினும், பாவைக்கண்-த்ரௌபதைபக்கலினும், அருள் பார்த்த திருநாரண - அன்புவைத்துக்கடாக்ஷித்த திருநாராயணஸ்வாமியே, என்பால் அன்பாபார்த்து - இவ்வெளியேனுடைய தாழ்ந்தநிலையையு மன்புடனோக்கி, வைகண்ணருள் - க்ருபை பாலித்தருள்வீராக (எ-று.)

இருப்பாவை, காலங்கரந்த பெயரெச்சம். திருப்பாவைக்கண்ணன் - பெரியபிராட்டியார் தமக்கிருப்பிடமாகக்கொண்டதிருமார்பையுடையவன் எனினும், ஒருமிதுநம் என்னுமிடந்தோற்ற அவருடனொன்றிய கண்ணன் எனினும் அமையும். திருப்பாவை, இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அத்திபாலன் பாவைக்கண், கண்ணுருபை, அத்தியோடும் பாலனோடுங்கூட்டுக. திருநாரண (நீ) எழுவாய். வை, பயனிலை. அருள், செயப்படுபொருள். (௩௯)

## எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

## இரங்கல். அடிமடக்கு.

௪௦. பார்த்தன் பணிவலவன் பணியா தவமலையான்
பார்த்தன் பணிவலவன் பணியா தவமலையான்
நீர்த்து வரைக்குடையான் நிறைவண் பரிசாரன்
நீர்த்து வரைக்குடையான் நிறைவண் பரிசாரன்
காத்தண் டௌவத்தன் கம்பத் தரிகோலன்
காத்தண் டௌவத்தன் கம்பத் தரிகோலன்
பூத்தார் வண்ணத்தான் பொருவானெம்மானே
பூத்தார் வண்ணத்தான் பொருவானெம்மானே.

(இ-ள்.) பார்த்தன் பணிவலவன் - விஜயனால் வணங்கப்படுந் தேர்ப்பாகன், பணியாது அவம் அலையான் - சத்துருக்கள்பணிந்தாலல்லது அவர்

கள் துன்பங்களைப்போக்கான், பார்த்து அன்பு அணிவலவன் - பணிபவர்களைக் கடாக்ஷித்து அவர்களிடத்தன்பு பாராட்டலையே ஆபரணமாகப்பூண்ட சருணாநிதி, பணியாதவமலையான் - திருவநந்தாழ்வானவதாரமாகிய யாதவகிரிக்கதிபன், நீர்த்துவரைக்கு உடையான் - கடலினாற் சூழப்பட்ட துவாரகாபுரிக்கரசன், நிறைவண் பரிசாரன் - மாட்சிமைபெற்ற வண்பரிசாரமென்னுந் திருப்பதியான், நீர்த்து வரை குடையான் - வளப்பமுள்ள கோவர்த்தனகிரியைக் குடையாயெடுத்தவன், நிறைவு அண் பரிசு ஆரன் - பரிபூரண குணாபரணன், காதண் துளவத்தன் - சோலைக்கண்ணுள்ள தண்ணிய துழாய் மாலையான், கம் பத்து அரிகோலன் - ராவணன் பத்துச்சிரங்களையுந் துணித்தபாணத்தான், கா தண்டு உள்ள அத்தன் - அடியார்களைக் காக்குங் கௌமோதகியென்னுந் தண்டாயுதத்தையுள்ள திருக்கரத்தன், கம்பத்து அரிகோலன் - கம்பத்தில் உதித்த அழகிய சிங்கன் (அன்றிக்கே, கம்பத்து அரி - கம்பத்தில் உதித்த அழகியசிங்கன், கோலன் - மஹாவராஹாவதாரமெடுத்த ஜ்ஞாநபிரான்) பூத்தார் வண் நத்தான் - அழகிய மாலையணிந்த வண்மையுள்ள பாஞ்சஜந்யமென்னுஞ் சங்கமுடையவன், பொருவான் எம்மான்-போரின் மேன்மைபெற்ற எம்பெருமான், பூத்து ஆர் வண்ணத்தான் - ப்ரகாசித்துவிளங்குந் திருமேனி நிறத்தையுடையவன், பொருவான் எம்மான் - இத்தகைய ஆண்டவன் எம்பெண்ணைப்பொருந்தத் தகுதியானவன் (எ-று.)

திருத்தேர்த் தட்டினையண்ணிருந்தபடியே ஆசார்யனாகநின்று விஜயனுக்கு இருக்கீதையை அநுக்ரகஞ்செய்த சமயத்தை யொட்டி "பார்த்தன் பணிவலவன்" என்பதற்கு விஜயனால் வணங்கப்படுந் தேர்ப்பாகனெனப் பொருளுரைத்தாம். மற்றக்காலங்களில் அவ்விஜயன் ஏவிய வண்ணந் தேரை நடாத்தல்முதலிய தேர்ப்பாகனது தொழிலில் அவ்வடியார்களாகிய பாண்டவான்மீதுள்ள பரிபூரணகிருபையால் அமைந்திருந்த அவசரப்படி விஜயனால் பணிக்கப்படும் தேர்ப்பாகன் எனப் பொருளுரைக்கினுமமையும். இவ்வாறு அடியார்களுக்கு அடியானாயமையும் திருக்கல்யாணகுணபூரணனாதலான் மற்றோரிடத்தில் "அடியார்கட் கடியவனா யவர்களுள்ளக் கமலமலர்க்குடியாகவிருந்து முத்திகூட்டுமுன்னையன்பனென்கோ" என்றுதுதித்தாம். இது தனது நிறுப்புமதம். பணி - பணமாகிய படத்தை யுடையது. நீர்த்து வரை குடையான் என்பதில், நீர்த்து குறிப்புப்பெயரெச்சவினை. வண்பரிசாரம், ஈது திருப்பதியினொன்று. வலவன் முதல் வண்ணத்தான் வரையில் உள்ள முதல் வேற்றுமைப் பெயர்கள், எழுவாய். பொருவான், பயனிலை. மான், செயப்படுபொருள். (௪௦)

## நேரிசைவெண்பா.

### இரங்கல்.

௪௧. மானையெய்தார் மால்செய்தார் வாங்கவிழை யெங்கள்மட
மானையெய்தார் மால்செய்தார் மன்னுமோ யானைவிளி
மாயாதவசிகரி மாற்கென்று மிச்செற்ற
மாயாதவசிகரி மாட்டு.

(இ-ள்.) மானை எய்தார்-பொன்மானையெய்தவர், மால் செய் தார் வாங் கவிழை எங்கள் மடமானை எய்தார் - மேலான அழகிய மாலையைப்பெற இச்சையுள்ள எம் இளமைவாய்ந்தபெண்மானை வந்தடைந்திலர், (ஆனால்) மால் செய்தார் - அவளுக்கு வேட்கையைமாத்திரம் பெருக்கினர், யானைவிளி மா யாதவசிகரி மாற்கு - கஜேந்திராழ்வானாலழைக்கப்பட்ட யாதவசிகரி வாணராகிய திருநாராயணருக்கு, மாயாத வசிகரி மாட்டு - வசியவிஞ்சையில் கைதேர்ந்த இப்பெண்ணினிடத்து, என்றும் இச்செற்றம் மன்னுமோ-எப்போதும் இச்சலஞ் சாதிந்தல் நிலைக்குமா? (எ-று.)

மடம், பெண்களுக்குரிய நாற்குணங்களிலொன்றுமாம். மன்னுமோ என்பதில், ஓகாரம் எதிர்மறை. விளி, வினைத்தொகை. மா என்பதை, மாலோடொட்டுக. வசிகரி - வசீகரம் பண்ணிக்கொள்வதற்குரியவள். செற்றம், எழுவாய். மன்னுமோ, வினைப்பயனிலை. (௪௧)

கட்டளைக்கலித்துறை.

௪௨. மான்மழுவேந்தி மலர்வரு நான்முகன் வாசவன்றொன்
னான்மறை நேடியுங் காணாயதுகிரி நம்பாமன்
கான்மலர்தன்னி லகிரூசி காந்தங் கலப்பதொப்ப
யான்மனமொன்றுவ தென்றுகொலோதொலை யப்பவமே.

(இ-ள்.) மான்மழு வேந்தி - மானையும் மழுவையுங்கரத்திற்றாங்கிய சிவபெருமானும், மலர் வரும் நான்முகன் - தாமரைமலரிலுற்பவித்த நான்கு முகங்களையுடைய பிரமனும், வாசவன் - இந்திரனும், தொல் நான்மறை நேடியும் - பழமையான நான்குவேதங்களையுங் கொண்டு ஆராய்ந்து பார்த்தும், காணாயதுகிரி நம்பாமன் - அறியக்கூடாத யாதவகிரியில்வாழும் எம் பெருமானது, கால்மலர் தன்னில் - திருவடித்தாமரையில், அகி ஊசி காந்தம் கலப்பது ஒப்ப - இருப்பூசியானது காந்தத்தில் ஓடிக்கலக்குந் தன்மை போல, தொலையப்பவம்-என்பாவங்களெல்லாந்தொலைந்துபோமாறு, யான் மனம் ஒன்றுவது என்று கொல்லோ - ஏழையேன்மனம் போய்ப் பற்றுவது எந்த நாளிலோ? (எ-று.)

மான்மழு, உம்மைத்தொகை. மான்மழுவேந்தி, மலரயன் வாசவன் இச்செவ் வெண்ணின்கண் மூவரும் என்னுந்தொகை விகாரத்தாற்றொக்கது. நான்மறை இதில் மூன்றனுருபுதொக்கது. அன்றியும் மூவரோடு நான்மறையு நேடியுமெனக்கொளினு மமையும். கொல், ஐயம். ஓ, கழிவுப்பொருட்டு. ஒன்றுவது, எழுவாய். என்று கொலோ, பயனிலை. (௪௨.)

கட்டளை மண்டலக்கலிப்பா.

மடக்கு.

௪௩. தொலையச்செய்ததும் பாதகமலமே
தொண்டர்க்கீவதும் பாதகமலமே

அலைவொழித்தது மாதங்கத்தானையே
அரையுடுத்தது மாதங்கத்தானையே
நிலனன்றேற்றது மாதிவராகமே
நேயநின்றது மாதிவராகமே
வலவனூர்பணி யாதவநாகமே
வகிர்ந்ததும்பணி யாதவநாகமே.

௬௮

(இ-ள்.) (திருநாராயணர்) தொண்டர்க்கு - தம்மடியார்களுக்கு, தொலையச்செய்ததும் - நீங்கச்செய்தது, பாதகமலமே - பாவமாகிய வினையையே, ஈவதும் - அவர்களுக்குக்கொடுப்பது, பாதகமலமே - தம் பாதாரவிந்தத்தையே, அலைவு ஒழித்தது - (திருவோடுங்கையுமாக இரந்துண்டிருந்த) துன்பத்தை (இவர்) நீக்கியது, மாது அங்கத்தானையே - நாரிபாகனாகிய சிவபெருமானுக்கு, அரை உடுத்ததும் - (இவர்) இடையில் தரித்திருப்பது, மாதங்கத்தானையே-உயர்ந்த பீதாம்பரத்தை, நிலன் அன்று எற்றதும்-பூமியைப் பூர்வத்தில் (எயிற்றினுதியில்) தாங்கினதும், ஆதிவராகமே - (இவர்) முன்பு மஹா வராஹாவதாரஞ் செய்தருளியகாலையில், மாது நேயம் நின்றதும் - பெரியபிராட்டியின் அன்புதங்கியிருப்பதும், இவர் ஆகமே - இவருடைய திருமார்பின்கண், வல்லவன் ஊர்பணி யாதவ நாகமே - இத்தகைமைவாய்ந்த சர்வசக்தரது ஊர் திருவநந்தாழ்வானவதாரமாகிய யாதவகிரி, வகிர்ந்ததும் பணியாதவன் ஆகம் - இவர்பிளந்தது தம்மைவணங்காத இரணியனது மார்பை (எ-று.)

பாதகமலமே என்னுமடக்கின் ஏகாரங்களிரண்டும், முறையே அநிஷ்ட நிவாரணமும் இஷ்ட பூர்த்தியுமே தொண்டருறச்செய்வதென விளக்கலின், தேற்றப்பொருளன. மிக்க ஏகாரங்கள், அசை. (முன்) மாதங்கத்தான் உருபுமயக்கம்.

| | எழுவாய். | | பயனிலை. |
|---|---|---|---|
| செயப்படுபொருள் | மலம் | (வலவன்) | தொலையச்செய்தது. |
| | பாதகமலம் | ( ,, ) | ஈவது. |
| | அலைவு | ( ,, ) | ஒழித்தது. |
| | தானை | ( ,, ) | உடுத்தது. |
| | நிலன் | ( ,, ) | ஏற்றது. |
| | ஆகம் | ( ,, ) | வகிர்ந்தது. |
| | நேயம் | | நின்றது. |
| | ஊர் | | யாதவநாகம். |

(௬௮)

## நேரிசை வெண்பா.

௬௯. மேலைக்கோட்டைச்செல்வ ராயாவிரிகஞ்சக்
காலைக்கோட்டென்னெஞ்ச கஞ்சத்தில் - வேலைக்கோர்
பையாயிரவராவிற் பள்ளிகொள்ளும்பங்கயக்கண்
ஐயாவனையண்டினன்.

(இ-ள்.) மேலைக்கோட்டைச் செல்வ ராயா - மேலைக்கோட்டையில் வீற்றிராநின்ற சம்பத்குமாரனென்னுஞ் செல்வப்பிள்ளைராயனே, விரிகஞ்சக் காலை - விகசித்த பதுமத்துக்கொப்பான திருவடியை, கோட்டு என் நெஞ் சகஞ்சத்தில் - அடியேனுடைய உள்ளக்கமலத்திற் பதியும்படி யருளல் வேண்டும், வேலைக்கு - க்ஷீராப்திக்கு நாயகனும், ஓர்பை ஆயிர அரவில்- ஒப்பற்ற ஆயிரம் பணாமகுடங்களையுடைய திருவநந்தாழ்வானாகிய பாய லில், பள்ளிகொள்ளும் பங்கயக்கண் ஐயா - யோகநித்திரை செய்தருளும் புண்டரீகாக்ஷ ஐயனே, உன்னை அண்டினன்- அடியேன் தேவரீரையே சர ணாகதியடைந்தேன் (எ-று.)

வேலைக்கு ஐயா எனச்சேர்த்துப் பொருள்கொள்க.

| எழுவாய். | பயனிலை. | செயப்படுபொருள். |
|---|---|---|
| (நீ) | கோட்டு | கால் |
| (நான்) | அண்டினன் | உன்னை. |

(௪௪)

வஞ்சித்துறை.

மேகவிடுதூது.

௪௫. அண்டிநாரணனைக்
கண்டிதம் பேசி
வண்டமர் துளவைக்
கொண்டல்காள் தருவீர்.

(இ-ள்.) கொண்டல்காள் - மேகங்களே, அண்டி நாரணனைக்கண்டு- திருநாராயணனைக்கிட்டி நெருங்கிச்சேவித்து, இதம்பேசி - நயவுரையாடி, வண்டு அமர் துளவை - வண்டுகள் மொய்க்குந் துளபமாலையை, தருவீர்- வாங்கிக்கொண்டுவருவீர்களாக (எ-று.)

இதம், பண்பாகுபெயராய் மொழியை யுணர்த்திற்று. கொண்டல்காள் (நீங்கள்) எழுவாய். தருவீர், பயனிலை. துளவு, செயப்படுபொருள். (௪௫)

கட்டளைக்கலித்துறை.

௪௬. தணியாதவமலை சங்கந்தமிழ்மறை சந்ததஞ்செய்
பணியாதவமலை வாழ்பரந்தாமர் பதத்தையுன்னி
அணியாதவமலை வாகாதியற்ற வடைவரிடை
தணியாதவமலை பாகன்வலாரிவே தன்றடத்தே.

(இ-ள்.) தணியாத அமலை - தணிதலில்லாவொலியை, சங்கம் - சங்கு களும், தமிழ் மறை - தென்மொழிவேதமும், சந்ததம் செய் - சதாமுழக்கி வரும், பணியாதவமலைவாழ் - திருவநந்தாழ்வானதவதாரமாகிய யாதவகிரி யில்வாழ்கின்ற, பரந்தாமர் பதத்தை உன்னி - பரமபதநாதரது பாதாரவிந்

தத்தைநினைத்து, இடைதணியாத அமலைபாகன் - இடைபருத்தலிலாத அம்பிகைபாகனாகிய சிவபெருமான், வலாரி - இந்திரன், வேதன் - பிரமன், தடத்து - அம்மலையின் சாரலை, அணியா - ஒழுங்காக, தவம் மலைவு ஆகாது இயற்ற - தத்தந்தவம் மாறுபடாதுசெய்ய, அடைவர் - சேர்வார்கள் (எ-று.)

சங்கம், தமிழ் மறை, உம்மைத்தொகை. சந்ததம், வடசொல். அணியா, அத்திருவடிகளைத் தமது சிரசின்மேற் சூடியெனினு மமையும். அமலைபாகன், வலாரி, வேதன், எழுவாய். அடைவர், பயனிலை. தடம், செயப்படுபொருள். (௪௬)

## எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

### இ ர ங் க ல்.

௪௭. வேதன்பணி யாதவ மாமலைமேல்
வியன்மா மணிமண்டபம் வாழ்பதுமை
நாதன்றிருநா ரணன்மின் வதனம்
நண்பர்க் கருள்செய் நயனங்கமலப்
பாதத்துணைபைந் துளவத் தொடையெப்
பாங்கும் பார்வைக்கெதிர் தோன்றினவால்
சீதக்கலையாற் றெறுவெண் மதியே
செய்வா யிவணீ திருமால்வரவே.

(இ-ள்.) வேதன்பணி - பிரமன் வணங்குகின்ற, யாதவமாமலைமேல் - மாட்சிபெற்ற யாதவகிரியின்மீது, வியன் மாமணி மண்டபம்வாழ் - சிறந்த அழகிய மண்டபத்தின்கண் வீற்றிருக்கும், பதுமைநாதன் - பெரியபிராட்டிக்கு வல்லபனாகிய, திருநாரணன் - திருநாராயணனது, மின் வதனம் - கருணை நிறைந்தொளிரும் திருமுகமண்டலமும், நண்பர்க்கு அருள் செய் நயனம் - அன்பர்களைக் கடாக்ஷிக்கும் விழிகளும், கமலப்பாதத்துணை - பாதாரவிந்த யுகளமும், பைந்துளவத்தொடை - பசிய துழாய்மாலையும், எப்பாங்கும் பார்வைக்கு எதிர் தோன்றினவால் - எத்திக்கில் நோக்கிடினும் எதிராகக்காணப்படுகின்றனவாதலினாலே, சீதக்கலையால் தெறுவெண் மதியே - குளிர்ச்சியுள்ள கிரணங்களால் வெப்பத்தைக்கொடுத்து என் தேகத்தைவருத்துகின்ற சந்திரனே! செய்வாய் இவண் நீ திருமால்வர - அழகிய ஸ்ரீயஃபதி இவ்விடம் வரும்படியாக நீ செய்வாயாக (எ-று.)

எனக்கிங்கு அல்லல் விளைவிப்பதுபோல அங்கு அவர்க்குஞ்செய்து என்னைத் தேடிவரும்படிசெய், என்பாள் "சீதக்கலையால் தெறுவெண்மதியே" என்ற அந்தவுடனே "செய்வாய்" என்றாள். "இவண்திருமால்வர நீசெய்வாய்" எனவைத்து இவ்விடத்திற்குத் திருமால்வருவதோ நிக்கம் அங்ஙனம் அவர் வந்தபிறகு இப்போது நீ விளக்கும் அல்லலை அப்போது விளக்கவல்லாயல்லை என எதிர்மறைப்பொருள்கொள்ளினு மமையும். மதியே (நீ) எழுவாய். வரச் செய்வாய், பயனிலை. திருமால், செயப்படுபொருள். (௪௭)

## கட்டளைக்கலித்துறை.

சுஅ. மாயாப்பிரபஞ்ச வாழ்க்கையிற்சந்ததம் வந்துதித்து
மாயாவிளைத்திப் பவவாரிநீந்தும் வகையறியேன்
மாயாநின்ஞான மதலைதந்தாளெதி மாதிரமேல்
மாயாபிணித்த வினையாகியமல மாசறவே.

(இ-ள்.) மாயாபிரபஞ்ச வாழ்க்கையில் - தேவரீரது லீலாவிபூதியில் விளங்கும் இப்பூலோகவாழ்க்கையில், சந்ததம்வந்து உதித்து மாயா இளைத்து - அடிக்கடிவந்து பிறந்தும் இறந்தும் இதனால் இளைத்தவனாய், இப் பவ வாரிநீந்தும் வகை அறியேன் - இப்பிறவிக் கடலைக்கடப்பதற்கு யாதொரு வகையும் அறியாதவனாகவிருக்கிறேன், (ஆகையால்) பிணித்தவினையாகிய மல மாசு அற - (பூர்வகர்ம பலத்தால் என்னைச்) சூழ்ந்திருக்கும் வினை யென்னு மசுத்தத் திருக்கற்று வீழும்படி, எதிமாதிரமேல் மாயா - எதிகிரி யின்மீது நின்ற ஆச்சரிய குணசேஷ்டிதனே, மாயாநின் ஞானமதலைதந்து ஆள் - (ப்ரக்ருதியின் காரியங்களனைத்து மழியுங்காலத்தும்) அழிவின்றி சூக்ஷ்ம சிதசித் விசிஷ்டனாய்க்கொண்டுநிற்குங் காரணபூதனாகிய தேவரீரை யுள்ளபடியறியும் உணர்ச்சியாகிய யாதாத்ம்யஜ்ஞாந மரக்கலத்தை யடியே னுக்குக் கடாக்ஷித்தருளல்வேண்டும் (எ-று.)

பவவாரி நீந்த எம்பெருமானது ஞானமதலை வேண்டியப்ரகாரம் என்னெனில், அவன் சேஷியாகவும், சேதநர் சேஷபூதராயு மிருக்கிறபடியை யுள்ளபடி யறியு முணர்ச்சி வேண்டுமென்னுதல். மாயா (நீ) எழுவாய். ஆள், பயனிலை. (என்னை) செயப்படுபொருள். (சுஅ)

## நேரிசை வெண்பா.

சுகூ. மாட்சிபெறுவான்வணங்க வாமனனேயாதவவெற்
பாட்சிபெறுநாரா யணனிரணி - யாக்ஷனைமுன்
பாதலத்துமட்ட பரன்பதிகள்பூதலத்து
மீதலத்துமட்டசதமே.

(இ-ள்.) யாதவ வெற்பு ஆட்சிபெறு நாராயணன் - யாதவகிரியை யா ளும் திருநாராயணர், இரணியாக்ஷனை முன் - இரணியாக்ஷனை முற்காலத் தில், பாதலத்தும் அட்ட பரன் - பாதாளத்திற் போயொளித்தும் விடாது பொருதியழித்த பெருமான், பதிகள் - உவந்தருளிய நிலங்கள், பூதலத்தும் மீதலத்தும் அட்ட சதமே - பூவுலகத்தும் மேலுலகத்தும் நூற்றெட்டேயா னைகையால், மாட்சிபெறுவான் வணங்க வா மனனே - நாம் மேன்மைபெ றும்பொருட்டு அவைகளைச் சேவிக்கவாராய் மனமே (எ-று.)

அட்டசதமே என்றதில், ஏகாரம் தேற்றம். மனனே (நீ) எழுவாய். வா, பயனிலை. (சுகூ)

## பன்னிருசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

### சம்பிரதம்.

௫௰. அட்டமா திரமுமா றுடுவன் பதினான் கரும்புவன மேல் கீழதாய்
ஆக்குவ னவக்ரகக் கதியைப் புரட்டுவ னாகாய மதைவளைத்து
வட்டமா ரரிமணலை நாரியாப் பூட்டுவன் வானத் துலாவி வருவன்
வையமுண் டுமிழுவன் மலைநீறு செய்வனிவை மாயாவிவித்தையென்றால்
இட்டமா யாதவ கிரிச்சின கரத்துவளை யெரிதிகிரி தண்டு வில்வாள்
இருபுடையு மொளிசெய்யவலர்மங்கைநிலமங்கையிருவரும்வலமிடமுறத்
திட்டமா மாரா தநங்களெம் மெதிபதித் திருவுளப் படி நடக்கத்
திகழ்தேவதேவனடிமுடிகொளாத்தேவைநான்றேடியினிமுன்விடுவனே

(இ-ள்.) அட்டமாதிரமும் மாறுடுவன் - அஷ்டகுல பர்வதங்களையுந் தத்தம் நிலைமாறச் செய்வேன், பதினான்கு அரும் புவனம் மேல் கீழதாய் ஆக்குவன் - பதினான்காகச் சொல்லப்படுகிற அரிய உலகங்களை மேல் கீழ் கீழ் மேலாகச்செய்வேன், நவக்ரகக் கதியைப்புரட்டுவன் - ஒன்பது கிரகங்களின் நடையை மாறும்படிசெய்வேன், ஆகாயமதை வளைத்து வட்டமார் அரிமணலை நாரியாப் பூட்டுவன் - வெளியைப்பிடித்து வில்லாய் வளைத்து சக்ராகாரமான சமுத்திரத்தின் மணலைத்திரித்துக் கயிறாக மாட்டுவேன், வானத்து உலாவி வருவன் - அந்தரமாகிய வெட்டவெளியில் உலாவுதல் செய்துவருவேன், வையம் உண்டு உமிழுவன் - அண்டங்களை உட்கொண்டு மறுபடி வெளியிற் கக்குவன், மலைநீறு செய்வன் - பர்வதங்களைப் பஸ்பமாக வெரித்துவிடுவேன், இவை மாயாவி வித்தையென்றால் - (ஒருவேளை) யிவைகளெல்லாம் இந்த்ரஜாலக்காரன் செய்யும் விளையாட்டு வித்தையென்றுசொல்வீர்களாகில், இட்டமாய் யாதவகிரிச் சினகரத்து - யாதவகிரியின் மேல் விளங்குந் திருக்கோயிலின்கண் விருப்பத்தோடு, வளை எரிதிகிரி தண்டு வில் வாள் இருபுடையும் ஒளிசெய்ய - சங்கமும் பிரகாசிக்குஞ் சக்கரமும் தண்டமும் சார்ங்கமும் கட்கமும் இருபக்கத்திலும் பிரகாசித்துக் கொண்டிருக்க, அலர்மங்கை நிலமங்கை இருவரும் வலம் இடம் உற - ஸ்ரீதேவி பூதேவியராகிய இருவரும் வலமிடமாகப்பொருந்திநிற்க, திட்டமாம் ஆராதநங்கள் - முறைமையான திருவாராதனைகள், எம் எதிபதித் திருவுளப்படி நடக்கத் திகழ் - எங்களுடைய ராமாநுஜ எதீந்திரர் நேமனப்படி நிறைவேறிவர விசேஷித்துப் பிரகாசிக்கும், தேவதேவன் அடி முடி கொளாத்தேவை - தேவாதிதேவனாகிய திருநாராயணரது சக்ரவர்ணைபொருந்திய திருவடிகளைச் சிரமேற்கொள்ளாத ஒருகடவுளுண்டேல் அக்கடவுளை, நான் தேடி இனி முன் விடுவன் - நான் இனிமேல் தேடிக் கண்டு பிடித்துக்கொண்டுவந்து முன்பாகவிடுவேன் (எ-று.)

அஷ்டகுல பர்வதங்களின்னிலையை மாற்றல், பதினான்கு புவனங்களை மேல் கீழாக்கல், நவக்ரகக்கதியைப் புரட்டல், ஆகாயத்தைவளைத்துக் கடல்மணலைக் கயி

ருகத்திரிந்து நாரியாகப்பூட்டல், வானத்துலாவல், வையத்தையுண்டுமிழ்தல், மலையை நீருக்கல் இன்னவை யியற்கைக்கு மாறானவை எங்ஙனமோ அங்ஙனமே தேவதேவ னடிமுடிகொளாத் தேவுண்டென்றுதேடல். ஆகச்சே இவைகளைச் செய்வே னெனல் சம்பிரதமாயிற்று. நான், எழுவாய். முன்விடுவன், பயனிலை. தே, செயப்படுபொருள். (௬௦)

## கலி விருத்தம்.

௬௧. முன்னரமடங்கலாய் முனிந்தநாராயணன்
தன்னருங்கதத்தினைத் தணித்தல்செய்திலனேல்
மன்னலெங்ஙனமிம் மாநிலமசகமே
அன்னவாசவனய னரனண்டர்களுமே.

(இ-ள்.) முன் நரமடங்கலாய் முனிந்த - முற்காலத்தில் நரசிங்கமாகிச் சலங்கொண்டிருந்த, நாராயணன் - திருநாராயணரானவர், தன் அரும் கதத்தினை - தம்முடைய தணித்தற்கரிய கோபத்தை, தணித்தல் செய்திலனேல் - தானே தணித்துக்கொண்டிராவிடில், இம் மாநிலம் - இம்மலர்தலையுலகமும், மசகமே அன்ன வாசவன் அயன் அரன் அண்டர்களும் - கொசுகுக்குச் சமானமான இந்திரனும் பிரமனும் சிவனும் மற்றத்தேவர்களும், மன்னல் எங்ஙனம் - நிலைபெற்றது எவ்வண்ணமாகும்? (எ-று.)

“வாழ்குமரன் மேற்கனக வஞ்சகன்மே லோர்முகத்தே சூழ்கருணையும் முனிவுந் தோன்றினவால்” என்றபடி ஒருங்கே கருணையுங் கோபமுந் தோன்றிய புதுமையின் “அருங்கதம்” எனினுமாம். நிலம், இடவாகுபெயர். மசகமே இதில் ஏகாரம் தேற்றம். மன்னல், எழுவாய். எங்ஙனம், வினாப்பயனிலை. (௬௧)

## நேரிசை வெண்பா.

### கைக்கிளை.

௬௨. அண்டத் தவர்மண்பெண் ணாசையவா நீத்ததிரி
தண்டத் தவர்மனெதி சைலத்தோர் தண்கொடிக்குப்
பொற்புருவ மங்குல்குழல் பூங்காந்தள் மெல்விரல்கள்
விற்புருவ மங்குவளை வேல்.

(இ-ள்.) அண்டத்தவர் - தேவர்களும், மண்பெண் ஆசை அவா நீத்த திரிதண்டத்தவர் - மண்பெண் பொன்னென்னு மூவாசையுமற்ற திரிதண்டசந்யாசிகளும், மன் எதி சைலத்து - பொருந்திய எதிகிரியில், ஓர் தண் கொடிக்கு - ஒருமெல்லிய கொடிக்கு, பொற்பு உருவம் - உடலம் பொன்னிறமாகவும், மங்குல் குழல் - அளகபாரம் மேகமாகவும், பூம் காந்தள் மெல்விரல்கள் - மெல்லியவிரல்கள் காந்தட்புட்பமாகவும், வில் புருவம் - புருவம் சிலையாகவும், அம் குவளை வேல் - அழகியகண் வேலாயுத மாகவும் விளங்கும். (எ-று.)

ஆசை காரியவாகுபெயர். காந்தள் முதலாகுபெயர். குவளை அம்மலர்போன்ற கண்ணுக்காயது. உருவம், குழல், விரல்கள், புருவம், குவளை, எழுவாய். பொற்பு, மங்குல், காந்தள், வில், வேல், பயனிலை. (௫௨)

கட்டளைக்கலித்துறை.

௫௩. வேலைக்கோட்டைப்புரியைக்கண்சுவர்க்கமிடற்றிணைகொள்
மாலைக்கோட்டைப்புரி மானார்கலவியில் வாஞ்சைவைத்துக்
காலைக்கோட்டைப்புரி யைக்கடந்தாழ்வர் கருநரகில்
மேலைக்கோட்டைப்புரி நாராயணர்புகழ் மேவலரே.

(இ-ள்.) மேலைக்கோட்டைப்புரி - மேலைக்கோட்டையாகிய திவ்யதேசத்தில்வாழும், நாராயணர்புகழ் மேவலர் - திருநாராயணரது பிரபாவத்தை விருப்பொடு கொண்டாடாதவர்கள், வேலை கோட்டை புரியை - வேலாயுதத்தையும் யானைக்கொம்பையும் சங்கையும், கண் சுவர்க்கம் மிடற்றுஇணை கொள் - கண்களுக்கும் தனத்திற்கும் கந்தரத்திற்கும் முறையே உவமையாகக்கொண்ட, மாலைகோட்டைபுரிமானார் - மையல்விளைத்து வஞ்சனைபுரியும் மங்கையரது, கலவியில் வாஞ்சைவைத்து - சம்போகத்தில் இச்சைவைத்தவராய், காலைகோட்டைபுரியை கடந்து - விதித்த விதியையும் வரம்பையும் கட்டையும் விட்டுவிலகி, ஆழ்வர்கருநரகில் - அந்தகாரமாகிய நிரயத்திலேயே யழுந்தி யலைவர். (எ-று.)

எம்பெருமானது நித்யவிபூதியின் அத்யானந்தானுபவத்திற்கு ஹேதுவாகிய ப்ரபத்தி செய்யாதவர்கள் இந்தலீலாவிபூதியிலடையும் கிஞ்சித் ஆனந்தத்திலேயே மனம் வைத்தவர்களாய் உழன்றலைவர் என்பது பெறற்கு "நாராயணர்புகழ் மேவலர் மானார்கலவியில் வாஞ்சைவைத்து ஆழ்வர்கருநரகில்" என்றும். கருநரகில் என்பது தாய்மார் கர்ப்பங்களில் என்றுமாம். வேலை கோட்டை புரியை, கண் சுவர்க்கம் மிடறு இவை நிரனிறைப்பொருள்கோள். கொள்மானாரெனக்கூட்டுக. மேவலர், எழுவாய். ஆழ்வர், பயனிலை. (௫௩)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஊசல்.

௫௪. மேவலரா மைவர்விழை வினையின் மாழ்கி
விளைஜனன மரணமெனும் வேலைமூழ்கி
ஒவ்வுறு மடியன்வினை யொருங்கு நீக்கி
உழலுமன மதையொடுக்கி யடித்தட் டாக்கி
ஏவல்கொள்பா கவதரெனும் வளைய மாட்டி
எழில் பெறுநின் பதப்பாச விரச்சு பூட்டி
ஆவல்கொள் பூநிலமகளி ரருகிலாட
அழகியநா ராயணரே ஆடி ரூசல்.

(இ-ள்.) மேவலராம் ஐவர் - தெவ்வுகளாகிய ஐந்திந்திரியங்களும், விழை வினையில் மாழ்கி - செய்யும் செய்கைகளில் மயங்கியும், விளை ஜனன மரணமெனும் - இதனால் நேரும் பிறப்பிறப்பென்னும், வேலைமூழ்கி - சாகரத்திலழுந்தியும், ஓவல் உறும் - வருந்தும்படியான, அடியன் - எளியேனது, வினை ஒருங்குநீக்கி - (இனிவரும் ஜனனமரணங்களுக்கு ஹேதுவாகப் புரிந்திருக்கும்) ஆகாம்யசஞ்சித வினையை ஒரேமட்டாயொழித்து, உழலும் மனமதை ஒடுக்கி - (மேன்மேலு மத்தீயவினைகளையே நாடிச், சுழலுமனதை (யங்ஙனஞ்செல்லாவண்ணம்) அடக்கி, அடித்தட்டு ஆக்கி - பரிசுத்தமான அடித்தட்டாகவமைத்து, ஏவல்கொள் - திருப்பாதகைங்கர்யத்தை யடியேனுக்கு நேமனஞ்செய்து அங்கீகரிக்கும், பாகவதர் எனும் வளையம்மாட்டி - பாகவதகோஷ்டியாகிய வளையங்களை அத்தட்டின் நாற்புறத்தும் பொருத்தி, எழில்பெறும் நின்பதப்பாச - (நிர்ஹேதுக க்ருபைபாலிக்கும்) அழகிய உமது திருவடியின் ஸ்வபாவமான அன்பாகிய, இரச்சுபூட்டி - பாசத்தைப் பூட்டி, (இவ்விதமாய் அடியேனுள் சமைத்துக்கொண்ட உஞ்சலில் ஆரோகணஞ்செய்தருளி) ஆவல்கொள் பூ நிலமகளிர் - அன்புமிக்க பெரியபிராட்டியாரும் பூமிபிராட்டியாரும், அருகில்ஆட - இருபுறத்து மிருந்தாடவும், அழகிய நாராயணரே - லாவண்யமுள்ள திருமேனியையுடைய திருநாராயணரே, ஆடிர் ஊசல் - உஞ்சலாடியருள்வீராக. (எ-று.)

இரச்சு என்பது ரஜ்ஜு என்னும் வடசொற்றிரிபு. ஆட என்னும் வினையெச்சத்தை அழகிய என்னும் குறிப்புப்பெயரெச்சத்தோடு முடிக்க தேவிமாரருகிலிருந்தாடுவதால் திருமேனியினழகு கழகுசெய்ய அழகிய எனப் பொருள்கொள்ளினுமாம். இங்கு ஆட காரணப்பொருட்டு. திருநாராயணரே (நீர்) எழுவாய். ஊசலாடிர், பயனிலை. (௯௪)

### நேரிசை வெண்பா.

௫௫. ஆடு டும்பைந் நாகணையான் யாதவமா மாதிரமேல்
நீடு டும்பைங் கோயிலா னேர்ந்தவனை நாடும்பை
போக்குநீ ரன்புள்ளான் போதன் விளக்குபதந்
தாக்குநீ ரன்புள்ளான் றான்.

(இ-ள்.) ஆடிடும்பைநாக அணையான் - ஆடும்படியான பணமகுடங்கள் மேற்கட்டிபோல் கவிந்திருக்கப்பெற்ற திருவநந்தாழ்வானென்னும் பாயலின்மீது திருப்பாற்கடல் நாப்பண் திருக்கண்வளர்பவன், யாதவமா மாதிரமேல் - உயர்ந்த யாதவகிரியின்மேல், நீடு இடும்பை கோயிலான் - நீட்சியுள்ள திருக்கோயிலின்கண் நின்றதிருக்கோலச் சேவைசாதிப்பவன், போதன் விளக்குபதம் தாக்கும் நீரன் - பிரமன் திருமஞ்சனமாட்டிய கங்கை திருவடியினின்றும் பாய்தலையுடையவன், புள்ளான் - வாகனமாகப் பெரிய திருவடியை யுடையவன், (இங்ஙனமாய வைபவங்களையுடையவனாகிய திருநாராயண ஸ்வாமிதான்) நேர்ந்தவனை - அநந்யார்ஹ சேஷபூதராய்த் தன்

ளை ஆச்ரயித்தவர்களை, நாடு இடும்பை போக்கும் - ப்ரக்ருதி சம்பந்தத்தால் வந்த சம்ஸாரதுக்கத்தை நிவர்த்திபண்ணும், நீர் அன்பு உள்ளான் - ஸௌலப்யகுணம் பொருந்தியுள்ளவன். (எ-று.)

திருப்பாற்கடற் சேவைபெறத் தேசவிப்ரகர்ஷத்வத்தாலே கூடாத அஸ்மதாதிகளுக்கு ஆச்ரயணீயமாகத் திருநாராயணபுரத்தில் அர்ச்சாரூபமாக வெழுந்தருளிய சௌலப்யகுணமுடையவன் என்பது கருத்து. ஆடிடும். என்பதில் ஆந் இடு என்னும் பகுதிகள் புணர்ந்து அனைத்து மோர்பகுதியாயது. நீடிடும் என்பதும் அந்நீர்மைத்தே. தான், அசை. அணையான், கோயிலான், நீயன், புள்ளான், எழுவாய். அன்புள்ளான், பயனிலை. (௫௫)

கட்டளைக்கலித்துறை.

இரங்கல்.

௫௬. தானத்திலங்கை யிரந்தேற்ற தலத்த, தாள்வணங்கு
வானத்திலங்கைத் திருவாளற்கன்ப, மருங்குபடர்
கூனத்திலங்கை நிகேதன, யாதவ கோத்திரவி
மானத்திலங்கைய, வாராள்வலியவெம் மத்திமையே.

(இ-ள்.) தானத்தில் அங்கை இரந்து - மாவலிச் சக்ரவர்த்திசெய்த தானத்திற்கு இரண்டு கரங்களையுந் தாழ்த்தி ஆச்ரதனென இந்திரன் பொருட்டு யாசித்து, ஏற்றதலத்த - அங்கீகரித்த பூமியையுடையானே, தாள்வணங்குவானத்து - சரணாகதிபுக நத்திவந்த, இலங்கைத்திருவாளற்கு அன்ப - லங்கா ஸ்ரீமானாகிய விபீஷணாழ்வானை யங்கீகரித்த சௌசீல்யகுணத்தையுடையவனே, மருங்குபடர்கூன்நத்து இலங்கைநிகேதன - கரைகளில் விளைந்த சங்குகள்படரும் காவேரியாற்றிடைக் குறையில் திருவரங்கப் பெருங்கோயிலினுள் அவ்வாழ்வானிருக்குந் தென்றிசைநோக்கித் திருக்கண்வளர்ந்தருளும் அரங்கவிமானமுடையவனே, யாதவகோத்திர விமானத்து இலங்கு ஐய - யாதவகிரியின்மேல் ஆநந்தமய விமானத்தில் திருநின்றகோலச் சேவைசாதிக்குந் திருநாராயண ஸ்வாமியே, வாராள்வலிய எம் மத்திமை - எம்பெண் நீர்விரும்பினாலன்றி வரப்பட்டவளன்று. (எ-று.)

தாள்வணங்கு வானத்து இலங்கு ஐ எனப்பிரித்து, "ராகவா! சரணம்" என ஆகாயமார்க்கத்திலிருந்தவாறே சரணாகதம் பண்ணின அழகிய என்றும்; யாதவகோத்திர விமானத்தில் அங்கு ஐய எனப்பிரித்து, யாதவகிரியின்மேல் ஆநந்தமய விமானத்தில் திருநின்றகோல சேவைசாதிக்கும் ஸ்வாமியே உம்மிருப்பிடத்திற்கு என்றும் பொருள்கூறினு மமையும். மத்திமை என்றது காமமும் நாணமும் சமத்வமாகக் கலந்துள்ளவள் என்பது தோற்றற்கு. காமத்தால் வாரதிருப்பதையும் நாணத்தால் வலியவருவதையும் பொருளாகையின் கடாக்ஷித்தருளல்வேண்டுமென்றுளாயிற்று. மத்திமை, எழுவாய், வாராள், பயனிலை. (௫௬)

பதினாறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

௫௭. மத்தநான்மருப்பு வாரணன்வனச மலர்ப்பவவாரணன் கொற்ற
வாரணத்துவசற் கத்தனுதித்தர் மருவொணாவாயில் வைகுந்தத்

துத்தமநித்தர் முத்தர்பத்தர்களு முய்யுமாறரவிந்தவமளி [யத்துக்
உறைதருமடந்தை யுவப்பொடு கொளவாங் குரைத்தரு டிருத்துவ
கத்தநல்லயோத்திக் கதிபயாதவவெற் பானந்தமய விமானத்துள்
அடியர்பால்வைத்த வன்பினானின்ற வாயநின்னீர்மை யாரறிவார்
கத்தநாற்கரண மடங்கியைம்பொறியுங்கலங்கிச்சொல்லொடுங்கிடுமந்நாள்
கடையனேன்முன்பொற்கருடன்மேல்வந்துகடைக்கணித்தருளனின்கடனே.

• • (இ-ள்.) மத்தநாள் மருப்பு வாரணன் - மதம்பொழிவதாகிய நான்கு தந்தங்களையுடைய அயிராவதத்திற்குத் தலைவனாகிய இந்திரனும், வனசமலர்ப்பவ ஆரணன் - திருநாபிக்கமலத்திலுதித்த பிரமனும், கொற்றவாரணத்துவசற்கு அத்தன்-வெற்றிபெற்ற கோழிக்கொடியினையுடைய கந்தனுக்குத் தந்தையாகிய சிவபெருமானும், ஆதித்தர் - இவர்களை முன்னிட்டுக்கொண்டு வந்திருக்கு மற்றத்தேவர்களும், மருவ ஒண்ணுவாயில் வைகுந்தத்து - நெருங்குவதற்குங்கூடக் கூடாது அடர்ந்திருக்கு முகத்வாரத்தையுடைய ஸ்ரீவிஷ்ணுலோகத்திலே திருமாமணி மண்டபத்திலுள்ளே, உத்தமநித்தர் முத்தர்பத்தர்களும் உய்யுமாறு-உத்தமர்களாகிய நித்யஸூரிகளும் முக்தர்களும் (அஸ்மதாதிகளாகிய) பத்தர்களும் உஜ்ஜீவிக்கும்படி, அரவிந்த அமளிஉறை தருமடந்தை-அரவிந்தத்திருத்தவிசில் வாசம்பண்ணுகின்ற ஸ்வமஹிஷியான பெரிய பிராட்டியாரானவர், உவப்பொடுகொள்ள ஆங்கு உரைத்தருள் - ஆநந்தத்தோடு ஏற்றுக்கொள்ளும்படி வெளியிட்ட, திருத்துவயத்துக்கு அத்த - திருமந்திர விவரணமாகிய த்வயத்துக்கு அர்த்தப்பூதனே, நல் அயோத்திக்கு அதிப - திருவயோத்யைக் கதிபனாகத் திருவவதரித்த சக்ரவர்த்தித் திருமகனே, யாதவவெற்பு ஆனந்தமய விமானத்துள் - யாதவகிரியின்மீது ஆனந்தமய விமாநத்திலே, அடியர்பால்வைத்த அன்பினால் நின்ற ஆய - ஆச்ரிதர்கள் மேலுள்ள பேரன்பினால் திருநின்றகோலச்சேவை சாதிக்குங் கோபஸஜாதீயனாயவதரித்த ஆயனே, நின் நீர்மை யார் அறிவார்-இத்தகைய தேவரீரது திவ்யதிருக்கல்யாணகுணங்களை யாவரால் அறியக்கூடும், கத்த - உபயவிபூதிக்குங் காரணபூதனே, நாற்கரணம் அடங்கி - அந்தக்கரண சதுஷ்டயங்களாகிய மனோபுத்தி சித்த அகங்காரங்களும் அடங்கி, ஐம்பொறியும் கலங்கி - பஞ்சேந்திரியங்களும் ஸங்குலிதமாய், சொல் ஒடுங்கிடும் - நாவானதும் வீழ்ந்துபோகும், அந்நாள் - அந்த சரமதசையில், கடையனேன்முன் - கடையேனாகிய இவ்வடியேன் முன்பாக, பொற்கருடன்மேல்வந்து - ஸ்வர்ணமயமாக ப்ரகாசிக்குந் திருமேனியையுடைய பெரிய திருவடியின்பேரில் ஆரோகணஞ்செய்தருளி, கடைக்கணித்து அருளல் நின்கடனே - கடாக்ஷித்து ஆளாக்கிக்கொள்வது தேவரீரது பாரமாகும். (எ-று.)

நித்யஸூரிகளே முதலான பரமபதவாசிகள் நிறைந்திருப்பதால் இந்திராதிதேவர்களுக்கு நெருங்க வொண்ணாதிருக்கையாலே "மருவொணுவாயில்" ஆயிற்று. வைகுந்தத்து த்வயத்துக்கத்த, அயோத்திக்கதிப என்றபின் யாதவமலையில் நின்ற ஆய என்றதனால் வ்யூஹவிபவங்கள் தேசகாலவிப்ரகர்ஷ்டத்வங்களாலே அஸ்மதாதி

கட் காச்ரயணீயமாகாவென யாதவகிரியின்மீது அர்ச்சகபராதீநனாய்வந்து திருச்சேவைசாதிக்கின்றனென்றதாயிற்று. நின்நீர்மையாரறிவார் என்பதற்கு இங்ஙனம் வர்த்திக்கும் ஸௌலப்ய குணவிசேஷத்தைத் தேவரீரே காட்டிக்கொடுத்தாலன்றி ஸ்வஸாமர்த்தியத்தால் அறியவல்லார் யார் என்பது பொருள். அந்நாள் என்பதில் அகரச்சுட்டு முன்சொன்ன விசேஷங்களால் சமயத்தைக்குறித்தது. மருவொணு, மருவ என்பதினீறு தொக்கது. கரணம் என்றதில் முற்றும்மையும் அடங்கி, கலங்கி, ஒடுங்கி என்றுழிவினைச்செவ்வெண்ணும்மையும் விகாரத்தால் தொக்கன. சரணாகதம் பண்ணினரைக் காத்தல் எம்பெருமானுக்கின்றியமையாக் குணமாதலின் இற்றேகாரம், தேற்றம். ஆனல், எழுவாய். கடன், பயனிலை. (௫௭)

நேரிசைவெண்பா.

௫௮. நின்கடனே யென்னையுன்பொன் னேர்பதப்பணிக்குவைத்தல்,
என்கடனே யுன்சரணமென்னிதயத் துன்னிநத்தல்,
நட்டவரை யாளுமெதி நாகவரையா, சலதி
நட்டவரை யா,புயல்வண் ணு.

(இ-ள்.) நட்டவரை ஆளும் - திருவடிகளை யாச்ரயித்த பாகவதரை யுவந்தருளும், எதிநாக அரையா - யதிகிரிக்கரசே, சலதிநட்டவரையா - திருப்பாற்கடலில் நாட்டிய மந்தரகிரியைக்கூர்மமாகத்தாங்கியவரே, புயல்வண்ணு - நீலமேக ஸ்வரூபரே!, நின்கடனே என்னை உன் பொன் நேர்பதப்பணிக்குவைத்தல் - சேஷபூதனாகிய அடியேனைப் பொற்புறழுந் திருவடிக்கைங்கர்யங்களி லீடுபடச்செய்வது சேஷியாகிய தேவரீர்க் குகப்பு, என்கடனே உன்சரணம் என் இதயத்து உன்னிநத்தல் - தேவரீரது திருவடிகளே உபாயோபேயமெனச் சிந்தித்து அவைகளைப் பற்றுக்கோடாக்கொண்டு உம்மையாச்ரயிப்பது அடியேனுக்கு ஸ்வரூபமாகும். (எ-று.)

ஏகாரங்கள் இரண்டும் தேற்றப்பொருளன. சலதி, வடமொழி. சலத்திற் கிருப்பிடமானது. சலதிநட்ட என்னுங் குறிப்பால் வரை மந்தரகிரியை யுணர்த்திற்று, எம்பெருமான்திருவடிகளையே உபாயோபேயமாகப் பற்றவேண்டும். அங்ஙனம் பற்றும்படி நேர்வதுக்கும் அவனது நிர்ஹேதுக க்ருபைவேண்டும் என்பது கருத்து. வைத்தல், நத்தல் எழுவாய். கடன், பயனிலை. (௫௮)

கலிநிலைத்துறை இரங்கல்.

படக்து.

௫௯. வண்ணமுள்ள செல்வியிவள்வண்ணமுள்ளசெல்வவரர், மதர்த்துநீண்
கண்ணழகியிவள் காத்தற்கண்ணழகரவர், வண்டுகளித்துப்பாடும் [ட
கண்ணிவருங் குழலியிவள் கண்ணிவருங்குழலரவர், கழறுமிந்தத்
திண்ணமதாலெங்காந்தை திண்ணமுள்ள காந்தைதிரு நாரணர்க்கே.

(இ-ள்.) வண்ணம் உள்ளசெல்வி இவள் - அழகு நிறைந்த செல்வப்பெண் இவள், வண்ணம் உள்ள செல்வர் அவர் - சுத்த சத்வகுணவிசிஷ்டரான செல்வப்பிள்ளை அவர், மதர்த்துநீண்ட - வெறித்தமான்னேக்கை நிக

ர்த்து குழையைத் தாவும்படி நீட்சியாகிய, கண் அழகி இவள் - அழகாய நேத்திரங்களையுடையவள் இவள், காத்தற்கண் அழகர் அவர் - ரக்ஷகத்வத்தில் முகோல்லாசமுடைய திவ்ய சுந்தர அலங்காரர் அவர், வண்டுகளித் துப்பாடும் - வண்டுகள் மதுவையுண்ணக் களிப்போடு படிந்து ரீங்காரஞ் செய்யும், கண்ணிவரும் குழலி இவள் - பூமாலைகளேறப்பெற்ற கூந்தலையுடையவள் இவள், கண் இவரும் குழலர் அவர் - கணுக்களுள்ள வேய்ங்குழலையுடையவர் அவர், கழறும் இந்த திண்ணமதால் - என்று சொல்லப்பட்ட இச்சொற் சம்மந்தத்தால், எம்காந்தை - எம்பெண்ணானவள், திண்ணம் உள்ள காந்தை திருநாரணர்க்கே - திருநாராயணருக்கே மெய்யான காதலியெனத்தக்கவள். (எ-று.)

காந்தை, காந்தா என்னும் வடமொழித்திரிபு. இச்சிக்கப்பட்டவள் என்பது பொருள். காந்தை, எழுவாய். காந்தை, பயனிலை. (௫௯)

## நேரிசைவெண்பா.

௬0. திருநாரணனே திகழ்தேவனென்ன
ஒருநான் மறைபரவு மூரோ திருநாடு
சென்றாரு மீண்டிழிந்து சேவிக்க மேவுவளம்
என்றாரு மிவ்வெதியேந்தல்.

(இ-ள்.) திருநாரணனே - ஸ்ரீமந்நாராயணனே, திகழ்தேவன் என்ன - அநாதிவிசித்தமாய் விளங்குந் தெய்வமென்று, ஒரு நால் மறை பரவும் - அநாதிவிசித்தமாய் விளங்கும் நான்காக வகுக்கப்பட்ட வேதமே ஓலமிடுகின்றது, ஊரோ - அவரிருக்குந் திவ்யதேச மெதுவென்றால், திருநாடுசென்றாரும் - கைங்கர்ய மேலீட்டால் பரமபதம் பெற்றவர்களுங்கூட, மீண்டு இழிந்து சேவிக்கமேவு - திரும்பவு மிறங்கிவந்து தரிசிக்க விரும்பும்படியான, வளம் என்று ஆரும் - என்றென்றும் அத்புதமான திவ்யமங்கள வைபவங்களுக்காதரணீயமாக விருக்கும், இ எதி ஏந்தல் - இந்த யாதவகிரி தான் (எ-று)

இழிந்து என்பதற்கு (அபரிச்சேதஜ்ஞாநாதி குணஸஹிதத்வத்தையும் நிரதிசயாநந்தாநுபவத்வத்தையுங் கைவிட்டுத் தாழ்ந்த பிறப்பினராய் எனப்பொருள்கொள்ளினுமாம். ஏகாரம், பிரிநிலை. ஓகாரம், வினா. சென்றாரும், உயர்வு சிறப்பும்மை. என்று என்பதில் முற்றும்மை தொக்கது. இகரச்சுட்டு எதியேந்தல் தேசவிப்ரகர்ஷடத்வமன்றென்பதை யுணர்த்திநின்றது. மறை, ஊர், எழுவாய். பரவும், ஏந்தல், பயனிலை. (௬0)

## கட்டளைக்கலித்துறை.

## இரங்கல்.

௬௧. ஏந்துந்தனத்தங் கனைமீர்கொன்னேயென் னிருதயமேல்
சாந்துந்தனத்தங்கள் செய்தீர்தணலுந் தணிந்ததுண்டோ

காந்துந்தனத்தங்க மாவார்யதுகிரிக் கத்தரிவண்
போந்துந்தனத்தங்கத் தென்னையணைத்துப் புணர்ந்திலரோ.

(இ-ள்.) காந்தும் தமநத்தம் கம் ஆவார் - தாம்திருக்கரத்திலேந்திய பாஞ்சஜந்யம் வெண்மையாகவுடையர், யதுகிரிக்கு அத்தர் - யாதவகிரிக்கு அதிபர், இவண்போந்தும் - இவிடத்திற் றெழுந்தருளியும், தனத்து அங்கத்து என்னை அணைத்துப் புணர்ந்திலர் - ஸ்வர்ணமயமான பர்யங்கத்தின் மேல் என்னைத் தழுவி இன்பத்தைத் தரவில்லை (ஆகையால்), ஏந்தும் தனத்து அங்கனைமீர் - நிமிர்ந்த கொங்கைகளை யேந்திய தோழிகாள், கொன்னே - அவலமாக, என் இருகுயமேல் - என்னிரண்டு தனங்களின்மீதும், சாந்து உந்து அனத்தங்கள் செய்தீர் - வெப்பந்தணிப்பான் கலவைச்சாந்து களையப்பி விபரீதஞ்செய்து விட்டீர்கள், தணலும் தணிந்ததுண்டோ - என்விரகதாப பரிஹாரகமாயிற்று இல்லையே. (எ-று.)

ஏந்துந்தனம்-சரியாது நிமிர்ந்ததனம்; எனவேயதனையுடையார் பருவப்பெண்களைக்குறித்தாளாயிற்று. கொன்னே ஏந்துந்தனத் தங்கனைமீர் எனவைத்து ஸிங்காரச்சுவையடையப் பெறாது கொன்னே பருத்தகொங்கையையுடைய தோழிகாள் எனப்பொருளுரைப்பது மொன்று, ஆகவே கொன்னே என்பது இருமருங்குஞ் சென்று பொருள் கொள்ளலின் தாப்பிசையாயிற்று. தணலும் என்றதில் உம்மை உயர்வு சிறப்பு. உண்டோ இதில் ஓகாரம் எதிர்மறை. போதராமுன்போலப் போந்து மணையப்பெறாமையின் இங்கு உம்மை எதிர்மறைப்பொருட்டு. தழல், எழுவாய். தணிந்ததுண்டோ, விளைப்பயனிலை. (சாக)

நேரிசைவெண்பா.

இரங்கல்.

சாஉ. புணர்மான் புலம்பவிட்டுப் போனார்வாராரோ
குணமால் குடிலத்திற் கூம்பி நிணமார்மெய்
குன்றுதரித்துவந்த கோவத்தனத்தரெதி
குன்றுதரித்துவந்த கோ.

(இ-ள்.) குணமால் குடிலத்தில் கூம்பி - கீட்டிசைத்தலைவனாகிய இந்திரன் வஞ்சமாய்ப்பெய்வித்த மழையாலொடுங்கி, நிணம் ஆர் மெய் குன்று - ஊன் நிறைந்த வுடலங்குன்றிய, ஆதரித்து வந்த கோவத்தனத்தர் - பசுக்கள் தங்கிவந்த கோவர்த்தனகிரியைக் குடையாய்ப்பிடித்தவர், எதி குன்று ஆதரித்து உவந்தகோ-யதிகிரியை இச்சித்து வீற்றிருக்கும் தலைவர், புணர் மான் புலம்பவிட்டுப்போனார் வாராரோ - தாம் அணைந்த எம்பெண் இரங்கும்படியாகப் பிரிந்துபோனவர் திரும்பிவராதிருப்பரா? (எ-று.)

ஊன் நிறைந்த மேலே விலக்ஷணமாகக் காணப்படுந்தேகம் என்பதற்கு "நிணமார்மெய்" என்றும் இதுதான் மேய்த்தபசுக்களுக்குக் குன்றுவண்ணங் காத்தருளியவர் தாமாதரித்தணைந்தபெண் பிரிவாற்றாமையின் புலம்பித்தேகங்குன்றுமாறு வாராதிருக்கமாட்டார் என்பது தோன்றற்கு எதிர்மறை ஓகாரங்கொடுத்து "வாராரோ" என்றுங்கூறினள். போனார், எழுவாய். வாராரோ, விளைப்பயனிலை. (சாஉ)

கலிநிலைத்துறை.

இரங்கல்.

௬௧. கோமளவம்மக் கோகிலவின்சொற் குழைநாடும்
தாமரைநேர்கட் காமினிகாள்யா தவசைலத்
தாமருவத்தார் சாமமணைந்தார் தாராரேல்
தாமவுடற்கு ளாவிநிலைத்துத் தரியாதே.

(இ-ள்.) கோமள அம்மம் - இளமைதங்கிய தனங்களும், கோகில இன் சொல் - குயிலின் இனியவோசையை நிகர்த்தசொல்லும், குழைநாடும் - கர்ணபரியந்தம் ஊடுருவிப்பாய்ந்த, தாமரை நேர் கண் - கமலம்போன்ற நயனங்களும் பொருந்திய, காமினிகாள் - மாதர்களே, யாதவ சைலத்தாமர் - யாதவகிரியில் வீற்றிருக்கின்ற திருநாராயணர், உவந்து ஆர் சாமமணைத் தார் - திருமார்பிலணிந்த வாசமணக்குந் துளபமாலையை, தாராரேல் - தந்திலரானால், தாம உடற்குள் - சதுமாமமாகிய இந்தேகத்தில், ஆவி நிலைத்துத் தரியாது - உயிரானது நிலைத்திருக்கமாட்டாது (எ-று.)

கோமளவம்மம், அழகிய தனமெனினுமாம். மாதர்களைக் காமினிகாள் என விளித்தது, தன காமச்செவ்வியை யாவரும் மதியாத்தவுணர்ந்தானென வென்க. ஆவி, எழுவாய். தரியாது, பயனிலை. (௬௧)

தாழிசை.

களி.

௬௨. தேனடர்ந்தலர் குடைந்திமிர்ந்தினிய தேனருந்தி மகிழ் சோலைவாய்ச்
செய்யபொய்கைகள் செறிந்தயாதவ சிலோச்சயச்சினகரத்துளே
பானுநேர்கிகிரி யாதியேதியிரு பாலிலங்குதிரு நாரணர்
பாரணைக்கபத வாசைமெய்ப்புகழ் பராவுமத்தமிகு களியரோம்
ஊனமற்றதெறு மெங்கள்பானமதி னேற்றமேற்றமறை காண்கிலேம்
ஓர்கொண்மாதவ மிசைந்திலிங்கிக ளிலங்கினர்மலர் சொரிந்தயன்
வானநாதனான் வாழ்த்துவாரியை வாவிரிந்தனக முண்டகம்
மாரியின்றிநிலம் வாழுமோதமிழும் வாருணித்தலைவனர்க்குமே.

(இ-ள்.) தேன் அடர்ந்து அலர் குடைந்து இமிர்ந்து - வண்டுகள் நெருங்கி மலர்களிற்படிந்து ரீங்காரஞ்செய்து, இனியதேன் அருந்தி மகிழ் சோலைவாய் - மதுரமான மதுமாந்திக் களித்தற்குக் காரணமான பொழிற்களினிடையில், செய்யபொய்கைகள் செறிந்த - அழகிய தடாகங்கள் நிறைந்திருக்கும், யாதவ சிலோச்சயச் சினகரத்துளே - யாதவகிரிமேல்விளங்குந் திருக்கோயிலினுள், பானு நேர் கிகிரி ஆதி எதி - கோடி சூர்யப்ரகாசம்பொருந்திய திருவாழிமுதலிய பஞ்சாயுதங்கள், இருபால் இலங்கு - இருமருங்கிலும் பிரகாசித்து விளங்கும், திருநாரணர் - திருநாராயணரது, பார் அனந்த

பதவாகை மெய்ப்புகழ் பராவு - உலகளந்த திருவடியின் உண்மையான சீர்த்தியைக் கீர்த்தித்துக்கொண்டாடுகின்ற, மத்தம் மிகு களியமோம் - செருக்குமிக்க களியராகிய நாங்கள், ஈனம் அற்றது எனும் - இழிவில்லதெனச்சொல்லும், எங்கள் பானமதின் ஏற்றம் - எங்கள் பானத்தினது உயர்ச்சியை, ஏற்றமறை காண்கிலேம் - துதித்துப்பாடத் தகுதியான சொற்கள் கிடைக்கப் பெறாதவர்களாயிருக்கின்றோம், (ஆகிலும் சொற்கள் கிடைத்தவளவிற் சொல்கின்றோம்.) ஏர்கொள் மாதவம் இசைந்து இலிங்கிகள் இலங்கினர் - அழகிய மாதவமாகிய அகோரதவத்தைப்புரிந்து முனிவர்கள் பிரக்யாதியடைந்தார்கள், மலர்சொரிந்து அயன் வானநாதன் அரன் வாழ்த்துவார் அரியை - புஷ்பாத் யுபசாரணங்களைப் பணிமாறி பிரமனென்ன தேவலோகத்தையாளும் இந்திரனென்ன சிவபெருமானென்ன, இவர்கள் அரியாகிய திருநாராயணனை தண்டப்ரணாமம்பண்ணிப் பூசிப்பார்கள், வர விரிஞ்சன் அகம் முண்டகம் - இவர்களில் ச்ரேஷ்டனாகிய பிரமனுக்கு ஆலயம் முண்டகமாகிய தாமரை, மாரி இன்றி நிலம் வாழுமோ - மாரியாகிய மழையில்லாதாயின் பூலோகம் நிலைபெறுதல் உண்டோ,? தமிழும்வாருணித்தலை வளர்ந்ததே - இத்தென்மொழியுங்கூட வாருணியாகிய அகஸ்தியமுனிவரிடத்து விருத்தியாயிற்று. (எ-று.)

ஹேதி என்னும் வடமொழிச்சிதைவு ஏதி. இருபாலும் என்றதின் முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. பராவு, வினைத்தொகை. திருநாராயணரது பாரளந்த பதத்தின் பெருமையைப் புகழ்ந்தோர்ந்த ஆனந்தச்செருக்கால் "மத்தமிகுகளியமோம்" என்றார்கள். இவர்கள் பானம்கெந்நாளும் நன்றாகலின் ஈனமற்றதாயிற்று. இதனைஏற்றஞ்சொல்ல மறையாகிய வேதத்தாலுஞ் சாத்யமன்றென்பதுமொன்று. அயன் வானநாதன் அரன் என வாளாகூறி அத்துடனே "வரவிரிஞ்சன்" என்றதனால் இதற்கு "இவர்களிற் ச்ரேஷ்டனாகிய பிரமன்" எனப் பொருளுரைத்தாம். "தமிழும்" என்றதில் உம்மை இறந்தது தழீஇயதாதலின் இலிங்கிகளும் மாதவமிசைந்திலங்கினர், அயன், வானநாதன், அரன்ஆகிய இவர்களும் அரியை வாழ்த்துவார், விரிஞ்சனகமும் முண்டகம், நிலமும் மாரியின்றிவாழுமோ, தமிழும்வாருணித்தலை வளர்ந்தது என விரித்து, மாதவம், அரி, முண்டகம், மாரி, வாருணி இவைகள், கள் என்னும் ஒரு பொருட்குப் பலபெயராதலின், இக்களியர்தாம் பானம்பண்ணும் கள்ளினால் இலிங்கிகளுமிலங்கினர், அதனை அயன், வானநாதன், அரன் ஆகிய இவர்களும் வாழ்த்துவார்கள், அது விரிஞ்சனகமுமாகும், அது இன்றி நிலமும் வாழாது, அதனிடத்தே தமிழும் வளர்ந்தது எனக் கவர்பொருளாலமைதற் சிறப்பித்துக்கூறினமைகாண்க.

| எழுவாய். | பயனிலை. | செயப்படுபொருள். |
|---|---|---|
| களியமோம் | காண்கிலேம் | மறை |
| இலிங்கிகள் | இலங்கினர் | |
| அயன் வானநாதன் அரன் | வாழ்த்துவார் | அரி |
| விரிஞ்சனகம் | முண்டகம் | |
| நிலம் | வாழுமோ ? | |
| தமிழ் | வளர்ந்தது. | |

(௬௬)

### நேரிசைவெண்பா.

௬௫. வளர்ந்தோங் கெதிகிரிக்கண் வான்சுட ரெம்மான்
கிளர்ந்தோங்கு சீர்கெழுமிக் கேட்டிங் - கிளந்தும்
நினையும் பிறங்குநர்க்கு நேர்கிலா முந்தை
வினையும் பிறப்பிறப்பு மே.

(இ-ள்.) வளர்ந்து ஓங்கு - நீண்டுவளர்ந்த, எதிகிரிக்கண் - யதிகிரியில் வீற்றிருக்கும், வான் சுடர் எம்மான் - தேஜோமயமாய் விளங்கும் எமது ஸர்வஸ்வாமியானவனுடைய, கிளர்ந்து ஓங்கு சீர் - பூர்த்தியாகத் தழைத்தோங்கிய சீர்த்தியை, கெழுமி - ஆசார்யன்பக்கலிற்சார்ந்து கற்றுணர்ந்தும், கேட்டும் - பாகவதரையடுத்துக்கேட்டும், கிளந்தும் - தக்க அதிகாரிகளுக்குபதேசித்தும், நினையும் - அநுஸந்தாநஞ்செய்யும்படியான, பிறங்குநர்க்கு - சிறப்புவாய்ந்தப்ரபந்நர்களுக்கு, முந்தைவினையும் - பூர்வஜந்மத்திற்றேடிய ஸஞ்சிதப்ராரப்தங்களும், பிறப்பு இறப்பும் - அவற்றால் விளையும் ஜநநமரணங்களும், நேர்கிலா - அபிமுகமாகமாட்டா (எ-று.)

வளர்ந்தோங்கு என்பதை, ஓங்கிவளர்ந்த என மாறுக. கெழுமி என்றுழி, உம்மை தொக்கியது. நேர்கிலா என்றதில், கு சாரியை. முந்தைவினையொழியின் பிறப்பிறப்பு மறுமாயினும் வலியுறுத்தற்பொருட்டு மேலும் "பிறப் பிறப்பும்" என்றும். வினை. பிறப்பிறப்பு, எழுவாய். நேர்கிலா, பயனிலை. (௬௫)

### எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

௬௬. பிறப்பிறப்பெனுமோர் பெருவினைச்சுழலிற் பேதையேன் சருகெனச்சுழன்று
மறப்பிறப்படைந்து மாயையினவமே மயங்குபுவருந்திமெலிந்தேன்
சிறப்பிறப்பகலாத் தேவனே திருநாராயணா நிகழ்தரு பரிவின்
பிறப்பிறப்பிலனே நினைப்புகல்புகுந்தேன் விரைமலரடிபணிந்துவந்தே.

(இ-ள்.) பிறப்பு இறப்பு எனும் - ஜநநமரணமென்கிற, ஓர் பெருவினைச் சுழலில் - ஒருபெரியவினையாகிய சுழற்காற்றில், பேதையேன் சருகு எனச் சுழன்று - எளியேன் சருகைப்போலச் சிக்கிக்கொண்டு சுழன்று, மறப்பு இறப்பு அடைந்து - ஸ்வரூப யாதாத்ம்யஜ்ஞாநஶூந்யதையை மிகவுமடைந்து, மாயையின் அவமே மயங்குபு - அஜ்ஞாநத்தில் வீணேமாழ்கி, வருந்திய மெலிந்தேன் - அதனால் அலக்கணுற்றிளைப்பையடைந்தேன், சிறப்பு இறப்பு அகலாத் தேவனே - திவ்யபூஷண திவ்யாயுதமங்களாலங்காரத்தில் குறைதலில்லாத ஜகதேககாரணனே! திருநாராயணா - திருநாராயணஸ்வாமியே, நிகழ்தரு பரிவின் பிறப்பு இறப்பு இலனே - சித்தி பெற்ற கருணைப்பெருக்கத்திற்போக்கற்ற, நினைப்புகல் புகுந்தேன் - தேவரீரைத் தஞ்சமென்றடைக்கலம்புகுந்தேன், விரைமலர் அடிபணிந்து உவந்தே - வாசமணக்குந் திருவடித்தாமரையே உபாயோபேயமாக மனமகிழ்ச்சியோடு பற்றினவனாகி (எ-று.)

சுழல், தொழிலாகுபெயர். வருந்தியே, இதில் ஏகாரம் இரக்கத்தின்கண்வந்தது. இரங்கும்என்னுமெச்சம், இரண்டனுருபேற்ற வினை என்னும் பெயர்கொண்டு முடிந்தது. (நான்) எழுவாய். புகல் புகுந்தேன், பயனிலை. நினை, செயப்படுபொருள் ()

௱அ - அடியான் வந்த நேரிசை யாசிரியப்பா.

௱அ - திவ்யதேசங்களின் பெயரும் வைரமுடி யுச்சவச்சிறப்பும்.

௬௭. உவர்திரைக் கடலிடை யுடுத்தமண் டலத்திற்
பவமிறந் தெவரும் பணிந்துபா கவதராய்
நித்தியம் பெற்று நிலைபெற வெம்மான்
சித்திரம் போலத் திருக்கண் வளர்ந்தும்
௫ நின்று மிருந்து நிலைபெறு தலங்களில்
என்றும் பெருகு மிருநதி யிடையாய்த்
திருவரங் கந்திருச் சித்திர கூடம்
திருவன்பில் சேறை ஸ்ரீராம விண்ணகர்
திருவிண் ணகரந் திருக்கண் ணபுரம்
௧௦ திருவாலி வெள்ளக் குளந்தெற்றி யம்பலம்
உறையூர் கரம்பனூ ரோங்கிய வாதனூர்
நறையூர் கண்டியூர் நாகை யழுந்தூர்
கூடலூ ரிந்தளூர் குடந்தை யிசனூல்
நாடலூர் தலைச் சங்கநாண் மதியம்
௧௫. வெள்ளறை கவித்தலம் வெள்ளி யங்குடி
புள்ளம் பூதங் குடிசிறுபுலியூர்
தேவ னூர்தொகை செம்பொன்செய் கோயில்
காவளம் பாடி கண்ண மங்கை
வண்புரு டோத்தம மணிமாடக் கோயில்
௨௦. ஒண்மணிக் கூட முயர்பார்த்தன் பள்ளி
கண்ணங் குடிதஞ்சை காமர்வை குந்த
விண்ணகர் திருப்பேர் வியனரி மேய
விண்ணகர் நந்தி புரவிண் ணகரொன
வெண்ணூறு மிருபா னிரட்டி வளஞ்செறி
௨௫. சோழ நாட்டிற் றலங்குசீர்ப் பதிகள்.
வாழை யிலங்குறாஉ மாலிருஞ் சோலை
விளங்குமெய் யந்தொலை வில்லி மங்கலம்
குளந்தை கோட்டியூர் கூடல் மாறன்
குருகூர் குறுங்குடி கோளூர் பேரை
௩௦. முருகூர் தண்காலூர் மோகூர் புல்லாணி
ஸ்ரீவில்லி புத்தூர் ஸ்ரீவை குந்தம்
பூவில்லி மேவரப் புகழ்வர மங்கை
வரகுணமங்கை வண்டிருப் புளிங்குடி
வரகுணர் வாழும் வழுதிநாட்டில்

௩௫. அரிய தலங்க ளறுமூன் றாகும்.
தெரிதர வெடுத்துச் செப்புங் காலை
திருவனந் தபுரந் திருச்செங் குன்றூர்
திருவா றன்விளை திருவாட் டாறு
திருக்கடித் தானந் திருவண் வண்டூர்
௪௦. திருக்காட் கரையொடு திருமூழிக் களம்
வல்லவாழ் நாவாய் வண்பரி சாரம்
செல்லவாந் தசோலை செறிதிருப் புலியூர்
விற்றுவக் கோடென விளங்குபன் மூன்றும்
கற்றுவக் கோதியர் கவின்மலை நாட்ட.
௪௫. ஆவலா ரன்பர்வா ழயிந்திர புரத்தொடு
கோவலூ ரியன்றிங் குளிர்நடு நாட்ட.
கடிகை நின்றவூர் கார்வா னத்தொடு
மடிகைநின் றவர்செறீஇ வாழ்திரு நீர்மலை
அத்திகிரி பாடக மட்ட புயங்கம்
௫௦. வித்தக வெவ்வுளூர் வெஃகா தண்கா
நீரக மூரகம் நிலாத்திங் கட்டுண்டம்
காரகங் கள்வனூர் கடன்மல்லை பவள
வண்ணந் திருப்புட் குழிபர மேச்சுர
விண்ணகர் திருவிட வெந்தைநீ ளுக்கை
௫௫. திருவல்லிக் கேள்வன் திருவுள முவந்துறை
திருவல்லிக் கேணி யெனத்திகழ் தொண்டை
வளநாட் டிங்கண் வளர்திருப் பதிகளின்
அளவிரு பானிரண் டாமென மொழிப.
வேங்கடம் பாற்கடல் விழுச்சீ ரயோத்தி
௬௦. ஓங்கிடு பிருதி யுயரு மாய்ப்பாடி
வடதிசை மதுரை வதரியாச் சிரமம்
திடமுறு துவாரகை சிங்கவேள் குன்றம்
நலமா தவருறை நைமி சாரணியம்
தலமான் மியமுறு சாளக் கிராமம்
௬௫. கண்ணிய கங்கைக் கரைக்கண் டம்மென
வெண்ணுற விளங்கு மிவையீ ராறும்
உரனுறு வடநாட் டோங்கிய பதிகள்.
பரம பதந்திரு நாட்டுத் திருப்பதி.
ஓதிய தலங்க ளொருநூற் றெட்டில்
௭௦. யாதினிற் சென்றங் கெய்தினுஞ் சதகம்
பாவக மாமெனப் பதின்மர் மறைத்தமிழ்ப்
பாவினி னன்கு பகர்ந்தன ரன்றோ
இத்தலங் களின்வள மெத்தனை யுண்டோ
அத்தனை யுந்திரண் டொத்தமைந் திலங்கும்

எரு. எங்கோன் சாமரா ஜேந்திர வுடையார்
செங்கோல் செலுத்துஞ் சிறந்த மைசூர்
நாட்டிற் காவிரி நதிவட திசைக்கண்
வாட்டிக் கலியான் மாக்களை வருத்தா
தனந்தாழ் வான்பரிந் தவதரித் தருளிய
அ0. அனந்தா ழ்வாதியர் கவின்பெறு மேலைக்
கோட்டை யென்னுங் குலமலை, யடியார்
வீட்டை யுறவருள் விமலன் வருகுல
யாதவ வரசனை மாராதித் தலின்
யாதவ கிரிவான் யதுகிரி யென்றாம்,
அரு. யதிபதி தாதித் தலின் யதிகிரி யென்றாம்
எதிகிரி யென்று, மியம்புந் திவ்விய
தேசமா தலினென் றினி முற்றும்
நாசமாம் படியவ ணணனித் தண்ணிய
அல்லி யாம்ப லரவிந் தந்திகழ்
கூ0. கல்யாணி யாடிக் காப்புமன் சாத்தித்
திருநா ராயணன் செல்வக் குமாரன்
மனமா மண்மகள் மருங்கினி லெழில்செயப்
பெரிய திருவடி பேணித் தரித்தாங்
கரியதாம் வயிரத் தமைந்த திருமுடி
கூரு. எத்தே வருக்கு மிறையிவ னென்ன
உத்தமாங் கத்தொளி யோனென வொளிர,
அற்புத வைம்படை யத்தத் திலங்கப்,
பொற்பீ டஞ்சிறைப் புட்புயத் தலங்க,
எங்களாழ் வார்க ளியலது முன்னுறத்,
க00. துங்கமா நான்மறை தொடர்ந்துபின் வர,
சல்லரி கொம்பு சங்கு பூரி
மல்லரி தாரை மத்தளம் பேரி
இவைகளி னோதை யிடியென வொலிதரப்,
பவனிவந் தருளும் பாங்கினைக் கண்டு
க0ரு. வேட்டாங்கு மகிழ்ந்து மெய்பூரித் துச்
சாட்டாங்க மாகத் தண்டன் சமர்ப்பித்
திறுதியி லுவப்போ டெழுந்தனன்
க0அ. உறுதியிங் கிதனின்வே றொன்றிலை யெனக்கே.

**குறிப்பு.** இந்நேரிசை யாசிரியப்பாவின் பொருள் வெளிப்படையா யிருத்தலின் உரை வரையாது முக்யமான சிலமொழிகளின் பொருளும் இலக்கணமும், அடிகளின் இலக்கத்தின்கீழ் இங்கு விளக்கினோம்.

உ. **எவரும்** - இழிந்தோர் உயர்ந்தோர் யாவரும், இதில் உம்மை முற்றுப்பொருட்டு. ச. **சித்திரம்போல** - திவ்யமங்கள விக்ரகம்போல, எ. **சித்திரகூடம்**, தில்லை

நகர்த் திருச்சித்ரகூடம். (கஅ-கச.) ஈசனால் நாடஊர் - சிவபெருமானால் தேடற்கு ரிய, உ௦. ஒண், இதில் பகுதிப்பொருள் விகுதி குன்றியது. உஉ. வியன் - பெருமை பொருந்திய, உச. இருபானிரட்டி-நாற்பதும், இங்கு முற்றும்மை விகாரத்தாற்றொக் கது. உரு. வாழையிலங்குறாஉம் என்றதனால் அழகர் எழுந்தருளிய திருமாலிருஞ் சோலைமலைச் சார்புகுறிக்கப்படுகின்றது. (உஎ-உகூ) மாறன் குருகூர்-ஆழ்வாரவதரித்த திருநகரி, ௩௦. முருகூர் - தேன்பாய்கின்ற, எனவே பொழிலின் மிகுதியைக்குறிக்கின் றது. ௩உ. பூவில்வீ மேவாப் புகழ் - மலர்க்கணைகளேவப்படும் வில்லினனாகிய மன் மீதன்தது வியாபாரம் நெறியின் புறஞ்செலாது கீர்த்திப்ரகாசிக்கின்ற, ௩ச. வழுதிநாடு- பாண்டிநாடு. ச௦. ஏடு, என்னும்பொருட்டு. சஉ. செல் அவாம்-மேகங்கள்சேர விரும்பும். அவாம், இறுதியிர்மெய்கெட்ட பெயரெச்சம். சச கல் துவம் கோடு உயர் கவின்மலை நாட்டு - கற்கள் நிரம்பிய அசையாநிலையினவாகிய சிகரங்களுயரப் பெற்ற அழகிய மலைநாட்டுத்திருப்பதிகள். சரு. ஆவஊர் - ஆர்த்திமிக்க. சசு. நாட் டு, பலவின்பாற்படர்க்கைக் குறிப்புவினைமுற்று. சஅ. மடிகை நின்றவர் செறீஇ- இறப்பத்தலைவராகிய நித்ய சூரிகள் கூடிவாழப்பெற்ற, மடிகை தொழிற்பெயர். ரு௦, வித்தகம் - ஞானம். ருஉ. இருபானிரண்டு - இருபத்திரண்டு. என மொழிப- என்றுரைப்பர் மேலோர், ருச. விழுச்சீர் - சக்ரவர்த்தித் திருமகனார் திருவவதரித் தருளேற்றால் மிக்க சிறப்புவாய்ந்த, கூஎ. உராறு - (ஞானவான்களாகிய மகரி ஷிகளது ஆச்ரமங்கள் மிக்குள்ளதாதலின்) ஞானபூமியென்னப்பட்ட, எ௦. யாதி னிற்சென்று அங்கு எய்தினும், இதில், அங்கு என்னுஞ் சுட்டுப்பெயர் "செய் யுட் கேற்புழி" பின்வந்தது. உம்மை உயர்வுசிறப்பு. எஉ. அன்று, ஓ அசை. எச. இலங்கும் என்பதைப் பின்வருமேலைக் கோட்டையோடொட்டுக. எரு. ஸ்ரீசாமரா ஜேந்த்ரவுடையார் இம்மைசூர்தேசத்தையாளும் மஹாராஜர். ராஜபக்தி விஸ்வா சமேலீட்டால் இம்மஹாராஜரது திருநாமம் இங்கு காட்டப்பட்டது. இவ்விராஜாங் கவகுப்புகளொன்றில் ஒருயர்பதவியில் அமர்த்தப்பட்டுப் பரிபாலிக்கப்பட்டுள்ளே மாதலின் "எங்கோன் சாமராஜேந்த்ரவுடையார்" என்றும். அஉ. யாதவராஜ- ஸ்ரீபராமர் முதலானோர். அசு. பதிபதி - உடையவர் அகூ. அல்லி - அகவிதழையுடை ய. இதை அரவிந்தத்தோடு மொட்டுக கூஉ. மனைமாமகள் மண்மகள் எனக்கூட்டுக. எழில் செய - திருமேனியினழகுக் கழகுசெய்ய. கூரு. எத்தேவருக்கும் - ப்ரஹ்மருத் ரேந்த்ராதி தேவர்களுக்கும். இதில் உம்மை உயர்வுசிறப்பு. கூசு. சிறைப்புள் - பெரிய திருவடி. கூஅ. ஆங்கு, அசை. உறுதி, எழுவாய் வேறில்லை, பயனிலை. (கூஎ)

## நேரிசை வெண்பா.

கூஅ. எனக்குங் கதியென் றெதிகிரி யெம்மான்
றனக்குச் சரண்புகுந்தேன் றானே தனக்கேய்ந்த
வீரா பதப்பெற்றி சேர்ந்தார்ப் புறக்கொழித்தல்
ஆராயுங் காலில்லை பால்.

(இ - ள்.) எனக்கு கதியென்று - அடியேன் பெறவேண்டிய புருஷார்த்த மிதுதானென்று, எதிகிரி எம்மான் தனக்கு - யதிகிரியில் வீற்றிராநின்ற எம்முடைய சர்வசம்பத்துமாகிய திருநாராயண ஸ்வாமிக்கு, சரண்புகுந் தேன் - அவன்றிருவடியையே உபாயோபேயமாகப்பற்றி அவனுக் கடைக்

கலம் புகுந்தேன், தானே தனக்கேய்ந்த - ஒப்புயர்வின்றித் தனக்குத்தானே நிகராகிய, சீரார்பதப்பெற்றி - சிறப்புவாய்ந்த திருவடியின் ஸ்வபாவம், சேர்ந்தார்ப்புறக்கு ஒழித்தல் - தம்மைப் பற்றினவரை ரக்ஷிப்பதேயன்றி புறம்பேபோகவிடுதல், ஆராயுங்கால் இல்லையால் - தேடிப்பார்க்குங் காலத்தில் இல்லையாதலால். (எ-று.)

“இருமெருப்புமிலீசன்” என்னுமாப்போலே தானே தனக்கேய்ந்தபதம். இது சேர்ந்தாரை விடுகை அவனும்பிராட்டியும் ஒருக்கால்விடினும் இன்று ஆகலின் “ஆராயுங்காலில்லை” என்றது. ஏகாரம் பிரிநிலை. புறக்கு, அத்துச்சாரியை தொகுத்தல். (நான்) எழுவாய். சரண்புகுந்தேன், பயனிலை. (௬௫)

## கட்டளைக் கலித்துறை.

### கைக்கிளை.

௬௬. ஆலொன் றதன்மே லரியொழுக் கொன்றர வொன்றுகொண்மூச்
சூலொன் றுசூதொன் றுசைலமி ரண்டிவை தூக்குமிழை
நூலொன் றரம்பை யிரண்டுநன் னூற்புத் தகமிரண்டு
பாலொன் றியகொடிக் குத்தோன் றுமேலைப் பருப்பதத்தே.

(இ-ள்.) மேலைப்பருப்பதத்து - மேலைக்கோட்டையில், பால் ஒன்றிய கொடிக்கு - பால் நிறைந்துள்ளதாய் இங்கே காணப்படும் பசிய கொம்பினுக்கு, ஆல்ஒன்று - வடபத்ரமொன்றும், அதன்மேல் அரி ஒழுக்கு ஒன்று - அவ்வடபத்திரத்தின்மீது ஒருப்ரமர ஒழுக்கும், அரவு ஒன்று - ஒருசர்ப்பமும், கொண்மூச்சூல் ஒன்று - சூல்கொண்ட மேகமொன்றும், சூது ஒன்று - ஒருதாமரையும், சைலம் இரண்டு - இரண்டு மலைகளும், இவை தூக்கும் இழைநூல் ஒன்று - இம்மலைகளைத் தாங்கும்படியான ஒரு நூலிழையும், அரம்பை இரண்டு - இரண்டு வாழைகளும், நன்னூல் புத்தகம் இரண்டு - சிறந்தநூல்களடங்கிய புத்தகங்களிரண்டும், தோன்றும் - காணுநின்றன (இதென்ன ஆச்சர்யம் என்றபடி) (எ-று.)

கைக்கிளை என்பது ஒருதலைக்காமம். இதில் நாயகன் கண்ட கொடியினிடத்துள்ளனவாய் வியந்த ஆல், அரியொழுக்கு, அரவு, கொண்மூச்சூல், சூது, சைலம், நூலிழை, அரம்பை, புத்தகம் என்பன முறையே உதரத்திற்கும் உரோமக்கொடிக்கும் நிதம்பத்திற்கும் கூந்தலுக்கும் முகத்திற்கும் தனங்களுக்கும் இடைக்கும் குறங்குக்கும் புறவடிக்கும் உவமானப்பொருள்களாதலின் இவன்கண்டது கொடியன்று கொடிபோன்ற பெண்ணைக்கண்டு ப்ரமித்தானாயிற்று. ஆகச்சே கொடி உவமையாகுபெயர் இக்கொடியினிடத்தொன்றி யிருப்பதாய்க் கூறியபால் என்பதற்குப் பொருள் குணம் எனக் கொள்க. கொண்மூச்சூல், இழைநூல் இவைகளை சூல்கொண்மூ, நூலிழை என மாறுக. ஆல் முதல் புத்தகம் வரையில் எழுவாய். தோன்றும் பயனிலை. (௬௬)

## தாழிசை.

### இரங்கல்.

௭௦. தத்தைமொழிபயில்கைத்தலத் தையலீரென்னுரைகேண்மினே
பித்தையெனக்குவிலக்கவீர் பேணிற்றம்மின்யதுவெற்பில்வாழ்

முத்தைமாணிக்கத்தைவித்தகமூர்த்தியையாயர்குலத்தில
தத்தையிலங்குகைக்கையிற்கட்கந் தண்டஞ்சங்காழிகோதண்டமே.

(இ-ள்.) தத்தைமொழிப்பயில் கைத்தலத்தையலீர்-பேசப்பயிலுங் கிளிக்குஞ்சைக் கரத்திலேந்தியிருக்குந் தோழிமார்களே! என் உரைகேண்மின் - நானுங்களுக்குச் சொல்வதொன்றுண்டு அதைக்கேளுங்கள், பித்தை எனக்கு விலக்க நீர்பேணில் - இப்போழ்தெனக்கு நேர்ந்திருக்குஞ் சோகத்தைப்போக்க நீவிர்கள் விரும்பினால், யதுவெற்பில் வாழ்முத்தை - யாதவகிரியில் வாழ்கின்ற நித்திலத்தை, மாணிக்கத்தை - மேன்மையான மாணிக்கரத்நத்தை, வித்தகமூர்த்தியை - ஜ்ஞாநாநந்தஸ்வரூபியை, ஆயர்குலத்திலதத்தை - கோபசஜாதீயனாய் வந்தவதரித்து அக்கோபிகைகட்குத் திலதம்போன்றவனை, கட்கம் தண்டம் சங்கு ஆழி கோதண்டம் - கட்கமும் தண்டமும் திருச்சங்கும் திருவாழியும் கோதண்டமும், கையில் இலங்கத் தம்மின் - திருக்கரத்தில் பிரகாசித்திருக்கும் திருக்கோலத்துடன் அழைத்துக்கொண்டு வருவீர்களாக. (எ-று.)

பஞ்சாயுதங்களுங் "கையிலிலங்கத் தம்மின்" என்றதனால் தனக்கு மாற்றானைக் கண்ணுக்குப் புலப்படாது இன்னலை விளைக்கின்ற அநங்கனை வெற்றிபெறக்கருதித் தானாயிற்று. அவன் அவ்வாயுதங்களின் ஜ்வாலைப்பட்டமாத்திரத்திலேயே விலகிப்போவானெனத் துணிந்தானாய் "இலங்க" என்றாள். அவன் விலகவேண்டிய ப்ரகாரம் என்னெனில் அவன்போனாலல்லது அவனால் விளைந்தபீதியகலாது. அதுபோனாலன்றோ நாயகனிடத்துத் தானநுபவிக்கப்போகிறவின்பத்தில் ஸ்பஷ்டதைஜனிக்கும், ஆதலினால், நிச்சலசித்தத்தோடு ஆநந்தாநுபவத்தைக் கோரினவள் இந்நாயகி எனக் கொள்க. தையலீர் (நீவிர்) எழுவாய். கேண்மின். பயனிலை. உரை, செயப்படுபொருள். (எ௦)

கலிவிருத்தம்.

மடக்கு.

எ௧. கோகனகத்தாடைபுனை | வேகமலத்தானையற
கோகனகத்தாளைவருடும் | வேகமலத்தானையருள்
மாகமனத்தானைப்புள் | மேகநாரணனையக
மாகமனத்தானைநெஞ்சே | மேகநாரணனைநினையே.

(இ-ள்) கோகனகத்து ஆடை புனை - உயர்ந்த பீதாம்பரத்தையுடுத்த, கோகனகத்தாளை வருடும் - பாதாரவிந்தத்தை வருடும், மா கமனத்தானை - பெரியபிராட்டியின் ஹ்ருதயகமலவாசனை, புள் மாகமனத்தானை - பறவைக் கரசனாகிய பெரியதிருவடியை யூர்தியாகவுடையவனை, கமலத்தானை அருள் மேக நாரணனை - திருநாபிக் கமலத்திலுதித்த பிரமனுக்குப் பிரணவார்த்தத்தை யுபதேசித்தருளிய மேகநிறத் திருமேனியையுடைய திருநாராயண ஸ்வாமியை, நெஞ்சே - மனமே, வேக மலத்தானை அற - (உனக்காதாரமாயுள்ள ஆத்மாவைப் பற்றிச்செல்ல) த்வரிதப்பட் டெதிர்நோக்கியிராநின்ற (உன் பூர்வஜென்ம) வினைகளாகிய சேநாசமூகங்கள் அற்றுப்போகவும்,

அகம் ஏக - நீ இப்போதிழைத்துவரும் பாவங்கள்தீரவும், நார் அண்ணை-பிராட்டியின் புருஷகாரங் கிடைக்கவும், நினை-ஸதாத்யாநிப்பாயாக (எ-று.)

ஆகாம்யப்ராரப்தசஞ்சிதங்கள் சரணாகதிபண்ணினசேதநர்க்குப் பிராட்டியின்புருஷகாரத்தால் இவ்வொருபிறப்பிலேயே யற்றுப்போமாதலின் நார் அண்ணை என்பதற்குப் பிராட்டியின் புருஷகாரங் கிடைக்கவும் எனப் பொருளுரைத்தாம். ஏகாரங்களிரண்டும் அசை. நெஞ்சே (நீ) எழுவாய். நினை, பயனிலை. மாகமனத்தான், புண்மாகமனத்தான், நாரணன், செயப்படுபொருள். (எக)

## கட்டளைக்கலித்துறை.

எஉ. ஏர்திருவேங்கடஞ் சோலைமலையொ டெதிகிரியைப்
பார்மகள்முத்தன மாக்கொண்டுநாரணர் பாற்புணரும்
சீர்கொடுமையாற் சேரமலயச் சிலைப்படர்க்குச்
சோர்வறவந்துதித் தாள்போலுமுக்குயந் தோன்றிடவே.

(இ-ள்.) ஏர் திருவேங்கடம் சோலைமலை ஒடு எதிகிரியை - அழகிய திருவேங்கடம், திருமாலிருஞ் சோலைமலை என்னு மிவ்விரண்டினோடு யாதவகிரியையுஞ்சேர்த்து, பார்மகள் முத்தனமாக்கொண்டு - பூமிப்பிராட்டி மூன்று தனங்களாகக்கொண்டு, நாரணர்பால் புணரும் சீர்கொடு - திருநாராயணனை அவைகளின் நுதியிற்றாங்கித்தழுவுஞ்சிறப்பைக் கண்டுகொண்டு, உமை ஆரச்சேர - உமையவளும் அவ்வண்ணமே சிவபெருமானைப் புணரவெண்ணி, மலயச்சிலைப்படர்க்கு - மலயத்வஜபாண்டியனுக்குப்புத்திரியாய், சோர்வு அற முக்குயம் தோன்றிட - தப்பாது மூன்றுதனங்களுண்டாம்படி தவமிழைத்து, வந்து உதித்தாள்போலும் - வந்துபிறந்தனள்போலும் (எ-று.)

சிவபெருமானைக் கண்டவுடன் மூன்றாந் தனம் மறையவெட்கித் தலைகுனியலுற்றாள் என்பார்கள். இக்காரணமும் பூமிப்பிராட்டிக்குத் தான் நிகராமற் போனதினால் உதித்ததுபோலும் என எஞ்சி நின்றதுங் கூட்டிக்கொள்க. ஓடு, எண்ணுப்பொருட்டு, உமை, எழுவாய். உதித்தாள்போலும், பயனிலை. (எஉ)

## வஞ்சிவிருத்தம்.

எங. தோன்றுடல மக்கண்மனை சொந்தமோ
மான்றுகொடு நெஞ்சுழலு மாந்தர்காள்
ஊன்றுவினை நீங்கலுற வுன்னினெந்
நான்றுமரி நாரணனை நண்ணுமின்.

(இ-ள்.) தோன்று உலகம் மக்கள் மனை சொந்தமோ - உரியனவாய்த் தோற்றுகிற தேகமும் மக்களும் பெண்டிரும் உங்களுக்குச் சொந்தமானவைகளா?, மான்று கொடு நெஞ்சு உழலும் மாந்தர்காள் - (அவைகளைச் சொந்தமாகப்பாவித்து) மயக்கங்கொண்டு மனத்தளர்ச்சியடையும் மானிடரே, ஊன்றுவினை நீங்கல் உற உன்னின் - உங்களைச் சார்ந்துவரும் வினை

கள் அற்றப்போகவெண்ணங்கொண்டால், எஞ்ஞான்றும் - எப்போழ்தும், அரிநாரணனை நண்ணுமின் - அரியாகிய திருநாராயணஸ்வாமியை பஜியுங்கள் (எ-று.)

உடல், மக்கள், மனை என்பவைகளில் உயர் திணைப்பெயர் மிகுதியாயினும் அவைகளையடுத்ததோன்று, சொந்தமோ என்னும் வினைகளை விரிக்குமிடத்து இழிபினால் அஃறிணையாக்கினம். ஓ, எதிர்மறைப்பொருட்டு. மான்று விகுதி குன்றிய தொழிற்பெயர். அரிநாரணன் இருபெயரொட்டுப் பண்புத் தொகை. மாந்தர்காள் (நீவிர்) எழுவாய். நண்ணுமின், பயனிலை. நாரணன் செயப்படுபொருள். (எங)

## பதினைந்து சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

### பாண்.

எச. மின்னியகனகவேதிசூழ்மாடமேலைக்கோட்டையைமிளிர்வதன
மேவியதிலதமெனக்கொளெம்மைசூர்விரிதருநாட்டில்வந்தடைந்த
நன்னயப்பாணகேட்டிநாரணனார்நளினப்பொற்பூம்பதத்தன்பெஞ்
ஞான்றுமாறாதகட்டளைவரதராஜன்செய்கலம்பகவிசையைப்
பன்னியவீணைத்தந்திரியேற்றிப்பாடியேபரவசமடையும்
பாணரேமடர்ந்தவீண்டுநின்னிசைகள்பயனிலசெவியினும்புகாநின்
கன்னியமார்கந்தருவமந்துறையிற்காமரவூர்ப்புறக்கூனிற்
கானங்கானத்திற்பாணிகூவத்திற்கலங்குதல்காணுதிசென்றே.

(இ-ள்.) மின்னிய கனக வேதிசூழ் - சுவர்ண மயமாக ப்ரகாசிக்கும் ப்ராகாரஞ்சூழ்ந்திருக்கும், மாடமேலைக் கோட்டையை - திருமாளிகைகளடர்ந்த மேலைக்கோட்டையை, மிளிர்வதனம் மேவிய திலதம் எனக்கொள் - பிரகாசமாகிய முகத்திலணியும் திலதமாகக்கொண்ட, எம் மைசூர் விரிதருநாட்டில் வந்து அடைந்த நல் நயபாண - எம்முடைய மைசூராகிய இம் மலர்தலைநாட்டின்கண்வந்து புகுந்த நயமானமொழிகளால் இச்சகம் பேசும் பாடகனே!, கேட்டி - யாம்சொல்வதைக் கேட்பாயாக, நாரணனார் நளினப்பொன்பூம்பதத்து அன்பு எஞ்ஞான்றும் மாறாத - திருநாராயணரது அழகிய அரவிந்த மலரையிகர்த்த திருவடிகளில் வைத்த ஆதரத்தை எப்போழ்தும் மறவாத, கட்டளை வரதராஜன் செய் கலம்பக இசையை - கட்டளை என்னும் ஊரினரோகிய வரதராஜன் சாற்றியகலம்பகமாலையிலடங்கிய எம்பெருமானது சீர்த்தியை, பன்னிய வீணைத்தந்திரி ஏற்றி - மிடற்றிசையைப்போல் விளங்கப்பாடும் மாடகத்தின் தந்திரியில்மீட்டி, பாடிபே பரவசமடையும்-பாடிப் பரமாநந்தத்தை யநுபவிக்கும், பாணரேம் அடர்ந்த ஈண்டு - ஸ்வதேசபாடகர்கள் விஸ்தாரமாகவிருக்கும் இந்நாட்டில், நின் இசைகள் பயன் இல - நீ ஆலாபனைசெய்யும் ராகங்கள் ரஸனைப் படுபவையல்ல, செவியினும் புகா - கேட்கத்தக்கவையுமல்ல, நின் கன்னியம் ஆர்சனமானவையெனப்படும் உன்னுடைய, கந்தருவம் மந்துறையில் - குதிரை குதிரைப்பந்தியினும், காமரம் ஊர்ப்புறக் கூனில் - சோலை ஊர்க்குப் புறம்பாகிய சூழலினும், கானம் கானத்தில் - நாகணவாய்ப்புள் கானகத்தி

னும், பாணிகூவத்தில் - நீர்த்தடாகத்தினும், கலங்குதல் காணுதிசென்று-கலங்கிக்கொண்டிருப்பதைப்போய்ப் பார்ப்பாயாக (எ-று.)

கலங்குதல் என்பதற்குப் பொருள் குதிரைகளைத்தலையும், சோலையசைதலையும், நாகணவாய்ப்புள் புலம்பலையும், நீர் கலங்கலையும் எனக்கொள்க. இனி கந்தருவம், காமரம், கானம், பாணி, என்பன இராகத்திற்குப் பலபெயராதலின் பாணனிசையை யிங்ஙன மிகழ்ந்தமைகாண்க. வேதிகூழ் மாடம், மேடைசூழ் மாடமெனினுமொக்கும். நன்னயப்பாண என்பதற்கு ரஸனையாகப்பாடும் பாண எனப் பொருள்கொள்ளனுமாம். இது இகழ்ச்சிக்குறிப்பு. செவியினும் இதில் உம்மை இறந்தது தழீஇய வெச்சப்பொருட்டு. கூபம் என்னும் வடமொழி கூவம் எனத்திரிந்தது. பாண (ர்), எழுவாய். காணுதி, பயனிலை. கலங்குதல், செயப்படுபொருள். (எச)

குறளடி வஞ்சிப்பா.

கரு. செம்புனலொடு சீசினைவிளர்
வெம்புண்படு வெஃகாமுடை
செறிவென்பொழி தேகந்தொடு
வெறிநிறைபவ மிரமிலவெடுத்
துழன்றலைந்தவை யொருங்கொழிந்துபின்
எழில்பெறவினி செழுமின்வுயர்
யாக்கையெனு மாக்கங்கொடு
மோக்கம்பெற முயறியெனின்
பொய்ப்புன்மதப் புதைவிழாஅதி
மெய்த்திறனறி வினப்புறக்கேள்
செய்தவரிலாச் செழுமறைப்பொருள்
ஐஇத்திறுணா ராவைதத
மதியேமறை வளர்நான்முக
விதியேமுதல் விண்ணவரிறை
உயரும்பரொ டுஞற்றுந்தவர்
நயனம்பெற லாருநெறி
வறுகால்பட ரலர்தூய்நிதம்
அறுகால்பணி யம்பொற்குவட்
டெதிகிரிதனி லெழுமினனென
வதிதருகலி தனின்மாவின
மதிற்கேசரி யாய்த்தருவினந்

(இவையிருபத்தொரு வஞ்சிக்குறளடிகள்.)

ததிவளத் — இது தனிச்சோல்.

தருநாராயணத் தருவாய்விளங்கும்
திருநாராயணற்சேவி
வருநாராயண வவனளிதழைத்தே.

(இது மூவடி நேரிசை யாசிரியச் சுரிதகம்.)

(இ-ள்.) செம்புனலொடு சீ சினை விளர் வெம் புண் படு - செந்நீரும் சீழும் நரம்பும் நிணமும் மாம்சமும் விரவிய, வெஃகா முடைசெறி - ஹேற

யமாகிய நாற்றம் நிரம்பிய, என்பு ஒழி தேகம்தொடு - என்பில்லாத யாக்கை முதலாக, வெறிநிறை பவம் மிதம் இல எடுத்து - பயங்கரமான ஜந்மங்கள் வரையில்லாதனவெடுத்து, உழன்று அலைந்து - அவைகளிற்சுழன்று துன்பமடைந்து, அவை ஒருங்கு ஒழிந்து - அவைகள் ஒருமட்டாய்த்தொலைந்து, பின் எழில்பெற இனிது எழும் இவ் உயர் யாக்கை எனும் - பின் அழகாக இன்பத்தொடு சேர்ந்த இந்த உயர்ந்த மானிடதேகமாகிய, ஆக்கம் கொடு மோக்ஷம்பெற - செல்வமான பிறப்பைக் கொண்டு நிரதிசயாநந்தாநுபவப் பதவியையடைதற்கு, முயறி எனின் - ப்ரயத்நஞ்செய்குவை நீயாயின், பொய் புன் மதப்புதை விழாது - பொய்யும் ஈனமுமாகிய புதுமையான மதங்களைப் பரிக்ரஹித்துமாழ்காமல், மெய்த்திறனது விளம்புறக் கேள்- உண்மையான திடமுள்ள உபாயமொன்றுளது அதைச்சொல்லக் கேட்பாயாக, செய்தவர் இலாச் செழு மறைப்பொருள் - அபௌருஷேயமாய் ஸநாதநமாகவந்த வேதத்தின் பொருளை, ஐ இதின் உணரா - நுட்பமாவாரய்ந்தறியாத, அவத்தமதியே - சுருங்கிய வழியில் ப்ரவேசித்தநெஞ்சமே!, மறைவளர் நான்முக விதியே முதல் - வேதாத்யயன நான்கு திருமுகங்களையுடைய பிரமனே முதலான, விண்ணவர் இறை - தேவேந்திரனும், உயர் உம்பரொடு - உயர்ந்த தேவர்களும், உஞற்றுந்தவர் - செய்யுந்தவத்தினர்களும், நயனம்பெறலால் - கண்ணறிவைப் பெற்றிருப்பதால், நாலறிவு- மெய் நா மூக்கோடு கண்ணுஞ்சேர்ந்து நான்கறிவுள்ள வுயிரினவாகிய, அறுகால்படர் அலர்தாய் - வண்டுகள் படியும் புஷ்பாத்யுபகரணங்களைப் பணிமாறி, நிதம் அறுகால் பணி - நித்தமும் ஆறுகாலமுஞ் சேவிக்கும்படியான, அம் பொன் குவட்டு எதிகிரிதனில் - அழகிய பொற்சிகரங்களையுடைய யதுகிரியில், எழும் இனன் என வதிதரு-உதயமாகுஞ் சூரியனைப்போல் விளங்கியெழுந்தருளியிருக்கும், கலிதனில் - இக்கலி யுகத்தில், மா இனம் அதில் கேசரி ஆய் - விலங்கின் ஜாதியில் மடங்கலாகவும், தருவினத்து அதிவளத்து அரு நாராயணத்தருவாய் விளங்கும் - மரத்தொகுதியில் மிக்க வளப்பமுள்ள அரிய அச்வத் விருக்ஷமாகவும் விளங்குகின்ற, திருநாராயணற்சேவி - திருநாராயண ஸ்வாமிக்கு ஸ்வதந்த்ரமற்றுச் சரணாகதிசெய், வரும் நாளாய் அணவு அவன் அளிதழைத்து - அப்படி சரணாகதிபண்ணின மாத்திரத்திலேயே (சேஷித்வ) ஆர்வமுள்ள அந்தஸ்வாமியினது ரக்ஷகம் தழைத்தோங்கிவரும். (எ-று.)

புனலொடு, இதில் ஒடு ஓரோ விடத்துவந்த எண்ணுப் பொருட்டு. முத்தி பெறற் கிம்மானிடதேகமே எழுவகைத் தோற்றத்திற் சிறந்ததாதலின் "எழில் பெறவினிதெழு மிவ்வுயர்யாக்கை" என்றும், இதனை ஆக்கம் என்றது இது பெறலரும் பாக்கிய மெனற்கு. ஐஇது, உரிச்சொல் லடியாகப் பிறந்த பெயர் இங்கு அளபேற்றது. கடவுளரிற்சிறந்த பிரமனும் ஸ்ரீமந்நாராயணனைப் பணிந்து கதிபெற வேண்டியவனாதலின் விதியே என்பதில் ஏகாரம் உயர்வு சிறப்பு. வதிதரு திருநாராயணன் எனக்கூட்டுக. அளி, எழுவாய். வரும், பயனிலை. (௭௫)

கட்டளைக் கலித்துறை.

தழை.

௭௬. தழைக்கும்பொழிலெதி வெற்புறைமாற்கன்ப தானத்தருத்
தழைக்குமித்தாலத் தழைக்குநறுந்தழை, சாயல்மஞ்ஞைத்
தழைக்குமினியநந் தையல்விரகத்தின் றாபம்பொறு
தழைக்கும்பொழுதத் தளிக்கவணைத்தன ளந்தனமே.

(இ-ள்.) தழைக்கும்பொழில் - தழையாநின்ற சோலைகள் சூழ்ந்த, எதி வெற்பு-யதிகிரியில், உறை-(சேதநோஜ்ஜீவநார்த்தமாகத் திவ்யமங்கள விக்ரகமாய் எழுந்தருளி) நித்தியவாசம் பண்ணுகிற, மாற்கு அன்ப - திருநாராயணஸ்வாமிக்கு மிக்க அன்பனே!, தானத் தருதழைக்கும் - தேவலோகத்திலுள்ள (மந்தாரமுதலியபஞ்ச) தருச்சோலைத் தழையினும், இத் தாலத்தழைக்கும் - இவ்வுலகத்திலுள்ள (சந்தனம் மா முதலியவற்றின்) தழையினும், நறுந்தழை-(நீதந்ததழை) நறுவிய தழையேயாம், (அதனை) சாயல் மஞ்ஞைத் தழைக்கும் இனிய - சாயலினால் மயிற்றோகையினு மினியளான, நந்தையல் - நந்தலைமகள், விரகத்தின் தாபம் பொறு - விரஹ வெப்பத்தை யாற்றுதவளாய், அழைக்கும் பொழுது - அழைக்குங்காலத்தில், அளிக்க (யான்சென்று) கொடுக்க (ஏற்று,) அணைத்தனள் அம்தனம்- அழகிய தனங்களில் அணைத்துக் கொண்டனள் (எ-று.)

இத்தழையில் தலைமகளைத் தழையேற்பித்ததோழி தலைமகனுழைச்சென்று நீ தந்ததழையை யான் தலைவிக்குக்கொடுத்தேன் அதைக்கொண்டு தன் தனத்தினிலணைத்துக்கொண்டாள் எனத் தலைமகளது விருப்பங் கூறப்பட்டிருக்கின்றது. எனக்குப்போலவுனக்கும் வயமாயினுள் என்பது போதர "நந்தையல்" என்றாள். யாண்டும் பெறவொண்ணுத இந்நறுந்தழையை நீ யாண்டுப்பெற்றனையோவென வியந்தனளாக "தானத்தருத்தழைக்கு மித்தாலத் தழைக்குநறுந்தழை" என்றாள். பெண்மைக்குச்சிறந்ததம் இன்றியமையாததுமாகிய தனத்தில் "அணைத்தனள்" எனவே அத்தலைமகளதுவிருப்பங் கூறினளாயிற்று. அன்பர்க்கு எல்லாப் பொருளுங் கைகூடுமென்றற்கு "தழைக்கும் பொழிலெதிவெற்புறைமாற்கன்ப!" என்றாள். தானத்தருத்தழைக்கும், இத்தாலத்தழைக்கும், மஞ்ஞைத்தழைக்கும் இவைகளில் குவ்வுருபு எல்லைப்பொருளைத்தரும் ஐந்தனுருபு நிற்குமிடத்துவந்தது. சாயல் - அழகு. பொழுதத்து இதில் அத்து சாரியை. தையல், எழுவாய். அணைத்தனள், பயனிலை. (தழை) செயப்படுபொருள். (௭௬)

நேரிசையாசிரியப்பா.

உயிர்வருக்கை மோனை.

௭௭. அந்தமுநடுவு மாதியுமிலானை
ஆய்க்குலச்சிறுமிய ரன்பனையழகனை
இருமையும்பயக்கு மெந்தையையிறைவனை
ஈன்றுகாத்தழிக்கும் வான்றவிமுதல்வனை
உரமிழந்தவுணனுஞ் சரபமுமுயிர்தப
ஊழுறக்கீண்ட கேழ்நரமடங்கலை

எழுதாக்கிளவியை யெகினவுருக்கொளீஇ
ஏடவிழ்மலர்வரு மிறைக்குரைதேவை
ஐவர்சகாயனை யையமுந்திரிபும்
ஒருங்கியமனத்தினோ டுயர்யாதவகிரி
ஓங்குநாரணனை யுரைக்குநர்
ஒளவியவினைக்கட லாழ்கிலர்தாமே.

(இ-ள்.) அந்தமும் நடுவும் ஆதியும் இலானை - ஆதிமத்யாந்தரஹிதனாய் ஸநாதநமாக வுள்ளவனை, ஆய்க்குலச்சிறுமியர் அன்பனை-ஆயர்குலப்பெண்களுக்கு அன்பனை, அழகனை - அவர்களுக்கு ரமணீயமான ஸௌந்தர்யாலங்காரனை, இருமையும் பயக்கும் - உபய விபூதியிலும் புருஷார்த்த பலனைக் கடாக்ஷிக்கும், எந்தையை - (இந்தவிபூதியில்) அடியோங்களுக்கு ஸர்வமுமாய ஸ்வாமியை, இறைவனை - (அந்த விபூதியில் நித்ய முக்தாநுபாவ்யநிரதிசயாநந்த யுக்தனாய) ஸர்வேச்வரனை, ஈன்று காத்து அழிக்கும் - (சகல சராசரங்களையும்) ஸ்ருஷ்டித்து ரக்ஷித்து ஸம்ஹாரஞ்செய்யும், வான் தனி- உயர்ந்த (ரக்ஷகக் கிருத்யத்திற்கு ஸ்வாம்சாவதாரனாய்த்) தனித்து நின்ற விஷ்ணுவை, முதல்வனை-(ஸ்ருஷ்டி ஸம்ஹாரக்ருத்தியங்களுக்கு ப்ரம்ஹருத்ரர்களில் அந்தர் பவித்து நின்ற) ஆதிகாரணனை, உரம் இழந்து அவுணனும் சரபமும் - இரணியனும் அவன் பொருட்டாக வந்த சரபமும் வலிமை குன்றி, உயிர்தப - உயிர் நீங்கவும், ஊழ் அற - ஊழ்வினையற்றுப்போகவும், கீண்ட கேழ் நரமடங்கலை-அவர்களைப் பிளந்த ப்ரகாசமுள்ள அழகிய சிங்கனை, எழுதாக்கிளவியை-வரையாத நூலாகிய சுருதியை, எகின உருக் கொளீஇ - அம்ஸ ரூபங்கொண்டு, ஏடு அவிழ் மலர் வரும் இறைக்கு - விகசிதமாகிய தாமரை மலரில் ஜனித்த ப்ரம்ஹாவுக்கு, உரைதேவை - அநுக்ரஹித்த கடவுளை, ஐவர்சகாயனை - பாண்டு புத்ரரைவர்க்கும் தோழனானவனை, உயர் யாதவகிரி ஓங்கும் நாரணனை - உயர்ந்த யாதவகிரியில் வளரும் திருநாராயணஸ்வாமியை, ஐயமும் திரிபும் ஒருங்கிய மனத்தினோடு - சந்தேகவிபரீதங்களற்ற மநஸ்ஸினால், உரைக்குநர் - துதிப்பவர்கள், ஒளவிய வினைக்கடல் ஆழ்கிலர் - பிறவிச்சாகரத்திலழுந்தமாட்டார்கள் (எ-று.)

அந்தமு நடுவு மாதியும் என்பதை, ஆதியுநடுவுமந்தமும் எனமாறுக. தனி என்றும் பண்பாகு பெயர் இரண்டனுருபு தொக்குநின்றது. உயிர் தபக்கீண்ட, ஊழறக்கீண்ட எனமுடிக்க. கொளீஇ, இயற்கையளபெடை. ஐவர் இத்தொகைக்குறிப்பு பாண்டுபுத்திரரை விளக்கிற்று. தாம், ஏ அசை. உரைக்குநர், எழுவாய். ஆழ்கிலர், பயனிலை. (எஎ)

### பதினான்குசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

### கார்காலம்.

எஅ. தார்புனைகுழலாய் கார்வருமெனநீ சாற்றியவாக்கியவெழுவாய்
சகசமாமுகமை யாகியபெயருஞ்சார்ந்திடபயநிலைசெயுமென்
னேர்தருமுற்றுமாகவேமுடித்துநிரைதரவிரித்திடுங்காற்கார் [யினென்
நிகர்வண்ணன்வருவா னெனப்பொருள்படலா னேர்ந்தெதிர்நோக்குமெல்லை

சீர்கெடவேள்கைச் சிலையெனவளையாச் செவ்வியவானவில்லிட்டச்
சித்தசன்றெழிப்பி னிடித்தெனகொங்கைச் சின்னமாத்தெறித்திடுமம்பின்
ஆர்துளிகாரின் வீழ்தலாற்றிரு நாராயணரீண்டடைந்தென்னை
அணைதலைத்தடுப்பா னெழுந்தகாரிருதென் றறிந்திலனீகுறிகாரே.

(இ-ள்) தார்புனை குழலாய் - புட்பமாலை சூடிய கூந்தலையுடைய தோழியே!, கார்வரும் என - கார்வரும் என்று, நீ சாற்றியவாக்கிய எழுவாய்- நீ சொல்லிய வாக்யத்துக்குக் கர்த்தாவை, சகசமாம் உவமை ஆகிய பெயரும் - உபமானமே உபமேயத்திற்காகிய பெயராகிய உவமையாகு பெயரென்றும், சார்ந்திடு பயனிலை செயும் என் நேர்தருமுற்றும் ஆகவே முடித்து - அதைச்சார்ந்த கர்மா அதற்குடன்பட்ட செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்றாக முடிவுசெய்து, நிரைதர விரித்திடுங்கால்-கிரமமாக அவ்வாக்கியத்தை விரிக்குங்கால், கார்நிகர்வண்ணன் வருவான்எனப் பொருள் படலால் - நீலமேகத் திருமேனியுள்ளவன் வருவான் என்றர்த்தமாவதால், நேர்ந்து எதிர்நோக்கும் எல்லையின் - அவ்வங்கயத்திற்குடன்பட்டு அவன் வரவுக் கெதிர்பார்த்திருக்கும் இவ்வமையத்தில், என் சீர்கெட - என் அழகுவ்யர்த்தமாக, வேள்கைச் சிலையென வளையா - மன்மதன் கைவில்லைப் போல் வளைந்து, செவ்விய வானவில் இட்டு - அழகாக வானத்தில் வில்லிழுந்து, அச்சித்தசன் தெழிப்பின் இடித்து - அம்மன்மதன் கர்ஜனையைப் போல உருமி, என கொங்கை சின்னமாத்தெறித்திடும் அம்பின் - என் தனங்களைக் குறியாகக்கொண்டு அவன் என் மேலெய்யும் மலர்க்கணைகளைப்போல், ஆர்தளிகாரின் வீழ்தலால் - அடர்ந்த மழைத்துளிகள் மேகத்தினின்றும் விழுவதால், திருநாராயணர் ஈண்டு அடைந்து - திருநாராயணர் இங்கெழுந்தருளி, என்னை அணைதலைத் தடுப்பான் எழுந்த - என்னைத்தழுவவிருந்ததைத் தடுக்கும்படியாகவந்த, கார் இருது என்று-கார்காலம் என்று, அறிந்திலன் நீ குறிகாரே - நீ குறித்த கார் என்பதை நானுணர்ந்தில்லேனாயினேன் (எ-று.)

சகசம், சித்தசன், என்பன வடமொழித்திரிபு. பின்னதற்கு மனதிலுதிப்போன் என்பதுபொருள். தெழிப்பின் இதில் ஐந்தனுருபு ஒப்புப்பொருட்டு. என என்பதில் அகரம் வருமொழிப்பன்மைப்பொருண்மையிறுதியுருபு. கொங்கை, பன்மையிலொருமை. ருது என்னும் வடமொழித்திரிபு இருது, இங்கு தென்மொழியிலக்கணப்படி உகரங்கெட்டது. (நான்) எழுவாய். அறிந்திலேன், பயனிலை. கார், செயப்படுபொருள். (௭௪)

கலிநிலை வண்ணத்துறை.

துளிர் காலம்.

௭௫. கார்மலியென்றே கார்கொளவந்தே காருரும்
நீர்நிலையோரத் தூர்குருகிர்சொல் நிலைமாறிக்
கார்செலவாரா தேதெதிசைலக் காருண்யர்க்
கேர்கொளிசைக்கோர் தாழ்விதெனீர்நீ ரினிதாயே.

(இ-ள்) கார்மலி என்றே - இவை கடல்களேயாமென நினைத்து, கார் கொள வந்து கார் ஊரும் - நீரையுறிய மேகங்கள் பரந்து படரும், நீர்நிலை ஓரத்து - பெரிய தடாகங்களின் கரையில், ஊர் குருகீர் - உலாவும் நாரைகாள்!, சொல் நிலைமாறி - (என்தலைவர் கார்காலஞ் சென்ற இக்குளிர்காலத்தில் வருவதாகக் கூறிய) வாக்குறுதியைத்தப்பி, கார்செல வாராது எது - அங்ஙனம் கார்காலம் கழிந்தும் வாராதிருப்பதற்குக் காரணம் யாது?, எதிசைலக் காருண்யர்க்கு - யதுகிரியில்வாழுங் கருணாநிதியாகியதிருநாராயண ஸ்வாமியினது, எர் கொள் இசைக்கு - அழகிய கீர்த்திக்கு, ஓர் தாழ்வு இது எனீர் நீர் இனிதாய் - இது ஓர் தாழ்வான சொல்லென்று நீங்கள் நயமாக விண்ணப்பம் செய்வீர்களாக (எ-று.)

என்றே இதில் ஏகாரம் தேற்றப்பொருட்டு. குருகீர் முன்னிலைவிளி. காருண்யர்க்கு, உருபுமயக்கம். எனீர் என்பதை எதிர்மறையாகக் கொள்ளினுமமையும். (நீர்) எழுவாய். எனீர், பயனிலை. (எசு)

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

## இருபனிக்காலம்.

அ௰. இன்னிசைவேய்ங்குழலூத மேய்த்தநிரைக்கபிலையெலா மெழுமோகத்தால்
பின்றிரளும்யதுகிரிவாழ் திருநாராயணரென்னைப் பிரிதனோக்கி
முன்பினெனவந்தவிந்தப் பனிக்காலந்தமின்வதன முராணமிந்து
வன்னியெனவிமத்துளியை வழங்கியென்றனுடலமெலாம் வருத்துமன்றே.

(இ-ள்.) இன் இசைவேய் குழல் ஊத - இனிமையான இசையையூட்டும் வேணுகானஞ்செய்ய, மேய்த்த நிரைக்கபிலை எல்லாம் - முன்னோட்டித் தாம் மேய்த்த பசுக்கூட்டங்கள் எல்லாம், எழும்மோகத்தால் பின் திரளும் - அக்கானத்தினால் எழும் வ்யாமோஹத்தால் தம்பின்வந்து திரளச் செய்யவல்ல, யதுகிரி வாழ் திருநாராயணர் என்னைப்பிரிதல் நோக்கி - யாதவகிரியில் வாழும் திருநாராயணர் என்னைப் பிரிந்திருப்பதை யுணர்ந்து, முன்பின் எனவந்த இந்தபனிக்காலம் தம்மில் - (முன்னர் காலையிலும் பின்னர் மாலையிலும் பெய்வதினால்) முன்பனிக்காலம் பின்பனிக்காலம் என்று வழங்கிவரும் இந்தப்பனிக்காலங்களில், வதனமுராணும் இந்து - என்வதனத்தைப்பகைத்தசந்திரன், வன்னி என்ன இமத்துளியை வழங்கி - தழலைப்போல பனித்துளியை யிறைத்து, என் தன் உடலம் எலாம் வருத்தும் - என்தேகம் ஆத்யந்தமும் எரித்து வருத்துகின்றான் (எ-று.)

வேய்ங்குழல், "இனத்தோடிறழ்தலும்" என்ற விதியால் ஙகரந் தோன்றியது. வஹ்நி என்னும் வடமொழி வன்னி என்றுதிரிந்தது. உடலமெலாம், ஒருமையிற் பன்மை. அன்று, ஏ, அசை. இந்து, எழுவாய். வருத்தும், பயனிலை. உடலம், செயப்படுபொருள். (அ௰)

## எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

## இருவேனிற் காலம்.

அக. அன்றொருபெண் ணிந்தனையிற் சந்திரவுன்
அழகியசோ டசகலைக ளழியலுற்றாய்

மன்றல்விரை யணிந்திந்த வேனில்வெப்ப
 மாற்றிநா ராயணனார் வரவுபார்க்கும்
இன்றெனையுந் தீத்தனையுன் கதிர்களாலே
 இவையாமோ தண்கதிர்தண் ணினனியாமோ
உன்றனக்குத் தானவன்றெவ் வென்னுநாமம்
 ஒன்றுங்கா ரணத்தினுரைத் தனர்மேலோரே.

(இ-ள்.) அன்று ஒருபெண் நிந்தனையில்-குருபத்னிக்கு இகழ்ச்சிவரும் படிசெய்த அக்காலத்தில், சந்திரா உன் அழகிய சோடசகலைகள் அழியல் உற்றாய் - ஓ சந்திரனே! உன் அழகியபதினாறு கலைகளும் அழியும்படி சபிக்கப்பட்டாய், மன்றல்விரை அணிந்து - வாசனையுள்ள கலவைச்சாந்து களையப்பிக்கொண்டு, இந்தவேனில் வெப்பம் மாற்றி - இந்தவெய்யிற்கால வெம்மையைத்தணியச்செய்து, நாராயணனார் வரவுபார்க்கும் இன்று - திருநாராயணர் வருதலுக் கெதிர்பார்த்திருக்கும் இற்றைத்தினத்தில், எனையும் தீத்தனை உன்கதிர்களாலே - என்னையும் உன்கிரணங்களாற் புழுங்கும்படி செய்தாய், இவை ஆமோ தண் கதிர் - இக்குணமுள்ள உன்கிரணங்கள் குளிர்ச்சியுள்ளவையாமோ, தண் இனன் நீயாமோ - நீயுந்தண்ணிய சந்திரனையா? உன்தனக்குத் தானவன் தெவ் என்னும்நாமம் - "ராக்ஷஸன்" "பகைவன்" எனப்பொருள்படும் "தானவன்" "தெவ்" என்னும்பெயர்கள், ஒன்றும் காரணத்தின் உரைத்தனர்மேலோர் - இக்கொடூரசெய்கையுள்ள உனக்குக்காரணப் பெயர்களாகப் பொருந்துமென்று தெரிந்து தான் பெரியோர் சூட்டினார்கள் (எ-று.)

அன்று குருபத்னிக்கு நிந்தைசேரும்படிசெய்து சபிக்கப்பட்டதுமன்றி, இன்று எனையுந்தீத்துவருத்தித் தூஷிக்கப்பட்டாய் எனப் பொருள்படுதலின், எனையும் என்றதில், உம்மை இறந்ததுதழீஇய எச்சப்பொருட்டு. ஓகாரங்களிரண்டும் எதிர்மறை, கழிவுப் பொருளனவுமாம். மேலோர், எழுவாய். உரைத்தனர், பயனிலை. நாமம் செயப்படுபொருள். (௮௧)

கட்டளைக் கலித்துறை.

௮௰௨. தனந்தந்தமாதங்கந் நோயவருந்துயர் சாடவடைந்
 தனந்தந்தமாதங்க மோலமிடப்புரந் தானைக்கோவத்
 தனந்தந்தமாதங்க வாயர்தொழத் தாங்குசௌரியைநேர்ந்
 தனந்தந்தமாதங்கந் தாணீட்டெதிகிரித் தானுவையே.

(இ-ள்.) தந்த மாதங்கம் ஓலமிடப் புரந்தானை - தந்தங்களையுடைய ஒருயானை ஓலமிட்டழைத்தகாலத்தில் வந்துரக்ஷித்தவனை, கோவத்தனம் தம்தம் ஆதங்க ஆயர் தொழ தாங்குசௌரியை - கோவர்த்தனகிரியைக் குடையாகத்திருவாய்ப்பாடி இடையர்கள்தங்கள்தங்கள்பசுக்கள் உயிர்தங் குநிமித்தம் முறையிட்டுத் துதிக்க அவ்வாயர் பொருட்டுக்கவித்த சூரனை, நேர்ந்து அனந்தம் தம்யாதங்கத்தான் நீட்டு எதிகிரித்தானுவை - வானத்

தையளக்க நீண்டுவளர்ந்து பெருமை பொருந்திய பொன்போன்றவழகிய சமது ஓரடியைநீட்டிய யதிகிரிக்கர்த்தனை, தனம்தந்து அம்மாது அங்கம் தோயவரும்துயர் - பொன்னை யீந்து அழகிய மங்கையர்களைப் புணர்வதினால் நேரும் பற்பல துன்பங்களையும், சாட அடைந்தனம்-ஒருங்ககற்றுவானென்னணி அடைக்கலம் புகுந்தோம் (எ-று.)

இன்றிக் குறித்தமாது "தனந்தந்து அங்கந் தோய" என்றதனால் விலைமாது என்க. மாது, ஆ, ஜாதி யொருமை. சாடல், இசைச்சொல். சௌரி-சௌர்யபலபராக்ரமமுள்ளவன், அநந்தம் - அந்தமில்லது, ஆநாயம். (யாம்) எழுவாய். அடைந்தனம், பயனிலை. புகுந்தோம், சௌரி, தாறு, செயப்படுபொருள். (௮௪)

கலிவிருத்தம்.

௮௫. வையமீதில்வாழ்க்கைநம்பி மையல்கொள்ளுமாந்தர்காள்
வெய்யகாலனாவிகொள்ள மேதிமேல்வராமுனம்
மெய்யரோதுமேலைவெற்பர் வீறுடைக்கிளிவர்பொற்
செய்யபாதமலரினீழல் செவிபுகாமுனோலமே.

(இ-ள்.) வையமீதில் வாழ்க்கைநம்பி - இந்தலீலாவிபூதியின் வாழ்க்கையையே சதமென்றுநம்பி, மையல்கொள்ளும் மாந்தர்காள் - அசனிடத்துமயங்கிக் கிடக்கும் மனிதர்களே, வெய்யகாலன் ஆவிகொள்ள - வெவ்வியயமன் உங்கள் உயிரைக் கொள்ளை கொள்ள, மேதிமேல் வராமுனம் - எருமைக்கடாவையூர்ந்து வாராததற்கு முன்னமே, மெய்யர் ஓதுமேலை வெற்பர்வீறுடைக்கின் - யாதாத்மிய ஜ்ஞானம்விளக்கிய எம்பெருமானாரால் ஜீர்ணோத்தாரணஞ்செய்து மங்களாசாஸநம்பண்ணப்பெற்ற மேலைக்கோட்டையில் வீற்றிருக்குந் திருநாராயணனது ஏற்றத்தைப் புகழ்ந்து கொண்டாடினால், செவிபுகாமுன் ஓலம் - அக்கொண்டாட்டத்தின் ஒலிசெவியிற் புகாததற்கு முன்னமே, அவர்பொன்செய்யபாதமலரின் நீழல் - அழகிய சிவந்த திருவடிமலரின் நீழலை ஆச்ரயணீயமாகத் தந்தருளுவர் (எ-று.)

வாழ்க்கை, இங்குயிரிதில் யகாரம் விகாரத்தாற் றொக்கது. காலன்வருவது அந்தியகாலத் தாதலின் அவன்வராத இக்காலத்திலேயே என்றற்கு வருமுனம் என்னாது வராமுனம் என்றும். "திருநாராயணன்றன் காலம்பெறச்சிந்தித்துய்மினோ" என்பது ஸ்ரீஸூக்தி. கானலில் யாத்திரை செய்வார்க்குத் தருநிழல் ஹிதந்தருவதுபோல் வையமீதுதேகயாத்திரை செய்வார்க்குத் திருவடிநீழல்தான் ஹிதந் தருவதாகையின் அதைப்பெறவேண்டுமென்பது கருத்து. (திருநாராயணர்) எழுவாய், ஈவர், பயனிலை. நீழல், செயப்படுபொருள். (௮௫)

தாழிசை.

மறம்.

௮௬. ஓலைகொண்டுகெடி தோடிவந்துதரு தூதகேளினதுசக்கிரி
ஓங்குசீர்த்திபெறு வள்ளலென்றுமன வூக்கமோடுனைபகர்ந்தனை
மேலைநாடதனி லென்னையாணிகர்மன்னன் வினைகுமென்றுணர்கிலாய்கொலோ
வேலைமோவிழிக வல்லமைபுள்ளவளை வேட்டுமெல்லியல்லினம்படா

மாலையீந்துமலர் மாலைதந்துமண மாலைசூட்டிமகிழ்வோடரி
மைவிழிச்சிறுமி மையன்முற்றுமற மதனநூல்பகரிலீலையாம்
வேலைசெய்தருள்வர் யதுகிரிச்சிகர மேவிநின்றதிருநாரணர்
வேலைவண்ணர்திரு மாலவட்குமுறும் வேட்கையன்னர்திருவடியினே.

(இ-ள்) ஓலைகொண்டுகடிது ஓடிவந்து தருதூதகேள் - ஓலையைச்சிர மேற்கொண்டு சீக்ரமாகவோடோடியும் வந்துகொடுத்த தூதனே! கேட்பா யாக, நினதுசக்கிரி ஓங்குசீர்த்திபெறு வள்ளல் என்று - உங்கள் அரசன், உயர்ந்தமிகு புகழையுடைய வரையாது கொடுக்கும் வள்ளலென்று, மன ஊக்கமோடு உரைபகர்ந்தனை - மனதில் உச்சாகக் கிளர்ச்சியாய்ச்சொல்லிக் களிப்படைந்தனை, மேலைநாடதனில் - மேலைக்கோட்டையைச் சார்ந்த நாட் டில், எண்ணெய் வாணிகர் மணவினைஞர் என்று உணர்கிலாய் கொலோ, (சக்கிரியை) செக்கான் என்றும் குயவன் என்றும் மதித்திருப்பதை நீயறிந் திலாய்போலும், மேவுமோ இவ்விதவண்மை உள்ளவரை வேடர் மெல்லி யல் விளம்படா - இவ்விதமாகிய வள்ளன்மையையுடையாரை எம்வேட்டு வப்பெண் வேட்குமோ நீ சொல்வாயாக, மாலை ஈந்து - ஆசையையுண் டாக்கி, மலர்மாலை தந்து - அங்கீகரித்ததற்கறிகுறியாகப் பூமாலையருளி, மணமாலை சூட்டி - திருமாங்கில்யதாரணமும் பண்ணி, மகிழ்வு ஓடு அரி மை விழிச்சிறுமி - உச்சாகத்தையுடைய செவ்வரி கருவரி படர்ந்த மையணிந்த கண்களையுடைய எம்பெண்ணினது, மையல்முற்றும் அற - விரசமுற்றும் மடங்க, மதனநூல் பகர் இலீலையாம் வேலைசெய்து அருள்வர் யதுகிரிச்சி கரமேவி நின்ற திருநாரணர் வேலைவண்ணர் திருமால் - யாதவகிரியினுச்சி யில் திருநின்றகோலச்சேவை சாதிக்கும் கடல்வண்ணரும் திருமாலுமாகிய திருநாரணர் மதனாகமங்களிற் சொல்லப்படுகிற லீலையாகிய வேலையைச் செய்தருள்வர், அவட்கும் உறும்வேட்கை அன்னர் திருவடியினே-எம்பெண் ணுக்கும் அவர் திருவடிகளில் தான் ஆசைமிகும் (எ-று.)

ஊக்கமோடு இங்கு ஓடு விசேடணப்பொருட்டு. கொல் ஐயப்பொருளிடைச் சொல். அடா, இகழ்ச்சிக் குறிப்பு விளி. அருள் உயர்வின்கண் வந்தவிலை. மகிழ் வோடருள்வர் என முடிக்கினுமமையும். அவட்கும் இதில் உம்மை திருநாராயணபு ருள்வதன்றி யெனப்பொருடாலால் இறந்தது தழீஇயது. இற்றேகாரம் தேற்றப் பொருட்டு.

| எழுவாய். | பயனிலை. | செயப்படுபொருள். |
|---|---|---|
| தூத (நீ). | கேள், விளம்படா. | (சொல்வதை), மேவுமோ (இதை) |
| திருநாரணர். | அருள்வர். | ,, |
| வேட்கை. | உறும். | ,, |

(அச)

**எண்சீர்க்கழி நெடிலடியாசிரியச் சந்தவிருத்தம்.**

**இதுவுமது.**

அரு. அடிமையுற்றுமாயனுக்கு வழிபடுங்கிரீடிபால்
அன்புவைத்துநாரணன்ற னருள்பெறத்ரியம்பகன்
திடமொடுற்றவுரிமையோடு திருவுருத்தரித்தவெங்
திருக்குலத்தொருத்தனுண்ட சேடமந்தநக்கனே

தடமுறக்கொளுயர்குலந் தழைக்கவந்தபைந்தொடித்
தையலென்றுமையநீத்த சதுரர்வாழும்யதுகிரிக்
குடநடிக்குமவனையன்றி யெனையனைக்குறித்திடாக்
கொள்கையாளெனுஞ்சொலொன்றுகூறுசென்றுதூதனே.

(இ-ள்.) அடிமையுற்றுமாயனுக்கு வழிபடும் கிரீடியால் அன்புவைத்து - கண்ணபிரானுக்கடியானாகித் தொண்டு செய்து வந்த அருச்சுனனிடத்தில் அன்புபாராட்டி, நாரணன்தன் அருள்பெறத்திரியம்பகன் - அக்கண்ணபிரானது க்ருபையை (அவ்வருச்சுனனுக்குப் பாசுபதாஸ்த்ரங் கொடுப்பதால்) பெறும் பொருட்டாக மூன்று நேத்ரங்களையுடைய சிவபெருமான், திடமொடு உற்ற உரிமையோடு திருவுருதரித்த - வலிவாகப் பொருந்திய வுரிமையோடு உருமாறி வரத்தக்க வருணம் யாதென்றாராய்ந்துணர்ந்துவந்த, எம்திருக்குலத்து ஒருத்தன் - எமது சிறந்த வருணத்தொருத்தனாகிய கண்ணப்பன், உண்டசேடம் அந்தநக்கனே - உண்டு ருசிபார்த்துக் கொடுத்தமிச்சிலை அச்சிவ பெருமானே, தடமுறக்கொள் - பெருமையுடனங்கீகரித்துக் கொண்ட, உயர்குலம் - கீர்த்திபெற்றுயர்ந்த எங்குலமானது, தழைக்கவந்த பைந் தொடித்தையல் - செழிப்புற வந்துதித்த அழகியகங்கண மணிந்த பெண்ணானவள், என்றும் ஐயம்நீத்த சதுரர்வாழும் யதுகிரி - (வஸ்துநிர்த்தாரணம் பண்ணிக்கொண்டு) சதாசந்தேக விபரீதமற்ற சதிர்ப்பாட்டினையுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள் வாசம்பண்ணுகின்ற யதுகிரியில் வீற்றிருக்கும், குடம்நடிக்குமவனை அன்றி - குடக்கூத்துகந்த ஆச்சர்ய பூதனாகிய திருநாராயணனையன்றி, எனையனைக் குறித்திடாக் கொள்கையாள் எனும் சொல் ஒன்று - யாதொருவனையும் அங்கீகரிக்கமாட்டாத ஸ்வரூபத்தினள் என்னுஞ் சொல் ஒன்றை, கூறுசென்று தூதனே - தூதாகவந்தவனே திரும்பிச் சென்று உம்மரசனிடத்திற் சொல்வாயாக (எ-று.)

தேவேந்திரன் கொடுத்த திவ்யமாகிய பொற்கிரீடத்தை யுத்தத்தில் தரித்தவனுதல் பற்றி அருச்சுனனுக்குக் கிரீடியென்ற நாமம் வந்தது. உரிமை-மனைவி, இங்கு பார்வதி முதலிய சிவபெருமானது பரிவாரத்தை யுணர்த்துகின்றது. தூதனே (நீ) எழுவாய். கூறு, பயனிலை. ஒன்று, செயப்படுபொருள் (௮௫)

கட்டளைக் கலித்துறை.

இரங்கல்.

௮௬. கூரார்விழிமின்னை நாராயணர்க்குக் கொடுத்திடலால்
சீராரென்னன்னையென் கோவுன்றுழையவர் சேர்தலால்
நேராகுமாற்றவ ளென்கோவிராத்துயி லீங்கவென்றுந்
தீராதிரங்கலா னோராளென்கோதெண் டிரைக்கடலே.

(இ-ள்) தெண்டிரைக்கடலே - தெளிவாகிய அலைகளையுடையகடலே, கூர் ஆர்விழிமின்னை - கூர்மை பொருந்திய வாளுக்கொப்பான கண்களையுடையபெரியபிராட்டியாரை, நாராயணர்க்குக் கொடுத்திடலால் - திருநாராய

ணருக்குத் தாரமாகக் கொடுத்திட்ட முறைமையால், சீர் ஆர் என் அன்னை என்கோ - சிறப்புவாய்ந்த வுன்னை என்தாய் என்று சொல்லட்டுமோ?, உன் உழை அவர் சேர்தலால் - உன்னிடத்திற்சேர்ந்து அவர் யோகநித்திரை யமர்ந்திருப்பதால், நேர் ஆகும்மாற்றவள் என்கோ - எனக்கு நேரான மாற்று ளாகிய சஹகளத்தி என்று சொல்லட்டுமோ?, இராத்துயில் நீங்க என்றும் தீராது இரங்கலால் - இராப்போதில் யான் கண்ணுறக்கங் கொள்ளாவண்ணம் என்றும் இடையறாது கோஷடித்துக் கொண்டிருப்பதால், நேராள் என்கோ - எனக்குப்பகை என்று சொல்லட்டுமோ?:— (எ-று.)

பின், பண்பாகுபெயர். பெரியபிராட்டியாருதித்தற் கிருப்பிடமான பெற்றி நோக்கிக் கடலைச் "சீராரன்னையென்கோ" என்றான். (நான்) எழுவாய். அன்னையென்கோ, மாற்றவளென்கோ, நேராளென்கோ, பயனிலைகள். கடலே (உன்னை) செயப்படு பொருள் (அகூ)

இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

௮௭. கடல்புரைவண்ணன் கனமேலைக்கண்ணல்
மடல்விரிபூம்பாவை மணாளற்களித்தேன்
உடல்பொருளாவி யுவந்து.

(இ-ள்.) கடல்புரை வண்ணன் - கடல் நிறத்தைப்போன்ற திருமேனியையுடையவனாகிய, கனம்மேலைக்கண் - மேகந்தவழும் மேலைக்கோட்டையில் திருச்சேவை சாதிக்கின்ற, நல்மடல் விரிபூம்பாவை மணாளற்கு - நல்லவிகசித்த அரவிந்த வமளியிற் பொருந்திய பெரியபிராட்டியாரது வல்லபனுக்கு, அளித்தேன் உடல் பொருள் ஆவி உவந்து - ப்ரக்ருதி சம்மந்தமான தேகத்தையும் அதற்குச் சம்மந்தமான எல்லாப்பொருளையும் உயிரோடு ஸ்வதந்தரமற்றுச் சந்தோஷித்தனாக அர்ப்பிதம் செய்து போட்டேன் (எ-று.)

நான் எனது என்னும் அகங்காரமமகாரங்கள் கெட்டுச் சரணாகதிபண்ண வேண்டியதாதலின் "அளித்தேன் உடல் பொருளாவி" என்றும் இங்ஙனம் சரணாகதிபண்ணினார்களுக்குப் பிராட்டியின் புருஷகாரம் கிடைக்கும் என்றதனிலைக் குறிக்க, பூம்பாவைமணாளன் என்றுங் கூறியது. (நான்) எழுவாய். அளித்தேன், பயனிலை. உடல், பொருள், ஆவி, செயப்படுபொருள். (புள)

எழுசீர்க்கழி நெடிலடியாசிரியச்சந்த விருத்தம்.

௮௮. உற்றதுணைமற்றிலை யெனத்துணியுநர்த்திடை
யுறத்துதியிசைக்குமுனிவோர்
பெற்றமெகினப்புடவ ளக்கரிமிசைக்குலவு
பெற்றியரின்மிக்குயர்வரால்
சொற்றசமத்தென்மன முற்றுநிலைநிற்பதிலை
தொட்டடைதன்மற்றெதினெனின்
கொற்றமிகுபொற்றையினின் மிக்கபதுமெய்ப்பிறைவ
குற்றமிலனற்பணியினே.

(இ-ள்.) உற்றதுணை மற்று இலை என - உரித்தானதுணை தேவரீரையன்றி வேறில்லை எனப்பட்ட, துணிவு உளத்திடை உற - துணிவு மனத்தின்கண் உண்டாய், துதி இசைக்கும் முனிவோர் - ப்ரார்த்தனை பண்ணப்பட்ட மநநசீலர்கள், பெற்றம் எகினப்புள் களக்கரி மிசைக்குலவு - இடபமென்ன அன்னப்புள்ளென்ன வெள்ளையானையென்ன ஆகிய விவைகளின் மீது விளங்குகின்ற, பெற்றியரின் மிக்கு உயர்வரால் தன்மையையுடையார்களினும் மிக்க உயர்ந்தோரெனச் சொல்லப்படுவார்கள், சொற்றசரமத்து - ஈங்கு சொல்லப்பட்ட கடைப்பிடியில், என் மனம் உற்று நிலைநிற்பது இலை - என்மனம் பொருந்தி அதில் நிலைத்திருக்கு மென்பது சித்தமாகவில்லை, (ஆனால்) தொட்டு அடைதல் மற்று எதின் எனின் - அதுபற்றியடைகின்றது தான் எதிலென்றால், கொற்றம் மிகுபொற்றையினில் மிக்கயது வெற்பு இறைவ - மேன்மை பெற்றமலைகளில் உயர்ந்த யாதவகிரிக் கிறைவனாகிய திருநாராயணரே, குற்றம் இல் உன் நல்பணியினே - குற்றமொன்றுமில்லாத உமது நல்ல திருவடிக்கைங்கர்யங்களில் தான் (எ-று.)

"உற்ற துணை மற்றிலை யெனத் துணிவுளத்திடையுறத் துதியிசைத்தல்" என்பது ஸர்வதர்மமும் பரித்யாஜ்யஞ்செய்து போட்டு எம்பெருமான் திருவடியே சரமோபாயமாகக் கொண்டு சரணாகதம்பண்ணல். இங்ஙனஞ் சரணாகதிபண்ணினோர்க்கு ப்ரம்ஹ ருத்ரேந்த்ரர்களும் பெறலரிய நித்ய விபூதியில் எம்பெருமான் ஸந்நிதியில் நிரதிசயானந் தாநுபவத்தைப் பெறுவரென்பது பெறப்பட்டது. மற்றுகளில் முன்னது பிறிதைப் பொருளையும், பின்னது அசைத்துநிற்றற் பொருளையுந் தரவந்தன. கரி-(துதிக்)கையையுடையது இது தத்திதாந்தம். ஆல், அசை. சொற்ற, சொல் என்னும் பகுதியடியாகப் பிறந்த பெயரெச்சம். சரமம், காலவாகுபெயர். கொற்றம் - பெருமை. இற்றேகாரம் தேற்றம், பிரிவிலைப் பொருட்டுமாம். முனிவர், அடைதல் எழுவாய். உயர்வர், பணியின் (ஆகும்) பயனிலை. (அ௪)

## நேரிசை ஆசிரியப்பா.

### மதங்கு.

அ௫. இனியபயோததி யெழுசுரநமதுரம்
கனியாகவிலுங் கவினுறுவாணியும்,
கொடியவாளத்தின் கூரியநாட்சியும்,
படியவியந்து பார்த்தோர்மாழ்க
விரைமலர்வேய்ந்து மெய்ச்சாந்தணிந்து
நிரைகலன்பூண்டு நிருத்தமானினியாய்,
வித்தகஷட்ஜம் விடபங்காந்தாரம்
மத்திமம்பஞ்சமம் தைவதம்நிஷாதமென்
கலாபம்விடையயம் க்ரௌஞ்சம்கோகிலம்
உலாவுகிள்ளையொடும்பற்றொனிநிகர்
சரிகமபதநியென் சத்தசுரத்தெழு
விரிகமகம்முதல் விகற்பத்தால்வரும்
எழுபானிரண்டே யெனுமேளகர்த்தரி

னெழுஸ்ரீராக மிராமக்கிரியை
குண்டக்கிரியை குறிஞ்சிசாவேரி
அண்டர்க்கினியபை ரவிதேசிதோடி
ஆகம்புளக மாந்தே சாகஷரி
மேகரஞ்சியொடு வேளாவளிசேர்
வாம்போதினிக்கும் வராளிமாளவி
காம்போதிபல்லதி காந்தாரிநாட்டை
திடமஞ்சரியெனச் செருக்குசாரங்கம்
படமஞ்சரிபூ பாளமலகரி
பைசிகைபோல்பங் காளம்வசந்தம்
கைசிகைகூர்ச்சரி கௌரிதேவக்ரியை
இனியபௌளியிந் தோளமிலலிதை
நனியுயர் தநாசி நாராயணியெனச்
செப்பாநின்ற இரவிராகங்கள்
முப்பானிரண்டே முதலாமவைகளில்,
கீதந்தானங் கிளர்தானவர்னம்
வதமில்பதங்க்ருதி யினிதாய்ப்பாடி,
தசப்ராணயுக்தமாய்ச் சனித்ததுருவம்
வசப்படன்மாரு மட்டியம்ரூபகம்
ஜம்பைத்ரிபுடையட தாளமைகதாளம்
அம்பதத்துணையி லதிரக்காட்டி,
பொற்புறுகொம்பெனப் புற்கலமிலங்க,
அற்புதமான அபிநயந்துலங்க,
மேலைக்கோட்டை விரிமணிமறுகிடைத்
தொலைக்கோட்டைத் தொணிதண்ணுமையை,
கப்புருபாழ்கர தாளத்தைதப்பின்
உம்பருமுவக்க வொழுங்கணியெனக்கொடு,
கண்டவர்மனமுங் கண்களுமிசைய,
வெண்டமர்தேம்பொழி மாலையுமசையக்,
காலிற்சலங்கை கலீர்கலீரென்ன,
நூலிற்சிறிய நுணுகிடைநுணங்கக்,
கொங்கைகுலுங்கக், குறுவேர்வைசிந்தச்,
செங்கையிற்பூங்கிளிச் செண்டொன்றுமுந்தத்,
திருநாராயணர் சினகரநாடி
அருநாட்டியம்புரிந் தகமகிழ்ந்தேகும்
மதங்கியே,நின்பெரு மாட்சி
சிதங்கியாதியார்க்குஞ் செப்பிடற்கரிதே.

(இ-ள்.) இனியபயோததி எழு - மதுரம் நிறைந்த க்ஷீராப்தியிற்பிறந்த, சுதைமதுரம் கனிய நவிலும் - அமுதத்தின் இனிமை மிக வசனிக்கும்படியான, கவின் உறு வாணியும் - அழகுபொருந்திய வாக்கும், கொடிய

ஆலத்தின் கூரியகாட்சியும் - கொடுமையுள்ள நஞ்சுபோன்ற கூர்மையாகிய விழிகளூம், படிய - (அச்சுவையும் ஆலமும் ஓரிடத்திற்பிறந்ததுபோல் மற்றும் ஓரிடத்திற்கலந்து) பொருந்தியதென, வியந்துபார்த்தோர்மாழ்க-அதிசயித்துப்பார்த்தவர்கள் மயங்கும்படி, விரைமலர்வேய்ந்து - நறியமலர்மாலையைச்சூடி, மெய்ச்சாந்து அணிந்து - தேகத்திற்பூசத்தக்க களப கஸ்தூரி சந்தனாதி வாசனைத்ரவ்யங்களைப்பூசி, நிரைகலன்பூண்டு - ஒழுங்கான ஆபரணங்களைப்பூண்டு, நிருத்தமானினியாய்-நடனகோலம் பூண்டாளாகி, வித்தகஷட்ஜம் விடபம் காந்தாரம் மத்யமம் பஞ்சமம் தைவதம் நிஷாதம் என் - ஞானத்தாலறியத்தக்க ஷட்ஜம் முதல் நிஷாதம் ஈறுகச்சொல்லப்பட்ட பெயரினவாய், கலாபம் விடை அயம் க்ரௌஞ்சம் கோகிலம் உலாவுகிள்ளையொடு உம்பல் தொனி நிகர் - மயில், ரிஷபம், ஆடு, க்ரௌஞ்சம், குயில், உலாவுகின்ற கிள்ளை யென்னுங் குதிரை, யானை இவைகளின் த்வனியையொத்த, சரிகம பதநி என் - சரிகமபதநி என்கின்ற, சத்த சுரத்து எழு - சப்தஸ்வரங்களினின்று மெழுகின்ற, விரி கமகம் முதல்விகற்பத்தால்வரும்-விரிவாயுள்ள கமகமுதலான ஸ்வரமாறலின் வேறுபாட்டால் உண்டாகின்ற, எழுபான் இரண்டே எனும் மேளகர்த்தரின் எழு - எழுபத்திரண்டு மேளகர்த்தரினின்றும் ஜநிக்கின்ற, ஸ்ரீராகம்—நாராயணி எனச் செப்பாநின்ற - ஸ்ரீராகம், இராமக்ரியை, குண்டக்ரியை, குறிஞ்சி, சாவேரி, தேவர்கட்குமினிக்கும் பைரவி, தேசி, தோடி, கேட்பவர் தேகத்தைப் புளகப்படுத்தும் தேசாக்ஷரி, மேகரஞ்சி, வேளாவளி, சோர்வுறுங்கால் இனிமையயக்கும் வராளி, மாளவி, காம்போதி, பல்லதி, காந்தாரி, நாட்டை, திரமானபூங்கொத்தைப்போல் அந்தம்விரிந்தகளிப்புள்ள சாரங்கம், படமஞ்சரி, பூபாளம், மலஹரி, அழகிய சிகைபோன்ற பங்காளம், வசந்தம், கைசிகை, கூர்ச்சரி, கௌரி, தேவக்ரியை, இனிக்கும் பௌளி, இந்தோளம், லலிதா, நலமிகுந்த தநாசி, நாராயணி எனச்சொல்லப்பட்ட, திரஇராகங்கள் முப்பான் இரண்டே முதலாம் அவைகளில் - முக்யமான ராகங்கள் முப்பத்திரண்டு முதலானவைகளில், கீதம் தானம் கிளர்தானவர்ணம் உதம் இல் பதம் க்ருதி இனிதாய் பாடி - கீதமென்ன, தானமென்ன, ஸ்வரஸாயித்யங்களோடு நிறைந்தனவாகிய தானவர்ணமென்ன, குற்றமில்லாப்பதங்களென்ன, கீர்த்தனைகளென்ன, இவைகளை இன்பமாகப்பாடி, தசப்ராணயுக்தமாய் சனித்த - காலமுதலிய பத்துப்ரமாணயுக்தமாய்ப்பிறந்த, துருவம்—ஏகதாளம்-துருவம், வசமாக்குதல் தப்பாதமட்டியம், ரூபகம், ஜம்பை, திரிபுடை, அடதாளம், ஏகதாளம் ஆகிய சப்ததாளங்களை, அம்பதத்துணையில் அதிரக்காட்டி - அழகிய விரண்டு பாதங்களினுஞ் சப்திக்கும்படி காண்பித்து, பொற்பு உறு கொம்பு என புற்கலம் இலங்க - அழகு நிறைந்த கொம்பைப்போல் மேனி பிரகாசிக்க, அற்புதமான அபினயம் துலங்க - ஆச்சர்யமாகப் பாட்டின் பொருளின்படி அபிநயம் விளங்க, மேலைக் கோட்டை விரிமணிமறுகு இடை-மேலைக் கோட்டையின் பரப்புள்ள நவமணிகள்கொழித்த வீதியின் மத்தியிலே, சோலை கோட்டை தொனிதண்ணுமையை தம்புருயாழ்கரதா

ளத்தை - சோலாலாய ஸ்ருதியையும், சங்கையம், சப்திக்கும் மத்தளத்தை யும், தம்புருவையும், வீணையையும், தைக்தாளத்தையும் (உடையவர்களை,) பின் உம்பரும் உவக்க ஒழுங்கணி எனக்கொடு - தேவர்களும் சந்தோஷிக் கும்படியாக அழகிய உன் பின் பரிவாரங்களாகக்கொண்டு, கண்டவர் மன மும் கண்களும் இசைய - பார்த்தோருடைய மனமுங் கண்ணுங் கலந்து தொடர்ந்துவர, வண்டு அமர் தேம் பொழிமாலையும் அசைய - வண்டுகள்படி யும் தேன் சொரிகின்ற பூமாலையாட, காலில் சதங்கை கலீர் கலீர் என்ன காலிலணிந்திருக்கும் நூபுரத்தின் சலங்கை கலீர் கலீர் என்று சப்திக்க, நூலின் சிறியநுணுகு இடை நுணங்க - நூலிழையைப் பார்க்கிலுஞ் சிறி தாகிய நுட்பமான இடையானது துவள, கொங்கை குலுங்க - தனங்கள் நடனத்துக்கேற்பக் குலுங்க, குறுவேர்வை சிந்த - முகத்தில் வேர்வைச் சிறுதுளிகள் முத்து முத்தாய்ச் சிந்தவும், செம்கையில் பூங்கிளிச் செண்டு ஒன்று முந்த - சிவந்த கரத்தில் பூவாற் செய்த ஒரு கிளிச்செண்டு முன்கா ண, திருநாராயணர் சினகரம்நாடி - திருநாராயணஸ்வாமியினது சந்நிதியைப் பார்த்த வண்ணமாக, அருநாட்டியம் புரிந்து - அருமையான நர்த்தனம் புரிந்து, அகம் மகிழ்ந்து ஏகும் மடந்தையே - மனமகிழ்ந்து செல்லும் படியா னநாடகக் கணிகையே, நின்பெரு மாட்சி சிதம் கியாதி - உன்னுடைய மேன்மை பொருந்திய பெருமை யென்ன, ஞானமென்ன, ப்ரக்யாதி யென் ன இவைகள், யார்க்கும் செப்பிடற்கு அரிதே - சொல்வதற்கு யார்க்கும் அரியனவேயாம் - எ-று.)

இனிய பயோதரி யொழு ஆலம் எனவுங் கூட்டுக. விக்ரகம் என்பதை சப்தஸ் வரங்களின் பெயர்களுக்கும் பொதுவாகிய அடையெனக் கொள்க. கின்னீ, பல பொரு ளொருசொல்லாதலின் குறிலையைக்குறிக்க உலாவு என்ற அடைபெய்த்தது. அண்டாக் கும் என்றதிலும்மைமலிகாரத்தாற்றொக்கது. ஒலி, ஓசையிடத்துவந்த எண்ணும்பொ ருட்டு. என வென்பது மத்தன்மைத்தே. செப்பு, திசைச்சொல். தோள், கருவி யாகுபெயர். உம்பரும் இதில் உம்மை உயர்வு சிறப்பு. தேம் இதில் இறுபோய் மெலி மிகுந்தது. கலீர் கலீர், ஒலிக் குறிப் பிடைச்சொல். நூலிற்சிறிய, உறழ்வு பொருவு. செங்கை, இதிற் செம்மை பண்பாகுபெயராய்த் தாமரையையுணர்த்திற்று. யார்க்கும் இதில் உம்மை உயர்வு சிறப்போடு முற்றும்பொருட்டு மாட்சி, சிதம், கியாதி, எழுவாய். அரிது, பயனிலை. (௯௰)

மருட்பா.

வாயுறை வாழ்த்து

௯௧. அரியதித் தேகம் அவயவங் குன்றாத
தரியது திண்ணதிகிரியி லத்தன் - றிருவடிக்கே
அன்பாயமைத லதினரிது
துன்பமொழிக் கிடந் தொழுதொழுமின்களே.

(இ-ள்.) அரியது இத்தேகம் - இம்மானிட சரீரம் பெறற்கருமையானது, அவையவங்குன்றாதது அரியது அதின் - அவையவங்கள் குறைவுபடாமல் பிறத்தல் அதனினும் அருமையானது, எதிகிரியில் அத்தன் திருவடிக்கே - யதிகிரியில் வீற்றிருக்குந் திருநாராயணஸ்வாமி திருவடிக் கைங்கர்யத்

ஸ்வாமியாகிய அலங்காரனை, வாழ்த்தி அண்டினல்-பல்லாண்டுகூறி (த்திருவடியே யுபாயோபேயமெனக் கொண்டு) நெருங்கினல், தராதலத்தில் வந்து உதித்துசாயும் பவநோய் இராது - இவ்விபூதியில்வந்துபிறந்து மாயும்படியான ஜநநமரண மென்னும் துன்பம்வருவதின்று (எ-று.)

ஹலம் என்னும் வடமொழித்திரிபு அலம், கலப்பையென்பதுபொருள். மன், பண்பாகுபெயர். பவநோய், எழுவாய். வராது, பயனிலை. (௯௨.)

## வஞ்சிவிருத்தம்.

### வண்டு.

௯௩. அண்டவரி கண்டவிழு மம்புயம்
மண்டிமது வுண்டுமுரல் வண்டுகாள்
கொண்டறவழ் கின்றயது குன்றில்வாழ்
விண்டுவர வண்டியுழை மின்களே.

(இ-ள்.) அண்ட அரிகண்டு அவிழும் அம்புயம்மண்டி - ஆகாயத்திற் சூரியன் உதயமாவதைக்கண்டு விகசிக்கும் தாமரைமலரை நெருங்கி, மது உண்டுமுரல் வண்டுகாள் - தேனையுண்டு ரீங்காரஞ் செய்யாநின்ற வண்டுகளே!, கொண்டல்தவழ்கின்ற யதுகுன்றில்வாழ் - மேகம்படராநின்ற யாதவகிரியின்மேல் நித்யவாசம் பண்ணுகின்ற, விண்டுவர - எங்கும் வ்யாபகமுள்ளதிருநாராயணர் இவ்விடத்திற்குஎழுந்தருள, அண்டி உழைமின்கள்- அவரைநெருங்கி விண்ணப்பஞ் செய்யுங்கள் (எ-று.)

விண்டு-விஷ்ணு. வண்டுகாள், (நீங்கள்)எழுவாய். உழைமின்கள். பயனிலை (௯௩)

## வஞ்சி விருத்தம்.

௯௪. உரையின் மிக்குயர் யதிநுதி
வரையி னிற்பதி யரிதுதி
தரையி னிற்புரி யடியரோ
நிரையி னத்தரினெடியரோ.

(இ-ள்.) உரையின்மிக்கு உயர்-வேதத்திற்கு யதார்த்தபாஷ்யஞ் செய்ததினல் மிகுந்தசிறப்புவாய்ந்த, யதிநுதி - எங்கள் ராமாநுஜயதீந்த்ரராலாராதிக்கப்பட்ட, வரையினில் - யாதவகிரியென்னுந் திருமலைக்கு, பதி அரிதுதி - இறைவராகிய திருநாராயணரது திருநாமசங்கீர்த்தனத்தை, தரையினில்புரி அடியரோ-இந்தலீலாவிபூதியிற்பண்ணும்படியான தாஸபூதர்களே, நிரையின் அத்தரின் நெடியர் - ஒழுங்காகிய தேவர்களினுஞ் சீரியோராவர் (எ-று.)

துதி, வடசொல். துதி என்பதுபொருள். மோக்ஷ ஐச்வர்யப்ரதமாகியகடாக்ஷம் மானிடரைப்போல் தேவர்கள்பெறக்கூடாமையின்,"அரிதுதிதரையினிற் புரியடியரே, நிரையினத்தரி னெடியரோ" என்றும். அடியரோ, இதில் ஏகாரம்பிரிநிலை. அடியர் எழுவாய். நெடியர் பயனிலை. (௯௪)

## கட்டளைக் கலித்துறை.

௯௫. நெடியபாராழியிற் கண்வளர்மாய நிராமயபொற்
கொடியடர்கோட்டு யதுகிரிவாண குலையத்திற்
கொடியனவத்தன்குலத்தொண்டுசற்றுமுட்கொண்டிலனிவ்
வடியனைச்செவ்விதி னுக்கிப்பரிவுட னண்டருளே.

(இ-ள்.) நெடிய பால் ஆழியில் கண்வளர்மாய - நீண்ட திருப்பாற்கடல்மத்தியில் (திருவநந்தாழ்வானாகிற பாயலின்மேரில்) திருக்கண்வளர்ந்தருளும் ஆச்சர்யபூதனே!, நிராமய - அடியார்க்குற்றதுன்பநோயகற்றுபவனே!, பொன்கொடி அடர்கோட்டு யதுகிரிவாண - சுவர்ண மயமான த்வஜங்கள் நெருங்கியசையும் குவட்டினையுடைய யாதவகிரியின்மீது நித்யவாசம்பண்ணும் திருநாராயண ஸ்வாமியே, குவலயத்தில் - இந்தலீலாவிபூதியில், கொடியன் -கொடுமையுள்ளவனும், அவத்தன் - பொய்யனுமானதன்றி, குலத்தொண்டுசெற்றும் உள்கொண்டிலன் - சிரேஷ்டமான தேவரீரது குணாநுபவ திருவடிக்கைங்கர்யங்களைப்புரிய வொருசிறிதேனும் மனத்திற் கொள்ளாதவனுமாயினேன், இவ் அடியனை - இத்தகைய வன்னெஞ்சனாகிய அடியேனை, செவ்விதின் ஆக்கி-(சேஷசேஷிபாவத்தையுணர்த்திச்) செவ்வைப்படுத்தி, பரிவுடன் ஆண்டு அருள் - தேவரீர்க்குஸ்வபாவமாகிய பெருங்கருணையோடு ரக்ஷித்தருள்வீராக (எ-று.)

நிராமயம், வடசொல், நோயின்மையென்பது பொருள். பொற்கோட்டியதுகிரி எனவுங்கூட்டுக. கொண்டிலன் என்பதில், இறந்தகாதழீஇய எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. யதுகிரிவாண (நீ), எழுவாய். ஆண்டருள், பயனிலை. அடியன், செயப்படுபொருள். (௯௫)

நேரிசை வெண்பா-

௯௬. ஆண்டருளவேண்டு மடியேன்முற் போந்துபொறி
மாண்டவியுங் கால்விகங்க மன்புயத்தே-மாண்டகைய
நந்திரைமா மந்திரமார் நாராயணாமலரா
ரிந்திரைமார் பத்தொன்ற வே.

(இ-ள்.) மாண்தகைய நந்து இரை மா மந்திரம் ஆர் நாராயணா-மாட்சிமைபெற்ற சங்கத்வனிமாறாதுநிறைந்த திருக்கோயிலின்கண் நித்யவாசமாய் நின்ற திருநாராயணஸ்வாமியே!, மலர் ஆர் இந்திரைமார்பத்து ஒன்ற - தாமரை மலர்த்தவிசிலுள்ள பெரியபிராட்டியார் வக்ஷஸ்தானத்தி லமர்ந்திருக்குந் திவ்யசேர்த்திக்காட்சியோடு, விகங்க மன்புயத்து-பெரிய திருவடியின் அழகியபுஜத்தின்மீது, பொறிமாண்டு அவியுங்கால் - ஐம்பொறிகளுந் தத்தஞ்செயல்குன்றி அவிந்துபோகுஞ் சரமதசையில், அடியேன் முன்போந்து - அடியேன் கண்முன்தோன்றி சேவைசாதித்து, ஆண்டு அருளவேண்டும் - ரக்ஷித்தருளவேண்டும் (எ-று.)

"ஆண்டருளவேண்டு மடியேன்முற் போந்து" என்றது எம்பெருமானது சேஷித்வமும், சேதந சேஷத்வமுமானசம்பந்தங்கொண்டு. ஒலிபரந்தவிடமெங்கும்மபடாள் பீதியின்றாதலின் "மாண்டகைய நந்து" என்றது. இந்திரா என்னும்வடமொழித்திரிபு இந்திரை. நாராயணா (நீ) எழுவாய். ஆண்டருளவேண்டும், பயனிலை. (அடியேன்) செயப்படுபொருள். (௯௬)

கட்டளைக் கலித்துறை.

௯௭. தொன்றாகமமுறை நின்றிருமந்திரஞ் சொல்லொடுங்கி
ஒன்றாகநீத்துயிர் நீங்குஞ்சரமத் துரைத்தவெளி
தன்றாகலாலுச் சரித்துவைத்தேன்பயின் றன்பொடின்றே
நன்றாகநாரா யணாநமோநாராய ணாயவென்றே.

(இ-ள்.) தொன்று ஆகமம் உரை நின் திருமந்திரம் - ஸநாதநமாயுள்ளதாகிய வேதார்த்தப் பிரதிபாதகமான தேவரீரது பெரிய திருமந்த்ரத்தை, சொல் ஒடுங்கி ஒன்று ஆகம்நீத்து உயிர்நீங்கும் சரமத்து - அடியேனது நாவானது குன்றி உயிர் தான்பற்றியிருக்கும் இத்தேகத்தைவிட்டு நீங்கிப் போகுஞ் சரமதசையில், உரைத்தல் எளிது அன்று - (நியமப்படி) உச்சரிப்பது சுலபமாயிராது, ஆகலால் - ஆகச்சே, பயின்று அன்பொடு இன்றே - பயிற்சிசெய்து ஆர்த்தியோடு "அப்போதைக் கிப்போதே" என்னுமாப்போலே இற்றைத்தினங்களிலேயே, நாராயண - சேதநாசேதநங்கட்காச்ரயமாயும் அவைகளையாச்ரயமாய்க்கொண்டுமுள்ள ஸ்வாமியே! நன்கு - ப்ரணவஸஹிதமாக உச்சரிக்குங் க்ரமப்படி, நமோநாராயணாய என்று - நமோநாராயணாய என்று, உச்சரித்து வைத்தேன் - அநுசந்தித்து (உயிர்த்துணையாகிய இத்தேட்டத்தை மனமாகியபெட்டகத்திற் சேமித்து) வைத்திருக்கின்றேன் (கண்டருள்க) (எ-று.)

பெறலருந் தேட்டமாகிய பெரிய திருமந்த்ராநுசந்தாநம், சரமதசையில் உயிர்த்துணையாவதற் கின்றியமையாக் கருவியாதலின் "வைத்தேன்" என்றதற்குச் சேமித்துவைத்தேன் எனப் பொருளுரைக்கப்பட்டது. "உச்சரித்துவைத்தேன்" என்றதற்குக்காரணம், எத்திருமந்த்ரத்தின் சீர்மைக்குப் போரும்படி ப்ரேமத்தோடே பேணி யநுசந்திக்கவேண்டியதோ அத்திருமந்த்ரவ்யாக்யாநகருளால் எல்லாம் இப்போழ்து ஸாதுகூடமாயிருத்தலினென்க. தொன்று, குறிப்பு மெய்ப்பாகுபெற்ற பண்புப்பெயர் (நான்) எழுவாய். உச்சரித்துவைத்தேன், பயனிலை. (திருமந்த்ரம்) செயப்படுபொருள். (கூ௪)

நேரிசைவெண்பா.

கூ௫. நாராயணாய நமவென் றனவரதம்
பாராயணஞ்செய்யும் பாவனருக்-காராய
வாரணமே தாய்ந்தொர்மக வையமற் றன்றுச்சரித்த
காரணமே சாலுங் கரி.

(இ-ள்.) நாராயணாய நம என்று - நாராயணா உனக்கு நமஸ்கரிக்கின்றேனென்று, அனவரதம் பாராயணஞ் செய்யும் பாவனருக்கு - எந்நாளும் நியமமாகப் பாராயணம்பண்ணும் பரமபாகவத சிரோமணிகளுக்கு, ஆராய ஆரணம் எது - தேடிப்பார்க்க வேறு வேதார்த்தமும் உண்டோ? ஆய்ந்து - இதைச் செவ்வையாக ஆராய்ந்து, ஓர் மகவு - ஒப்பற்ற ப்ரகலாதாழ்வானாகிய சிறுகுழந்தை, ஐயமற்று - சந்தேகவிபரீதமொழித்து, அன்று உச்சரித்த காரணமே - தன் றந்தையால் விபத்துகள் நேர்ந்த அக்காலத்தில் உச்சரித்தகாரணத்தால் கிடைத்த நித்யபாக்யமே, சாலும் கரி - போதுமான நிதரிசனமாகவிருக்கின்றது (எ-று.)

அநவரதம், பாராயணம், பாவநம், காரணம் இவைகள் பொதுவெழுத்தான் வந்த வடசொற்கள். எது வினாவடியாகப்பிறந்த குறிப்புப்பெயர். ஐயம் என்றவிடத்து, அதனினமாகியவிபரீதமும் கொள்ளப்பட்டது. காரணமே, இதில் ஏகாரம் தேற்றப்பொருட்டு; இது இதனாலாய காரியத்தைக்குறித்துநின்றது. ஆரணம், காரணம், எழுவாய். எது, கரி, பயனிலை. (கூ௫)

### வஞ்சி விருத்தம்.

௯௯. கரியவன்பணி யயனரக்
கரியவன்பணி யதுகிரிக்
கரியவன்பணி யிடையினற்
கரியவன்பணி புரிதிரே.

(இ-ள்) கரியவன்பணி - இந்திரன் வணங்கும்படியான, அயன் அரர்க்கு - ப்ரஹ்மருத்ரர்களுக்கு, அரியவன் - உணர்தற்கெட்டாதவன், பணியது கிரிக்கரியவன் - திருவநந்தாழ்வானவதாரமாகிய யாதவகிரிமேல் ஒருநீலரத்நம்நின்றிருந்தாலொத்த திருமேனியன், பணி இடையினற்கு - பீதாம்பரத்தை இடையில் தரித்திருப்பவன் (ஆகிய இத்யாதிவைபவமுள்ள திருநாராயண ஸ்வாமிக்கு) அரியவன்பணி புரிதிர் - அருமையான வலுத்த திருவடிக்கைங்கர்யத்தில் ஈடுபடுங்கள் (எ-று.)

கரியவன்பணி யதுகிரிக் கரியவன் எனக்கூட்டி, இந்திரன்பணிதற்கெளியன் எனப் பொருள்கொள்க. இவ்வமையம் திருநாராயணன் உபேந்திரனாகி இந்திரபட்டம் பொறுத்தகாலத்தினென்க. அயனரர், உம்மைத்தொகை பலவீறுபெற்றது. தேவதாந்தரங்களின்பணி இக்கைங்கர்யத்தைப்போல் முக்திசாதனமன்றாதலின் இதை "அரியவன்பணி" என்றாம். (மானிடர்காள் நீங்கள்) எழுவாய். புரிதிர், பயனிலை. பணி, செய்பபடுபொருள். (௯௯)

### கட்டளைக்கலித்துறை.

௧௦௦. திருநாரணபுரந் தங்கினைகீதையைத் தேர்த்தட்டினே
திருநாரணபுரந் தன்னிலிசைந்துந் தெரிந்தருளுந்
திருநாரணபுரந் தொண்டுறநாத்துதி செய்பமனந்
திருநாரணபுரந் தாட்கொளென்னைப்பூந் திருவடிக்கே.

(இ-ள்.) கீதையை - (சரமரஹஸ்யமடங்கிய) ஸ்ரீகீதையை, தேர்த்தட்டினே - (விஜயனேறிய செல்வமிக்க) தேரின்நாப்பண் (வீற்றிருந்தசாரத்யதிருக்கோலத்துடனே) திருநாரணபுரம்தன்னில் அசைந்துதெரிந்து அருளும் - அழகியநாவைப் பாரதரணமுகத்தில் அசைத்துத் திருவாய்மலர்ந்தருளும், திருநாரண - புருஷகாரபூதையாகிய பெரியபிராட்டியாரின் திவ்யசேர்த்தி என்றுமொன்று நீங்குதலில்லாத நாராயணரே, திருநாரணபுரம் தங்கினை - (சேதநகோடிகளினுஜ்ஜீவநார்த்தத்திற்கு இக்கலியுகவைகுண்டஸ்தலமாகிய) திருநாராயணபுரத்தில் பிரத்யக்ஷமாய் நித்யசேவை சாதிக்கின்றீர், (இங்ஙனமாகவெழுந்தருளியிருக்குந் தேவரீரது) பூந்திருவடிக்கே - வாசமனைக்குந் திருவடிகளுக்கே, புரம் தொண்டுற - (அடியேனது) தேகமானது கைங்கர்யம்பண்ணவும், நா துதி செப்ப - நாவானது கீர்த்தியைப் பாடவும், மனது இரு நார் அண்ண - மனமானது பேரன்புபொருந்தியிருக்கவும், என்னை புரந்து ஆட்கொள் - அடியேனைக்காத்து ஆளாக்கிக்கொண்டருளல்வேண்டும் (எ-று.)

"கீதையைத் தெரிந்தருளுந் திருநாரண திருநாரணபுரந்தங்கினை" என்பதால் ஸ்ரீகீதையில் சரம சுலோகத்தில் எம்பெருமான் திருவுள்ளமிரங்கியருளிய சரமோபாயத்தைக் கைக்கொள்ளாது, கலியால்விடப்படுஞ் சேதநகோடிகளினுஜ்ஜீவநார்த்தமாய்ப் பெரியபிராட்டியாரின் புருஷகாரம் பிறங்கத், திருநாராயணபுரத்திற் பிரத்யக்ஷமாய்

நித்யசேவை சாதிக்க நின்றான் என்றதாயிற்று. இங்ஙனமாய் அடியார்க்கெளியானாய் நின்று கடாக்ஷிக்கும் சௌலப்ய விசேஷத்தை யவலம்பித்து "சர்வதர்மங்களையும் பரித்யாஜ்யஞ்செய்துபோகட்டு என்னொருவனுடைய திருவடியையே பற்று, உன்னை சகலபாபங்களினின்றும் விடுவிக்கிறேன்" என எம்பெருமான் திருவாய் மலர்ந்துள்ள உபாயத்தின்படி அவன் திருவடிகளையே உபாயோபேயமாகக்கொண்டு திரிகரணங்களாலு மிதுகாறுமிழைத்தசர்வபாபங்களினின்றும் விடுதலையாகி அக்கரணங்கள் இனி எம்பெருமானுக்கு முகோல்லாசமான அவனது குணநுபவ கைங்கர்யங்களிலேயே ஈடுபட்டுநிற்க, அவன் திருவடிகளுக்கே ஆளாகிப் பலாபேக்ஷிதமின்றிச் சரணாகதி பண்ணுங் கிடைசித்தமுண்டாக அவனேகடாக்ஷித்தருள வேண்டுமாதலின் "புறந்தொண்டிற, நாத்துதிசெப்ப, மனதிருநாரண, புரந்தாட்கொள் என்னைப்பூந்திருவடிக்கே" என்று கடைப்பிடி ப்ரார்த்தனை இவ்விறுதிக்கவியிற் செய்துகொள்ளப்பட்டது.

ஸ்வரூபோபாயபுருஷார்த்தயாதாத்ம்ய பிரதிபாதகமான ரஹஸ்யத்ரயத்தில், எம்பெருமான் பெரிய திருமந்த்ரத்தை ஸ்ரீபதரிகாச்ரமத்திலே ஸ்வாம்சபூதனான நரன்விஷயமாக ப்ரகாசிப்பித்தது முதற்கவியில் "இனியகுருவுருதரித்துத் திருவதரியாச்ரம சேவை தந்தநாரணனே" என்றதனாலும், இத்திருமந்த்ரத்துக்கு விவரணமான த்வயமந்த்ரத்தை ஸ்ரீவிஷ்ணுலோகத்திலேஸ்வமஹிஷியான பெரியபிராட்டி விஷயமாக ப்ரகாசிப்பித்தது, ஐம்பத்தேழாவதுகவியில் "வைகுந்தத்து" "அரவிந்தவமளியுறைதருமடந்தை யுவப்பொடு கொளவாங்குரைத்தரு டிருத்துவயத்துக்கத்த" என்றதனாலும், இத்த்வயமந்த்ரத்துக்கு விவரணமான சரமச்லோகத்தைப் பாரதரணரங்கத்தில் "கையும் உழவுகோலும், பிடித்த ஸ்வேதவாம்புரவிகளின் சிறுவாய்க்கயிறும், ஸேநாதூளிதூஸரிதமான திருக்குழலும், தேருக்குக்கீழேநாற்றின சிறுசதங்கைசாத்தின திருவடிகளுமாய்" திருத்தேர்த்தட்டின்கண்ணிருந்த ஸாரத்ய வேஷத்தோடு ஸ்வாச்ரிதனான அர்ஜுநன் விஷயமாகப்ரகாசிப்பித்தது இவ்விறுதிக்கவியில் "கீதையைத்தேர்த்தட்டினே தெரித்தருளுந் திருநாரண" என்றதனாலும் குறித்தமை காண்க.

தங்கினை, இது ஐகாரவிற்றுவினைமுற்றாதலின் வருமொழிவலியியல்பாயது, கீதை என்னும் வருமொழி வடசொன்முன் "வடசொலினியம்பிய கொளாதவும்" என்றதனால் இயல்பாயதெனினுமாம். ப்ரம்ஹாதிதேவர்களுந்தேடிக் காணொணாத்திருமேனியை எம்பெருமான் தானீற்றிருந்த திருத்தேர்த்தட்டின் கண்ணேயே "மாம்" என்று அர்ஜுநனுக்குச் சுட்டிக்காட்டித் தன்றிருவடிகளைப் பற்றத்தெளிவித்தமையின், தேர்த்தட்டினே என்றதின் ஏகாரம், தேற்றம். உற, செப்ப, அண்ண இச்செயவெனெச்சங்கள் காரியப்பொருளன. அணபுரந்து, இதில் ணகர பகரங்கள் விகாரத்தாற்றொக்கன. பூந்திருவடிக்கே என்றதில், பூப்பெயர்முன் இனமென்மைதோன்றியது. எம்பெருமான் எத்திருவடிகளைப்பற்று என்றுரைத்தருளினனோ அத்திருவடிக்கே ஆளாக்கியருளல் வேண்டுமெனப் பிரார்த்திக்கின்றமையின், ஏகாரம் பிரிநிலைப் பொருட்டு. திருநாரண (நீ) எழுவாய். ஆட்கொள், பயனிலை. என்னை, செயப்படுபொருள். (௧௦௦)



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨ | ௧௩ | சுதர்ஸனம் | சுதர்சநம் |
| ௭ | ௭ | கொமுநி | கோமுநி |
| ௯ | ௫ | சாதித்தீர் | சாதிக்கின்றீர் |
| ௧௧ | ௧௩ | ஸ்வேத | சுவேத |
| ௧௩ | ௨௬ | நவிக்க | நசிக்க |
| ௧௪ | ௧௩ | அஸ்ஙக் | அஸங்க் |
| ௧௬ | ௨௯ | பதரிகாஸ்ரம | பதரிகாச்ரம |
| ,, | ௩௨ | ஸிரோஷ்டராஸிய | ஸிரேஷ்டராகிய |
| ,, | ,, | பாகவதாக்ரோசர் | பாகவதாக்ரேசரர் |
| ,, | ௩௩ | பணிவிடைகளைக் | பணிவிடைகளைச் |
| ௧௯ | ௨௭ | ஜாயிமான | ஜாயமான |
| ௨௦ | ௨௬ | அசை | சாரியை |
| ௨௩ | ௨௯ | அசுகம் | ஆசுகம் |
| ௨௪ | ௧ | அருஜ்ஜுனன் | அர்ஜுநன் |
| ,, | ௨ | ஸ்வேத | சுவேத |
| ,, | ௧௦ | சூரனை | சுரனை |
| ,, | ௩௨ | ஸீல | சீல |
| ௨௫ | ௨௭ | ஸ்லாக்யதை | சிலாக்யதை |
| ௨௯ | ௩௦ | முடிவு | முடி |
| ௩௦ | ௭ | ஸ்ரோஷ்ட | சிரேஷ்ட |
| ௩௧ | ௪ | எய்த் | எய்த் |
| ௩௬ | ௨ | மதிப்பிட்டு | மதிப்பிட்டும் |
| ௩௯ | ௧௨ | சாரியை | அசை |
| ,, | ௩௧ | அசை | சாரியை |
| ௪௭ | ௨ | யேறும் | யேறம் |
| ,, | ௧௯ | செய்து | செய்பு |
| ௪௮ | ௧௭ | மூருவப் | மூருவம் |
| ௫௩ | ௨௭ | சந்ததஞ் | சந்தஞ் |
| ௫௪ | ௮ | எழூர் | எழுசீர் |
| ௬௦ | ௧ | சம்ம | சம்ப |
| ௬௩ | ௨௫ | வங்ச | வங்க |
| ௯௭ | ௨௭ | ஸௌந்ய | சூந்ய |
| ௮௦ | ௧௦ | கர்மா | க்ரியா |
| ௮௨ | ௧௨ | நாராயணணார் | நாராயணனார் |
| ௮௬ | ௭ | கோஷ்டி | கோஷி |
| ,, | ௨௧, ௨௨ | சம்ம | சம்ப |
| ௯௫ | ௩௬ | சரமோப | சரமோபா |